நா………………………

# நாளுக்கு நாள் அதிக தெளிவான, எழிலோங்கும் சருமம்

ரெக்ஸோனுவிலுள்ள **கேடில்*** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்

ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் நன்றாகத்தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும், தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.




## ரெக்ஸோனு

### கேடில் கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

R.P. 100-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 12 இதழ் 29 | 1953 பிப்ரவரி 15 | நந்தன ௵ மாசி ௴ 4உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

பிப்ரவரி 12உ முதல்




ஸ்ரீ கஜானனவின்

# மாமியார்

தமிழ்

தமிழ் நாடெங்கும் இரண்டாவது வாரமாக
வெற்றியுடன் ஓடிக்கொண்டிருக்கிறது !










மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார். | இதழ் 29

# ஐஸன்ஹோவரின் அவசரக் கோலம்

சீனக் குடியரசின் தலைவரான மாஸே துங் மகா வல்லமையுள்ள அமெரிக்காவுக்குச் சவால் விடுத்திருக்கிறார்.

அமெரிக்காவின் ஆக்கிரமிப்பைத் தகர்க்கச் சீனா உறுதி கொண்டிருக்கிறது என்று சீனா பிரதம மந்திரி சௌ என் லாய் பிரகடனம் செய்துள்ளார்.

கொரியா யுத்தத்தை விஸ்தரிப்பதற்காகச் சூழ்ச்சி செய்யும் அமெரிக்கர்களை எதிர்த்து நின்று சீனத் துருப்புகள் வெற்றிபெற முடியும் என்று சீனத் தளபதி சூ டே முழங்கி யிருக்கிறார்.

அமெரிக்க ஜனாதிபதி ஜெனரல் ஐஸன்ஹோவர் சில தினங்களுக்கு முன் பிறப்பித்த உத்தரவு அவ்விதம் சீனாவில் கண்டன மாரியை உண்டாக்கி யிருக்கிறது.

சீனாவில் மட்டும் என்ன, அமெரிக்காவின் நேச தேசங்களில்கூட அமெரிக்க ஜனாதிபதியின் உத்தரவு அதிருப்தியையும் அச்சத்தையும் உண்டாக்கி யிருக்கிறது.

"ஜெனரல் ஐஸன்ஹோவரின் திட்டம் பிரிட்டனுக்குக் கலக்கத்தை கொடுத்திருக்கிறது; பிரிட்டன் அதை ஆதரிக்கவில்லை" என்று பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ அந்தோனி ஈடன் பார்லிமெண்டில் பகிரங்கமாக அறிவித்தார்.

ஐஸன்ஹோவரின் திட்டத்தைக் கண்டித்துத் தொழிற் கட்சிப் பிரமுகர் ஸ்ரீ பெவான் போட்ட போடுக்குப் பதில் கூறமுடியாமல் பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் திக்கு முக்காடிப் போனார்.

பெரும்பாலான பிரச்னைகளிலும் அமெரிக்காவின் அடிச்சுவடுகளைப் பின்பற்றும் பிரிட்டனின் நிலைமையே இப்படி எனில், மற்ற நாடுகளைப் பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை.

ஜெனரல் ஐஸன்ஹோவர் ஜனாதிபதி பதவிக்கு வந்து முழுசாக ஒரு மாதம்கூட ஆகவில்லை. அதற்குள் அவர் உலக இராஜ தந்திரிகளைக் கலங்க வைக்கும் நடவடிக்கையைக் கைக்கொள்ள முனைந்து விட்டார்.

எந்தக் காரியத்தை அமெரிக்கத் தளபதிகள் செய்யாமல் தடுக்க மாஜி ஜனாதிபதி ட்ரூமன் பெரு முயற்சி செய்து வந்தாரோ, அந்தக் காரியத்தைத் துணிந்து செய்ய ஐஸன்ஹோவர் முன் வந்து விட்டார்.

எந்த நடவடிக்கையை ஜெனரல் மெக் ஆர்தர் எடுக்காமல் தடுப்பதற்காக அவரை ட்ரூமன் பதவியிலிருந்து விலக்கினாரோ, அந்த நடவடிக்கையை அமெரிக்காவின் புதிய ஜனாதிபதி தமது முதல் கடமையாகக் கொண்டு விட்டார்.

அதாவது கொரியா யுத்தம் சம்பந்தப்பட்ட வரையில் இரண்டாவது போர்முனை ஆரம்பமாவதற்கு ஐஸன்ஹோவர் அங்குரார்ப்பணம் செய்திருக்கிறார். கொரியாப் போர் மற்ற இடங்களுக்கும் பரவுவதற்கு அடிகோலி யிருக்கிறார்.

* * * *

இரண்டு ஆண்டுகளுக்கு முன் கொரியா யுத்தம் மூண்டபோது, அப்போது அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்த ட்ரூமன் ஒரு முக்கியமான காரியத்தைச் செய்தார். பார்மோசாத் தீவுக்கும் சீனாவுக்கும் மத்தியில் உள்ள ஜலசந்திக்கு அமெரிக்கக் கடற்படையை அனுப்பி வைத்தார்.

சீனாவில் கம்யூனிஸ்ட் சர்க்காரின் கை ஓங்கிச் சியாங்கை ஷேக்கின் தேசீய சர்க்கார் படுதோல்வி யடைந்த பின்னர், சியாங்கை ஷேக் எஞ்சியிருந்த தம் படைகளுடன் பார்மோசாத் தீவுக்கு வந்து சேர்ந்தார்.

பார்மோசாத் தீவில் உள்ள சியாங்கை ஷேக்கின் படைகள் கம்யூனிஸ்ட் சீனாவைத் தாக்காமலும், சீனக் குடியரசுப் படைகள் பார்மோசாமீது படையெடுக்காமலும் காவல் புரிவதே அமெரிக்கக் கடற்படையின் வேலை என்று கட்டளையிட்டார்.

கொரியாவுக்கு அப்பால் யுத்தம் பரவி விடாமல் தடுக்கும் நோக்கம் கொண்டே ட்ரூமன் அவ்விதம் கண்டிப்பாக உத்தரவிட்டார்.

அவ்வாறு செய்தது புத்திசாலித்தனமான காரியம் என்று ஸ்ரீ சர்ச்சில் கூடப் பாராட்டினர்.

ஆனல், மேற்படி தடையை இப்போது ஜெனரல் ஐஸன்ஹோவர் ரத்து செய்து விட்டார். எனவே, இனி சியாங்கை ஷேக்கின் படைகள் தங்கள் இஷ்டப்படி சீனவைத் தாக்கலாம். அத்துருப்புகள் சீனவைத் தாக்கும் பட்சத்தில் சீனக் குடியரசுப் படைகள் கையைக் கட்டிக்கொண்டு இருக்கப் போவதில்லை என்பது நிச்சயம். அந்தப் படைகள் பார்மோஸாவைத் தாக்கக் கூடும்.

சியாங்கை ஷேக் படைகளுக்கு அமெரிக்கா உதவி அளிக்குமாயின் அது சீனவின் உள்நாட்டுப் போராக மட்டும் இராது; உலக மகா யுத்தமாகவும் மாறிவிடக் கூடும்.

சீனக் குடியரசு சர்க்காரைப் பிரிட்டன் உள்படப் பல நாடுகள் அங்கீகரித்திருக்கின்றன. ஆனல் அமெரிக்கா மேற்படி சர்க்காரை அங்கீகரிக்காததே, உலக சமாதானத்துக்குப் பெரும் முட்டுக்கட்டையாக இருக்கிறது என்று இந்தியப் பிரதிநிதிகள் ஐக்கிய நாடுகள் சபையில் இடைவிடாமல் கூறி வருகின்றனர். மற்றும் பல தேசங்களின் பிரதிநிதிகளும் அந்தக் கருத்தை வற்புறுத்தி வருகின்றனர்.

அமெரிக்க ஜனதிபதி ஐஸன்ஹோவரோவெனில், உலக அபிப்பிராயத்தையே புறக்கணித்து, மேலே ஒரு படி சென்றிருக்கிறர்.

ஐஸன்ஹோவரின் கட்சியான அமெரிக்கக் குடியரசுக் கட்சியில் மகத்தான செல்வாக்குள்ள செனேட்டர் ராபர்ட் டாப்ட் புதிய ஜனதிபதியின் கூற்றுக்குப் பட்டவர்த்தனமாகப் பொருள் கூறி விளக்கி யிருக்கிறர்.

"அமெரிக்கா இப்போது கம்யூனிஸ்டு சீனமீது யுத்தப் பிரகடனம் செய்திருக்கிறது. மஞ்சூரியாவில் உள்ள சீனத்தளங்களை நாம் பல மாதங்களுக்கு முன்பே தகர்த்திருக்க வேண்டும்" என்று டாப்ட் கூறியிருக்கிறர்.

எனவே அமெரிக்க சர்க்கார் யந்திரத்தை இயக்கும் குடியரசுக் கட்சி எந்தப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது என்பது டாப்டின் பேச்சிலிருந்து தெரிகிறது.

* * *

சியாங்கை ஷேக்கின் வரலாறு யானை தேய்ந்து பூனை ஆகிவிட்ட கதையாகும்.

நாற்பத்தைந்து லட்சம் சதுர மைல் பரப்புள்ள சீனவில் சியாங்கை ஷேக் ஒவ்வோர் ஊராகப் போர் செய்தார்; கடைசியில் படுதோல்வியுற்றுக் கடல் கடந்து ஓடினர்; பதினயிரம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ள பார்மோசாத் தீவில் அடைக்கலம் புகுந்தார். எனவே, அவர்மூலம் அமெரிக்கா சீனக் குடியரசு சர்க்காரை எதிர்ப்பதும் கவிழ்ப்பதும் எவ்வளவு தூரம் சாத்தியம் என்று யாரும் சொல்ல முடியாது.

ஏற்கெனவே ஜெர்மனி விவகாரம் புகைந்து கொண்டிருக்கிறது. மத்தியகேந்திரப் பிரதேசங்களிலோ நிலைமை குமுறிக் கொண்டிருக்கிறது. இந்தோ—சீன, மலேயா நாடுகளில் ஏற்பட்ட கொந்தளிப்பு இன்னும் அடங்கிய பாடில்லை.

இந்நிலைமையில் ஐஸன்ஹோவரின் அவசரக் கோலம் பல புதிய பிரச்னைகளைச் சிருஷ்டிப்பதாக இருக்கிறது. உலக சமாதானத்துக்குப் பங்கம் விளையுமோ என்று கவலைப்பட வேண்டிய நிலைமையை உண்டுபண்ணி யிருக்கிறது.

## புதிய பீரங்கி வெடி!




பார்மோஸாத் தீவில் சரண் புகுந்திருக்கும் பழைய சீன அரசாங்கத் தலைவரான சியாங்கே ஷேக்குக்கு அமெரிக்க சர்க்கார் உதவி அளிக்கத் தீர்மானித்திருக்கிறர்கள்.

# அது யார் அப்பா, லங்கா சுந்தரம்?

சில வருஷங்களுக்கு முன்னால் புது டில்லியில் ஒரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அக் கூட்டத்தில் "ஸ்ரீ லங்கா சுந்தரம் பிரசங்கம் செய்வார்" என்று அறிவிக்கப் பட்டிருந்தது. குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் இரண்டு பேர் பிரசங்கமா யிருந்தார்கள். ஒருவர் இன்னொருவரைப் பார்த்து, "என், ஸார்! உங்களுக்குத் தெரியுமோ! இவர் யார் இந்த லங்கா சுந்தரம் என்பவர்! பிரசங்கம் செய்யப் போகிறாராமே, பிரசங்கம்!" என்று கேட்டார். அதற்கு இன்னொருவர், "நான்தான் அந்த இலங்கா சுந்தரம்! பிரசங்கத்தை ஆரம்பிக்கலாமா!" என்றார். முதலில் கேள்வி கேட்டவர் உடனே அங்கிருந்து ஓட்டம் பிடித்தார்!

அப்பேர்ப்பட்ட ஸ்ரீ லங்கா சுந்தரம் பிற்பாடு பெரிய பிரமுகராகி விட்டார். அகில இந்திய பாஷாவாரி மாகாணப் பிரிவினை மகாசபைக்குத் தலைவராகிப் பெரிய மனிதராகி விட்டார். சென்ற பொதுத் தேர்தலில் ஆந்திர நாட்டில் காங்கிரஸை எதிர்த்து யார் நின்றாலும் வெற்றி பெறலாம் என்று ஏற்பட்டிருந்த நிலைமையில் தேர்தலுக்கு நின்று பார்லிமெண்டு அங்கத்தினர் ஆனார்.

சென்ற வாரத்தில் மேற்படி ஸ்ரீ லங்கா சுந்தரம் எம். பி. என்ன திருவாய் மலர்ந்தருளி யிருக்கிறார் தெரியுமா!

"சென்னை நகரைச் சுதந்திரத் தனி சர்க்காருள்ள நகரமாக்க வேண்டும். அப்போதுதான் இரத்த வெள்ளம் பெருகாமல் தடுக்க முடியும்!" என்றார்.

இதன் கருத்து என்ன!

"சென்னை நகரைச் சுதந்திரத் தனி நகர மாக்கா விட்டால் ஆந்திரர்களாகிய நாங்கள் இரத்த வெள்ளம் பெருகச் செய்வோம்!" என்று பயமுறுத்துவதே யாகுமல்லவா!

இப்படிப்பட்ட இரத்த வெறி கொண்ட இலங்கா சுந்தரர்களிடமிருந்து ஆந்திர தேசத்தைக் கடவுள் காப்பாற்றுவாராக!

திரேதா யுகத்திலிருந்த இலங்கா சுந்தரனாகிய தசகண்ட இராவணனும் ஏறக்குறைய இப்படித்தான் சொன்னான் அல்லவா! "சீதையை விட்டு விட்டுப் போங்கள்! இல்லாவிட்டால் இரத்த வெள்ளம் பெருகும்!" என்று இராம லக்ஷ்மணர்களுக்கு எச்சரித்தானல்லவா!

அந்தத் திரேதா யுகத்து இலங்கா சுந்தரனைப் போலத்தான் இந்தக் கலியுகத்து இலங்கா சுந்தரரும் பேசி யிருக்கிறார்; பயமுறுத்தியி ருக்கிறார்.

இந்த நிலைமையில், நமது தமிழ் நாட்டுத் தலைவர்கள் சிலர் நமக்குச் சாத்வீக தர்மத்தையும் அன்பு நெறியையும் போதித்து வருகிறார்கள். "பொது ஜனங்கள் சாவதானமாக இருங்கள். தலைவர்களாகிய நாங்கள் எல்லாப் பிரச்னைகளையும் தீர்த்து வைக்கிறோம்!" என்கிறார்கள்.

இலங்கா சுந்தரம் போன்றவர்களின் இரத்த வெள்ள வெறிக்கு நம் தமிழ் நாட்டுத் தலைவர்கள் என்ன மாற்று மருந்து வைத்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள விரும்புகிறோம். விஜயவாடாவில் நடந்த சம்பவங்களை நம் தமிழ் நாட்டுத் தலைவர்களால் தடுக்க முடிந்ததா! முடியவில்லையென்றால், இலங்கா சுந்தரம் போன்றவர்களை அஹிம்சா மார்க்கத்துக்குத் திருப்ப முடியும் என்பது மட்டும் என்ன நிச்சயம்! சாதுக்களான தமிழ் மக்களிடையே மட்டும் "சாந்தமா யிருங்கள்!" என்று பிரசாரம் செய்வதில் அர்த்தம் என்ன!

# பொட்டி ஸ்ரீராமுலு கண்ணீர் வடிக்க மாட்டாரா?

நீதிபதி வாஞ்சு தமது விசாரணையை முடித்துக்கொண்டு திரும்பிப் போய் விட்டார். அவருடைய அறிக்கையை இந்திய சர்க்காரிடமும் சமர்ப்பித்து விட்டார். ஆனால் அறிக்கையைப் பற்றிய விவரங்கள் இன்று வரையில் (10-2-53 வரையில்) வெளியாகவில்லை.

அந்த அறிக்கையைக்குறித்து இரண்டு வதந்திகள் மட்டும் வெளியாகி யிருக்கின்றன.

"புதிய ஆந்திர ராஜ்யத்தின் வரவு செலவைச் சரிக்கட்டுவது சிரமமா யிருக்கும்; அதைச் சரிக்கட்டுவதற்காக மதுவிலக்கை ரத்து செய்து விடலாம்" என்று நீதிபதி வாஞ்சு சிபார்சு செய்திருப்பதாகத் தெரிகிறது.

மகாத்மாவின் அந்தரங்க சீடர்களில் ஒருவரான பொட்டி ஸ்ரீராமுலு ஆந்திர ராஜ்யத்துக்காகப் பட்டினி யிருந்து பிராணனை விட்டார். அவருடைய ஆன்மா, நீதிபதி வாஞ்சுவின் யோசனையைக் கேட்டுக் கண்ணீர் பெருக்கியே தீரும் அல்லவா!

'புதிய ஆந்திர ராஜ்யம் மதுவிலக்கை ரத்து செய்வதுடன் ஆரம்பமாகிறது. ஆந்திர மக்கள் அனைவருக்கும் குடிக்கும் உரிமையை அளிக்கிறது' என்பது பொட்டி ஸ்ரீராமுலுவின் ஆத்மாவுக்கு எவ்வளவு ஆனந்தத்தை அளிக்கும்! காந்தி மகானுடைய ஆத்மாவுக்குத்தான் எவ்வளவு திருப்தியை அளிக்கும் என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா!

"ஆந்திர ராஜ்யத்தின் தலைநகர் சம்பந்தமாக ஆந்திரர்களுக்குள் ஒற்றுமையான அபிப்பிராயம் இல்லை. ஆகையால் தற்போதைக்குச் சென்னையே ஆந்திரத் தலைநகராக இருக்க வேண்டும்" என்றும் நீதிபதி வாஞ்சு சிபார்சு செய்திருக்கிறாராம்.

இது உண்மையாயிராது என்று நம்புகிறோம். அப்படி ஒரு வேளை உண்மையா யிருந்து, இந்திய சர்க்காரும் அச் சிபார்சை ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில், ஒரே நகரத்தில் இரண்டு ராஜ்யங்களின் தலைமை ஸ்தலங்கள் இருப்பதால் ஏற்படக் கூடிய தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்கு நீதிபதி வாஞ்சுவை இந்திய சர்க்கார் நிரந்தரமாகச் சென்னைக்கு அனுப்பி வைக்க வேண்டியதாகும்.

அதுகூடப் போதாது. பெரிய ஒரு இராணுவத்தையும் அனுப்பி வைக்க வேண்டும். இல்லாவிடில் ஸ்ரீ லங்கா சுந்தரம் போன்றவர்களின் இரத்த வெறியைக் கட்டுக்குள் வைப்பது எப்படி!

தலைநகர் சம்பந்தமாக ஆந்திரர்களுக்குள் ஒற்றுமை ஏற்படவில்லையென்றால், அத்தகைய ஒற்றுமை ஏற்படும் வரையில் "ஆந்திர மாகாணம் கிடையாது" என்று சொல்வதுதான் முறை.

சென்னை நகரில் தற்காலிகமாக ஆந்திர சர்க்கார் இருப்பதற்கு இடம் கொடுத்தால், ஆந்திரர்கள் ஒரு நாளும் வேறொரு தலைநகரம் சம்பந்தமாக ஒற்றுமைப்பட மாட்டார்கள்.

சென்னையில் தங்களுடைய பாத்தியதையை நிலைநாட்டிக் கொள்வதற்காகப் புதிய தலைநகர் பற்றி எப்போதும் அவர்கள் சண்டை போட்டுக் கொண்டுதா னிருப்பார்கள்.

இப்போதுகூட அந்த நோக்கத்துடனே தான் அவர்கள் தலைநகர் சம்பந்தமாக ஒற்றுமைப்படவில்லையென்று தோன்றுகிறது.

ஆந்திரத் தலைவர்கள் விரித்த வலையில் நீதிபதி வாஞ்சு விழுந்திருந்தால், அது மிகவும் வருந்தப்பட வேண்டிய காரியமாகும். அதன் காரணமாகப் பின்னால் பல பிரச்னைகள் எழுந்து தென்னிந்திய மக்களின் அமைதியான வாழ்க்கையையே அது சின்னபின்ன மாக்கிவிடும்.

பொதுமக்களைச் சாவதானமாக இருக்கும்படி உபதேசிக்கும் தமிழ் நாட்டுத் தலைவர்கள் இந்தச் சிபார்சு சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார்கள்!

# தலைவர்களை நம்பி விட்டு விடலாமா?

“எல்லாம் தலைவர்கள் பார்த்துக் கொள்வார்கள். பொதுமக்கள் சும்மா யிருந்தால் போதும்” என்று உபதேசிக்கிறார்களே! அவர்களை நம்பித் தமிழ் நாட்டின் எல்லையை நிர்ணயிக்கும் பிரச்னையை விட்டு விடலாமா!

விட்டு விடலாம்; ஆனால் நம் தலைவர்கள் இப்போது நம்மை விட்டு விட்டுப் பின்னால் வாலைப் பிடித்துக்கொண்டு அவஸ்தைப்படவும் கூடும்.

திருப்பதியையும் திருத்தணியையும் தமிழ் ராஜ்யத்தில் சேர்ப்பதற்குத் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர்கள் என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறார்கள் என்று தெரியவில்லை.

திருப்பதி தொன்று தொட்டுத் தமிழகத்தின் வடக்கு எல்லை என்பது பிரசித்தமானது. பண்டைத் தமிழ் இலக்கியங்களும் கல்வெட்டு சாஸனங்களும் அதற்கு அத்தாட்சி கூறுகின்றன.

திருத்தணி முதலிய பகுதிகள் முப்பது வருஷங்களுக்கு முன்னால் வரையில் வடாற்காடு ஜில்லாவைச் சேர்ந்திருந்தன. பிற்பாடுதான் நிர்வாக சௌகரியத்துக்காகச் சித்தூர் ஜில்லாவில் சேர்க்கப்பட்டன. அவற்றை ஆந்திர ராஜ்யத்தில் சேர்ப்பதற்கு நியாயம் எதுவும் இல்லை.

ஆனால் இது விஷயங்களைப் பற்றித் தமிழ்க் காங்கிரஸ் தலைவர்கள் வற்புறுத்திப் போராடுவார்களா என்பது சந்தேகத்துக்கு இடமானது.

ஸ்ரீ சஞ்சீவி ரெட்டியார், “சென்னை நகரப் பிரச்னை ஒன்றைத் தவிர மற்றப்படி தமிழ்க் காங்கிரஸ் தலைவர்களுக்கும் எங்களுக்கும் அபிப்பிராய பேதமே இல்லை” என்று சொல்லியிருப்பது நமது சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்கிறது.

ஏழு வருஷங்களுக்கு முன்பு “பட்டணம் பறி போகிறது” என்ற தலைப்புடன் நாம் எழுதிய தலையங்கத்தை நேயர்களுக்கு ஞாபகப்படுத்துகிறோம். அப்போது வட சென்னைக்கு ஆந்திர கனவான் ஒருவரை அபேட்சகராக நிறுத்தத் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர்கள் ஒப்புக் கொண்டார்கள். இதிலிருந்து பின்னால் “வட சென்னை ஆந்திர ராஜ்யத்தைச் சேர்ந்தது” என்று வற்புறுத்த ஆதாரம் ஏற்படும் என்று நாம் அச்சமயம் எடுத்துக் காட்டினோம்.

இந்தப் பொதுத் தேர்தலின் போதும் அதே தவறைச் செய்ய நம் மாகாண காங்கிரஸ் தலைவர்கள் முன் வந்தார்கள். வடசென்னைக்கு ஆந்திரர் ஒருவரை அபேட்சகராக நிறுத்தினார்கள். நல்ல வேளையாகத் தேர்தல் அதிகாரி அவருடைய அபேட்சை பத்திரத்தை நிராகரித்து விட்டார். பிறகுதான் தமிழரான ஸ்ரீ ராதாகிருஷ்ண பிள்ளையை அபேட்சகராக நியமித்தார்கள்.

இதையெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது, தமிழ் நாட்டின் எல்லைப் பிரச்னையைக் காங்கிரஸ் தலைவர்களிடம் மட்டும் விட்டு வைப்பது உசிதமா என்ற ஐயம் உண்டாகிறது.

மற்ற எல்லாக் கட்சிக்காரர்களும் பொது மக்கள் அனைவரும் ஊக்கம் எடுத்துக் கொண்டால் தான் தமிழ் நாட்டின் தொன்று தொட்ட இயற்கையான எல்லையைக் காப்பாற்ற முடியும்.

# இரு பெரும் நிகழ்ச்சிகள்!

தமிழ் நாட்டின் எல்லைப் பாதுகாப்பு சம்பந்தமான இருபெரும் நிகழ்ச்சிகள் சென்ற இரு வாரங்களுக்குள் சென்னையில் நடைபெற்றன.

ஒன்று, தமிழரசுக் கழகத்தார் நடத்திய மாநில மாநாடு.

தமிழரசுக் கழகம் ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் தோன்றிய நாளிலிருந்து தமிழ்நாட்டின் எல்லைப் பாதுகாப்பில் தீவிர கவனம் செலுத்தி வருகிறது. இராஜ்யங்கள் பிரியும் கட்டம் நெருங்கியிருக்கும் இச்சமயத்தில் அக் கழகத்தாரும் கழகத் தலைவர் ஸ்ரீ கிராமணியாரும் விழிப்புடனிருந்து பணியாற்றி வருவது இயற்கையேயாகும். கழகத்தின் மாநில மகாநாட்டில் குமரி முனையிலிருந்து திருவேங்கடம் வரையில் தமிழ் இராஜ்யத்தில் சேர வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. ஆந்திர ராஜ்யம் பிரிந்த பிறகு மிச்சமுள்ள சென்னை இராஜ்யப் பகுதிக்குத் தமிழ் இராஜ்யம் எனப் பெயர் தரவேண்டும் என்றும் வற்புறுத்தப்பட்டது. வெளியூர்களிலிருந்து நூற்றுக் கணக்கான பிரதிநிதிகள் வந்து கலந்து கொண்ட இந்தத் தமிழரசு மாநில மகாநாடு, சென்னை நகர மக்களிடையே பெருமிதமான உற்சாகத்தை உண்டு பண்ணி யிருந்தது.

தமிழரசுக் கழகம் தோன்றிய நாளிலிருந்து அக் கழகத்தார் காங்கிரஸ் மகாசபையின் துணை ஸ்தாபனமாகவே கருதிப் பணியாற்றி வந்திருக்கிறார்கள். சென்ற பொதுத் தேர்தலின் போது இக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் செய்த அரும் பெரும் பணிகள் தமிழகம் நன்கு அறிந்தவை. காங்கிரஸின் எதிரிகள் கையாண்ட அநாச்சாரப் பிரசார முறைகளைத் தகர்த்தெறிந்து காங்கிரஸுக்காகப் போராடி வந்தார்கள்.

அப்படிப்பட்ட தொண்டு செய்து வந்தவர்களுக்குத் தமிழகத்தில் ஓரளவு செல்வாக்கு உண்டாகி வருவது சிலருக்குப் பொறுக்கவில்லை. அதனால் அக் கழகத்துக்கு ஏதேனும் ஒருவகையில் கெட்ட பெயர் சூட்டி அதைத் தொலைத்துவிட முயற்சி தொடங்கி யிருக்கிறார்கள். தமிழரசுக் கழகத்தின்

இலட்சியம் 'சுதந்திரத் தமிழ்க் குடியரசு' என்று ஆறு ஆண்டுகளுக்கு முன் சொல்லப்பட்டதை இப்போது கிளப்பி விட்டுக் கொண்டு, "ஆகா! இவர்கள் பாரத நாட்டைத் துண்டாட விரும்புகிறவர்கள்!" என்று குற்றம் சாட்டுகிறார்கள். உண்மை என்னவென்றால், தமிழரசுக் கழகம் ஏற்பட்ட காலத்தில் இந்தியா சுதந்திரம் அடைந்திருக்கவில்லை; பிரிட்டிஷ் ஆட்சியின் கீழேயே இருந்தது. ஆகையால் 'பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து விடுபட்ட சுதந்திரத் தமிழ்க் குடியரசு' இலட்சியம் வகுக்கப்பட்டது. "சுதந்திர இந்தியாவிலிருந்து பிரிந்த சுதந்திரத் தமிழ்க் குடியரசை நாங்கள் கோரவில்லை" என்று தமிழரசுக் கழகத்தினர் பல முறை சொல்லியிருந்த போதிலும், பழைய பல்லவியை மீண்டும் மீண்டும் பாடி வருகிறார்கள் அக்கழகத்தை விரும்பாத பிரமுகர்கள்.

தமிழரசுக் கழகம் தற்கால நிலைமையை யொட்டி அதன் இலட்சியத்தை எதிரிகளும் திரித்துக் கூற இயலாதபடி தெளிவாக அமைத்துக் கொள்ளுமென்று நம்புகிறோம்.

அருமையான தொண்டு செய்து வரும் தமிழரசுக் கழகத்தை அமுக்க வழி தேடாமல், அக்கழகம் செய்த பணிகளைப் பாராட்டி மேலும் ஊக்க மளிக்கும் முறையில் மற்ற தமிழ் நாட்டுத் தேசியவாதிகள் நடந்து கொள்ள வேண்டுமென்று விரும்புகிறோம்.

* * *

சென்னை நகரில் நடந்த மற்றொரு பெரிய நிகழ்ச்சி தமிழ் முஸ்லிம் சங்கத்தாரின் சிறந்த முயற்சியினால் நடைபெற்றது. இச் சங்கத்தார் சென்னை நகர் தமிழ் நாட்டைச் சேர்ந்தது என்பதையும், தமிழ் நாட்டின் எல்லைகளையும் வற்புறுத்துவதற்காக ஹைகோர்ட் கடற்கரையில் ஒரு மாபெரும் பொதுக் கூட்டம் கூட்டினார்கள்.

சில பொதுக் கூட்டங்கள் சுவர் விளம்பரங்களிலே மட்டும் 'மாபெரும் பொதுக் கூட்ட'மாக விளங்கும். உண்மையில் நடப்பது மிகச் சிறு கூட்டமா யிருக்கும்.

ஆனால் தமிழ் முஸ்லிம் சங்கத்தார் கூட்டியது உண்மையிலேயே மாபெரும் பொதுக் கூட்டமாக நடைபெற்றது. ஐம்பதினாயிரம் ஜனங்களுக்கு மேல் கூடி யிருந்தார்கள். இக்கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுவதற்குத் தமிழகத்து எல்லைப் பாதுகாப்பில் சிரத்தையுள்ள பல்வேறு கட்சிப் பிரமுகர்களையும், எந்தக் கட்சியிலும் சேராத பிரமுகர்களையும் அழைத்திருந்தார்கள். அவர்களில் பலர் வந்து கலந்து கொண்டார்கள். ஜனாப் ஏ. எம். உடையதுல்லாவின் தலைமையில் நடந்த இக் கூட்டத்தில் ஸ்ரீ ஈ. வே. ராமசாமிப் பெரியார், ஸ்ரீ கே. பாஷ்யம், ஸ்ரீ கே. விநாயகம் முதலியவர்கள் பேசினார்கள்.

தமிழகத்தின் எல்லைப் பாதுகாப்பு விஷயத்தில் சென்னை நகர மக்கள் எவ்வளவு ஊக்கம் கொண்டிருக்கிறார்கள் என்பது இம் மாபெரும் பொதுக் கூட்டத்தில் நன்கு வெளியாயிற்று.

ஆனால் கூட்டத்தின் நோக்கத்துக்கு மாறான வெறுக்கத் தக்க நிகழ்ச்சி ஒன்று இப் பொதுக் கூட்டம் சம்பந்தமாக நடந்தது. கூட்டத்தில் கலந்துகொள்ள வந்தவர்களில் சிலர் இந்தியாவின் தேசியக் கொடிக்கு உரிய கௌரவம் கொடுக்க மறுத்தார்கள். இது மற்றும் ஒரு பகுதியாருக்கு ஆத்திரம் ஊட்டியது. கூட்டத்தில் கலந்து கொள்ள வந்தவர்களில் மேயர் செங்கல்வராயனைப் போன்ற சிலர் வெறுப்புற்றுத் திரும்பிப் போகும் படியும் நேர்ந்தது.

பற்பல கட்சியாரும் சேர்ந்து நடத்துவதற் குரிய காரியங்களிலே கூட நம்மவர்களில் சிலர் பெருந் தன்மையுடன் நடந்துகொள்ள முடிவதில்லை. தங்கள் குறுகிய கட்சி வாதங்களைக் கொண்டு வந்து நுழைத்துக் கலவரம் செய்ய முயல்கிறார்கள். அவர்களைக் குறை கூறுவதை விட அவர்களுடைய பண்பாட்டின் நிலையைத் தான் நாம் குறை கூற வேண்டும்.

இந்தச் சம்பவத்திலிருந்து சர்வ கட்சி மகா நாடு கூட்டுகிறவர்கள் ஓர் எச்சரிக்கை பெற வேண்டும். பொதுவாக எல்லாரும் சேர்ந்து உழைக்கக் கூடிய காரியங்களிலேயாவது கட்சி வாதங்களை மறந்து ஈடுபடக் கூடியவர்களை மட்டுமே தேர்ந்து அழைக்க வேண்டும். இல்லாவிடில், சர்வ கட்சிக் கூட்டங்களை எதற்காகக் கூட்டுகிறார்களோ அந்த நோக்கமே பாழாய்ப் போகும்.

இந்த வருந்தற்குரிய நிகழ்ச்சி ஒரு பக்கம் நடந்து விட்டபோதிலும், தமிழ் முஸ்லிம் சங்கத்தாரின் மகத்தான முயற்சியை நாம் பெரிதும் பாராட்டுகிறோம். அவர்களுடைய பெரு முயற்சியினால் கடற்கரையில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டம் இவ்வளவு வெற்றிகரமாக முடிவடைந்தது குறித்து மகிழ்ச்சி அடைகிறோம்.

## அட்டைப்பட விளக்கம்

அவள் எவ்வளவு கெஞ்சினாலும், குழைந்தாலும், இறைஞ்சினாலும் அவளை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை, ஏனென்று கேட்பதில்லை என்று மனதில் திட்டமிட்டுக் கொண்டேதான் அன்று அவன் குளக்கரைக்கு வந்தான்.

காதல் உள்ளத்தின் விசித்திரப் போக்குகளுக்கெல்லாம் யாராலே காரணம் காட்டி முடியும்!

கடைசியில், அவன் அலுத்துப் போய் விட்டான். அவள் கவனத்தைத் தன்னால் திருப்ப முடியாது என்ற முடிவுக்கு வந்துவிட்டான். சரி, இனி அவளை மறந்துவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்தான். வாயில் புல்லாங்குழலை எடுத்துவைத்து ஊத ஆரம்பித்து விட்டானானால் அவனை என்ன, அகில உலகத்தையுமே மறந்து, இசையுலகில் மிதக்க ஆரம்பித்து விடுவான்!

இன்றும், அப்படியே மரத்தின்மேல் சாய்ந்து குழல் எடுத்து ஊதலானான்!

ஆகா! இது என்ன அதிசயம்! அவள் அவனைத் திரும்பிப் பார்க்கிறாளே! அவள் கண்களில்...! அவள் இதழ்கள்கூட ஏதோ முணு முணுக்கின்றனவே! என்னவென்று கேட்போம்.

திரும்பிப் பார்ப்பதில்லை—என்றே
திட்டமிட் டிருந்தேன்
இரும்பு மனத்தையுமே—உன் குழல்
இளகச் செய்ததையா!




## அத்தியாயம் 39

## "விபத்து வருகிறது!"

**ப**ழுவேட்டரையர் சிரித்தார். நந்தினியின் வார்த்தையைக் கேட்டுப் பரிகாசமாகச் சிரிப்பதாய் எண்ணிக் கொண்டு இலேசாகத்தான் சிரித்தார். அந்தச் சிரிப்பின் ஒலியினால் அந்த அறையும் அதிலிருந்த சகல பொருள்களும் நடுநடுங்கின.

தம்மை அவமதித்தவர்களை நந்தினி தன் கையினாலேயே கத்தி எடுத்துக் கொன்று விடுவதாகக் கூறியதைக் கேட்டபோது அவருடைய உள்ளத்தில் ஒரு பெருமிதம் உண்டாயிற்று. தம்முடைய மரியாதையைப் பாதுகாப்பதில் நந்தினிக்கு அவ்வளவு அக்கறை இருக்கிறது என்பதை அறிந்ததில் பழுவேட்டரையருக்கு இறும்பூது ஏற்பட்டது. அதே தோரணையில் அவள் மேலும் பேசிக் கேட்க வேண்டுமென்ற ஆசை அவர் மனதில் ஒரு பக்கம் பெருகியது. மற்றொரு பக்கத்தில் அவள் அம்மாதிரியெல்லாம் பேசுவதைத் தாம் விரும்பவில்லை என்று காட்டிக் கொள்ளவும் ஆசைப்பட்டார்.

"ஐயா! ஏன் சிரிக்கிறீர்கள்! என் வார்த்தையில் அவநம்பிக்கையினால் சிரிக்கிறீர்களா?" என்று நந்தினி கேட்டாள்.

"தேவி! மந்தார மலரின் இதழைப் போல் மென்மையான உன் கையினால் கத்தியை எப்படி எடுப்பாய் என்று எண்ணிச் சிரித்தேன். மேலும் நான் ஒருவன் இரண்டு நீண்ட கைகளை வைத்துக் கொண்டு உயிரோடிருக்கும்போது....."

"ஐயா! தங்கள் கரங்களின் பெருமையையும் வலிமையையும் நான் அறிவேன். யானைத் துதிக்கையையொத்த நீண்ட கைகள். இந்திரனுடைய வஜ்ராயுதத்தைப் போன்ற வலிமையுள்ள கைகள். போர்க்களத்தில் ஆயிரமாயிரம் பகைவர்களை வெட்டி வீழ்த்திய கைகள். சோழ சக்கரவர்த்திகளின் சிரத்தில் மணிமகுடத்தை வைத்து நிலைநாட்டி வரும் கைகள். ஆனாலும் அதையெல்லாம் இன்று நினைத்துப் பார்ப்பாரில்லை. நேற்றுப் பிறந்த பிள்ளைகள் தங்களைக் 'கிழடு' என்று சொல்லி ஏளனம் செய்யும் காலம் வந்து விட்டது. தாங்களோ மந்திரத்தால் கட்டுண்ட சர்ப்ப ராஜனைப் போல் சோழ குலத்தாரிடம் கொண்ட பக்திக்குக் கட்டுப்பட்டுச் சும்மா இருக்க வேண்டியிருக்கிறது. என்னுடைய கரங்கள் வளையல் அணிந்த மென்மையான கரங்கள்தான். மலர் எடுத்து மாலை கட்டுவதற்கு மட்டுமே தகுதியுள்ள கைகள்தான். ஆனாலும் வீராதி வீரராகிய தங்களை அக்கினி சாட்சியாகக் கைப்பிடித்த காரணத்தினால் எனது கைகளுக்கும் சிறிது சக்தி ஏற்பட்டிருக்கிறது. என் கற்பைக் காத்துக் கொள்வதற்கும் என் கணவரின் மரியாதையை நிலைநிறுத்துவதற்கும் அவசியம் ஏற்படுமானால் என் கைகளுக்கும் கத்தி எடுக்கும் வலிமை உண்டாகி விடும். இதோ பாருங்கள்...!" என்று நந்தினி கூறிவிட்டு, மஞ்சத்துக்கு அடியிலிருந்த பெட்

டியை வெளிப் புறமாக நகர்த்தினான். பெட்டியைத் திறந்து அதன் மேற்புறத்தில் கிடந்த ஆடைகளை அப்புறப்படுத்தினாள். அடியில் தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்த நீண்ட வாளை ஒரு கையினால் அலட்சியமாக எடுத்துத் தலைக்கு மேலே தூக்கிப் பிடித்தாள்.

பழுவேட்டரையர் அதைப் பார்த்த வண்ணமாகச் சிறிது நேரம் பிரமித்துப் போய் நின்றார். பின்னர், "இந்தப் பெட்டிக்குள்ளே இந்த வாள் எத்தனை காலமாக இருக்கிறது? உன் ஆடை ஆபரணங்களை வைத்திருப்பதாக வல்லவோ நினைத்தேன்?" என்றார்.

நந்தினி வாளைப் பெட்டியில் திரும்ப வைத்து விட்டு, "ஆம்; என் ஆடை ஆபரணங்களை இந்தப் பெட்டியிலே தான் வைத்திருக்கிறேன். என் ஆபரணங்களுக்குள்ளே மிக முக்கியமான ஆபரணம் இந்த வாள். என் கற்பையும் என் கணவருடைய கௌரவத்தையும் பாதுகாப்பதற் குரியது" என்றாள்.

"ஆனால் இதை நீ உபயோகப்படுத்துவதற்கு அவசியம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை; நான் ஒருவன் உயிரோடிருக்கும் வரையில்!"

"அதனாலேதான் இந்த வாளை நான் வெளியில் எடுப்பதில்லை. ஈழ நாட்டிலிருந்து வேங்கி நாடு வரையில் சோழ ராஜ்யத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் தங்கள் தோள் வலிமை தங்கள் கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியாதா? அல்லது பேதையாகிய என்னைத்தான் பாதுகாக்க முடியாதா? என்றாலும், முக்கியமான ராஜரீக காரியங்களில் ஈடுபட்டிருக்கும் தாங்கள் எப்போதும் என்னைக் கட்டிக் காத்துக் கொண்டிருக்க முடியாது. தங்களைப் பிரிந்திருக்கும் நேரங்களில் என்னை நான் பாதுகாத்துக் கொள்ள ஆயத்தமாய் இருக்க வேண்டும் அல்லவா?"

"தேவி! அதற்கு அவசியம் என்ன? போனது போகட்டும். இனி நான் உன்னைப் பிரிந்திருக்கப் போவதே இல்லை..."

"ஐயா! என்னுடைய விருப்பமும் அதுதான். ஆனால் இந்த ஒரு தடவை மட்டும் தாங்கள் என்னைப் பிரிந்து தஞ்சைபுரிக்குப் போய் வாருங்கள்......"

"இது என்ன பிடிவாதம்? எதற்காக இந்தத் தடவை மட்டும் நான் உன்னை இங்கே விட்டுவிட்டுப் போக வேண்டும்?" என்று பழுவேட்டரையர் கேட்டபோது அவருடைய புருவங்கள் நெரிந்தன.

"சுவாமி! அதற்கு இரண்டு காரணங்கள் இருக்கின்றன. என்னை நீங்கள் இப்போது தங்களுடன் அழைத்துப் போனால் இங்குள்ள மூடர்கள் மேலும் நம்மைக் குறித்துப் பரிகசித்துச் சிரிப்பார்கள். 'கிழவருக்கு இளைய ராணியிடம் அவ்வளவு நம்பிக்கை!' என்று சொல்லுவார்கள். அதை நினைத்தாலே எனக்கு இரத்தம் கொதிக்கிறது. மற்றொரு காரணம் இன்னும் முக்கியமானது. சம்புவரையரைத் தங்களுடைய அத்தியந்த சிநேகிதர் என்று இத்தனை காலமும் தாங்கள் சொல்லி வந்தீர்கள்; நம்பியும் வந்தீர்கள். ஆனால் இளவரசர் வந்ததிலிருந்து அவருடைய பேச்சிலும் நடவடிக்கைகளிலும் ஏற்பட்டிருக்கும் மாறுதலைக் கவனித்தீர்களா? தாங்கள் கவனிக்கா விட்டாலும் நான் கவனித்துக் கொண்டு வருகிறேன்......"

"நானும் அதைக் கவனித்துத்தான் வருகிறேன். அந்த மாறுதலுக்குக் காரணம் என்னவா யிருக்குமென்று ஆச்சரியப் பட்டுக் கொண்டிருக்கிறேன்......"

"தாங்கள் கபடமற்ற உள்ள முடையவர்; ஆகையால் ஆச்சரியப் படுகிறீர்கள். எனக்கு அதில் ஆச்சரியம் இல்லை. மனிதர்களுடைய பேராசை இயல்புதான் சம்புவரையரின் மாறுதலுக்குக் காரணம். இளவரசர் ஆதித்த கரிகாலர் பெண்களை முகமெடுத்தே பார்ப்பதில்லை யென்றும், கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லை யென்றும் வதந்தியா யிருந்தது. இங்கு அவர் வந்ததிலிருந்து அதற்கு நேர்மாறாக நடந்து வருவதைப் பார்த்திருப்பீர்கள். பெண்கள் இருக்குமிடத்துக்கு அடிக்கடி வருகிறார். கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகிறார். இதற்கெல்லாம் காரணம் சம்புவரையர் மகள் மணிமேகலைமீது அவருடைய மனது சென்றிருப்பதுதான். 'மணிமேகலையை வேட்டையாடுவதற்கு அழைத்துப் போகலாமா?' என்றுகூடக் கரிகாலர் கேட்டார் அல்லவா? இது சம்புவரையருக்கும் தெரிந்திருக்கிறது. ஆகையால் பழைய ஏற்பாடுகளை யெல்லாம் அவர் மறந்து விட்டார். தம் அருமை மகள் தஞ்சாவூர்த் தங்கச் சிங்காதனத்தில் சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கப் போவது பற்றிக் கனவு காணத் தொடங்கி விட்டார்......"

"ஆமாம்; நீ சொல்வதுதான் காரணமா யிருக்க வேண்டும். சம்புவரையன் இத்தகைய நீச குணம் படைத்தவன் என்று நான் கனவிலும் எண்ணவில்லை.

"இரண்டு மாதங்களுக்கு முன்புதான் இதே மாளிகையில் மதுராந்தகரைத் தஞ்சைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைப்பதாக எல்லாரும் கூடிச் சபதம் செய்தோம். சீச்சீ! இப்படிப் பேச்சுத் தவறுகிறவனும் ஒரு மனிதனா?" என்று பழுவேட்டரையர் சீறினார்.

"சுவாமி! அதனாலேதான் நான் தங்களுடன் வரவில்லை என்று சொல்கிறேன். தாங்கள் இல்லாத சமயத்தில் இவர்கள் இங்கே என்ன சதி செய்கிறார்கள் என்பதைக் கவனித்துக் கொள்வேன். ஏதேனும் இவர்கள் சூழ்ச்சி செய்தால் அது பலிக்காமற் செய்ய வழிதேடுவேன்."

"நந்தினி! இதிலே யெல்லாம் நீ எதற்காகப் பிரவேசிக்க வேண்டும்?"

"கணவர் சிரத்தை கொண்டுள்ள காரியத்தில் மனைவிக்கும் சிரத்தை இருக்க வேண்டாமா? 'வாழ்க்கைத் துணைவி' என்று பிறகு எதற்காக எங்களைச் சொல்கிறது?"

"என்ன இருந்தாலும் இந்த மூர்க்கர்களுக்கும் நீசர்களுக்கும் நடுவில் உன்னைத் துணையின்றி விட்டு விட்டு நான் போகிறதா? அது எனக்குச் சிறிதும் சம்மதமாயில்லையே?"

"எனக்கு இங்கே துணையில்லாமற் போகவில்லை. மணிமேகலை இருக்கிறாள். எனக்காக அந்தப் பெண் என்ன வேண்டுமானாலும் செய்வாள்......"

"அது உண்மைதான். நானும் கவனித்தேன். உன்னுடைய மோகன சக்தி அவளை உன் அடிமையாக்கி யிருக்கிறது. ஆனாலும் அது எவ்வளவு தூரம் நிலைத்திருக்கும்? ஆதித்த கரிகாலன் சிங்கா





தனத்தில் ஏறி அந்தப் பெண்ணைச் சக்கரவர்த்தினி யாக்கிக் கொள்ளப் போவதாக ஆசை காட்டினால்......"

"ஐயா! அது விஷயத்தில் தங்களுக்குச் சிறிதும் சந்தேகம் வேண்டியதில்லை. மணிமேகலை என் கருத்துக்கு மாறாகத் தேவலோகத்து இந்திராணி பதவியையும் ஏற்றுக் கொள்ளமாட்டாள். 'கரிகாலனை இந்தக் கத்தியால் குத்திக் கொன்றுவிட்டு வா!' என்று நான் சொன்னால், உடனே அவ்விதம் செய்துவிட்டு வருவாள். என்னுடைய மோகன சக்தியைப் பற்றி அடிக்கடி தாங்களே சொல்வீர்கள் அல்லவா? அது மணிமேகலையை முழுதும் ஆட்கொண்டிருக்கிறது! வேணுமானால், இப்போதே தங்களுக்கு அதை நிரூபித்துக் காட்டுகிறேன்!" என்றாள் நந்தினி.

**ப**ழுவேட்டரையரின் உடம்பு படபடத்தது. அந்தக் கிழவர் உதடுகள் துடிக்க, தொண்டை அடைக்க, நாத் தழுதழுக்கக் கூறினார்:—"தேவி! உன்னுடைய சக்தியை நான் அறிவேன். ஆனால் கரிகாலன் விஷயத்தில் நீ அம்மாதிரி எதுவும் பரீட்சை பார்க்க வேண்டாம். அவன் அறியாச் சிறுவன். ஏதோ தெரியாமல் உளறினான் என்பதை நாம் பெரிது படுத்தக் கூடாது. கரிகாலன் மணிமேகலையை மணந்து கொள்ள இஷ்டப்பட்டால் நாம் அதற்குத் தடையாக இருக்க வேண்டாம்!"



"ஐயா! நாம் தடை செய்யாமலிருக்கலாம். ஆனால் விதி ஒன்று இருக்கிறதே! அதை யார் தடை செய்ய முடியும்? மணிமேகலை என்னிடம் பிரியங் கொண்டவளாயிருப்பதுபோல் நானும் அவளிடம் பாசம் வைத்திருக்கிறேன். என் கூடப் பிறந்த தங்கையைப் போல் அவளிடம் ஆசை கொண்டிருக்கிறேன். அற்பாயுளில் சாகப் போகிறவனுக்கு அவளை மணம் செய்து கொடுக்க நான் எப்படி இணங்குவேன்?" என்றாள் நந்தினி. அப்போது அவளுடைய பார்வை எங்கேயோ தூரத்தில் நடக்கும் எதையோ பார்த்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

பழுவேட்டரையர் இன்னும் அதிக பரபரப்பை அடைந்து கூறினார்:—"நந்தினி! இது என்ன வார்த்தை? சோழ சக்கரவர்த்தியின் வேளக்காரப் படைக்கு நான் ஒரு சமயம் தலைவனாயிருந்தேன். சக்கரவர்த்தியையும் அவருடைய சந்ததிகளையும் உயிரைக் கொடுத்தேனும் பாதுகாப்பதாகச் சத்தியம் செய்திருக்கிறேன்......"

"ஐயா! அந்த சத்தியத்தைத் தாங்கள் மீற வேண்டுமென்று நான் சொல்லவில்லையே?"

"உன்னால் கரிகாலனுக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்தாலும் அந்தக் குற்றம் என்னையே சாரும். சிறு பிள்ளையின் பரிகாசப் பேச்சைப் பொறுக்காமல்

கிழவன் படுபாதகம் செய்து விட்டான் என்று உலகம் என்னை நிந்திக்கும். ஆறு தலைமுறையாக எங்கள் குலம் சோழர்களுக்குப் பாதுகாப்பாக இருந்து எடுத்திருக்கும் நல்ல பெயர் நாசமாகும்......"

"அப்படியானால் தாங்கள் இந்த ஊரை விட்டு உடனே போக வேண்டியது மிகவும் அவசியம்!" என்று நந்தினி மர்மம் நிறைந்த குரலில் கூறினாள்.

"எதனால் அவ்விதம் சொல்லுகிறாய்?" என்று பழுவேட்டரையர் கேட்டார்.

"தங்களிடம் எப்படிச் சொல்வதென்று தயங்கிக் கொண்டிருந்தேன். இப்போது சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. துர்க்கா பரமேசுவரி எனக்குச் சில அபூர்வ சக்திகளை அளித்திருக்கிறாள். இது தங்களுக்கே தெரியும். சுந்தர சோழர் இளம் வயதில் ஸ்திரீ ஹத்தி தோஷத்துக்கு உள்ளானவர் என்பதை நான் என் மந்திர சக்தியினால் அறிந்தேன். அதைத் தங்களுக்கும் நிரூபித்துக் காட்டினேன். அதேபோல் ஆதித்த கரிகாலனுடைய இறுதிக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதையும் இப்போது என் அகக் கண்ணினால் காண்கிறேன். அது தங்கள் கையினாலும் நேரப் போவதில்லை; என் கையினாலும் நேரப் போவதில்லை. ஆனால் யமனுடைய பாசக் கயிறு அவனை நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பது மட்டும் நிச்சயம். காட்டிலே வேட்டையாடப் போன இடத்திலே அவனுக்கு இறுதி நேரலாம்; அல்லது அரண்மனையில் படுத்திருக்கும் போதும் நேரலாம். புலி, கரடி முதலிய துஷ்ட மிருகங்களினால் நேரலாம்; அல்லது அவனுடைய சிநேகிதர்கள் விடும் அம்பு தவறி விழுந்தும் அவன் சாகலாம். அல்லது மென்மையான பெண்ணின் கரத்திலே பிடித்த கத்தியினால் குத்தப்பட்டும் அவனுக்கு மரணம் நேரலாம். ஆனால், ஐயா, அவனுடைய மரணம் தாங்கள் கைப்பிடித்து மணந்த என்னுடைய கரத்தினால் நேராது என்று தங்களுக்குச் சத்தியம் செய்து கொடுக்கிறேன். சாலையோரத்திலே அநாதையாக நின்ற என்னைத் தாங்கள் உலகறிய மணந்து இளையராணி ஆக்கினீர்கள். அத்தகைய தங்களுக்கு என்னால் ஒரு பழியும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வேன். அதற்காகவே தாங்கள் இச் சமயம் இங்கு இருக்க வேண்டாம், போய் விடுங்கள் என்று வற்புறுத்திச் சொல்கிறேன். தாங்கள் இங்கு இருக்கும் சமயம் கரிகாலனுக்கு என்ன விதமான விபத்து நேர்ந்தாலும் உலகத்தார் தங்களை அதனுடன் சம்பந்தப் படுத்துவார்கள். அருள்மொழிவர்மனைக் கடல் கொண்டதற்குத் தங்கள் மீது பழி கூறவில்லையா? அம்மாதிரி இதற்கும் தங்கள் பேரில் குற்றம் சாட்டுவார்கள். தங்களால் விபத்து நேர்ந்ததென்று சொல்லா விட்டாலும் தாங்கள் ஏன் அதைத் தடுக்கவில்லை என்று கேட்பார்கள்! ஆனால் தங்களுடைய வஜ்ராயுதம் போன்ற கரங்களாலும் கரிகாலனுக்கு வரப்போகும் விபத்தைத் தடுக்க முடியாது. ஆகையால், தாங்கள் உடனே போய்விட வேண்டும். என்னைத் தங்களுடன் அழைத்துக் கொண்டு போனால், அதைப்பற்றியும் வீண் சந்தேகம் ஏற்படும். முன்னதாகத் தெரிந்திருந்தபடியினால் என்னையும் அழைத்துக் கொண்டு போய் விட்டதாகச் சொல்வார்கள். ஆகையால், தாங்கள் மட்டுமே போக வேண்டும். என்ன நேர்ந்தாலும், எப்படி நேர்ந்தாலும், அதனால் தங்களுக்கு அபகீர்த்தி எதுவும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள நான் இங்கிருப்பேன். ஐயா! என்னிடம் அவ்வளவு நம்பிக்கை தங்களுக்கு உண்டா?" என்று நந்தினி கேட்டு விட்டுத் தன் கரிய பெரிய விழிகளால் பழுவேட்டரையரின் நெஞ்சை ஊடுருவிப் பார்ப்பவள்போலப் பார்த்தாள். பாவம்! அந்த வீரக் கிழவர் நந்தினியின் சொல்லம்பினால் பெரிதும் கலங்கிப் போயிருந்தார். அவளுடைய கண் அம்புக்கு முன்னால் கதிகலங்கிப் பணிந்தார்.

## அத்தியாயம் 40

# நீர் விளையாட்டு

இந்த வரலாறு நிகழ்ந்த காலத்துக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் மூவேந்தர்களைத் தவிரச் சிற்றரசர்கள் எழுவர் புகழ் பெற்று விளங்கினார்கள். அவர்களுக்கு 'வள்ளல்கள்' என்ற பட்டப் பெயரும் வழங்கி வந்தது. அந்த எழுவரில் ஒருவன் கொல்லி மலையின் தலைவனான ஓரி என்பவன். இவன் வில் வித்தையில் இணையில்லாத வீரன் என்று பெயர் பெற்

ரிருந்தான். இவன் தன் வலிய பெரிய வில்லை வளைத்து நாணேற்றி அம்பை விட்டானாயின், அது இராமபிரானுடைய அம்பு ஏழு மரங்களைத் தொளைத்தது போல் முதலில் ஒரு புலியைத் தொளைத்து, பிறகு ஒரு மானைத் தொளைத்து, பிறகு ஒரு பன்றியைத் தொளைத்து. பின்னர் ஒரு முயலைத் தொளைத்து, கடைசியில் ஒரு மரத்தையும் தொளைத்து விடுமாம். இவ்வாறு புலவர்களால் அவனுடைய வில்வித்தைத் திறன் பாடப் பெற்றிருந்தது. அதிலிருந்து அவனை 'வல்வில் ஓரி' என்று குறிப்பிடுவதும் வழக்கமாயிற்று.

கொல்லிமலை வல்வில் ஓரியின்மீது, அந்நாளில் வலிமை பெற்ற வேந்தனாக விளங்கிய சேரன் கோபம் கொண்டான். அவனைத் தாக்குவதற்குத் திருக்கோவலூர்த் தலைவன் மலையமான் திருமுடிக் காரியின் துணையை நாடினான். காரியின் வீரம் ஓரியின் வீரத்துக்குக் குறைந்ததன்று. அத்துடன் மலையமான் காரிக்குப் படை பலம் அதிகமாயிருந்தது. மலையமான், கொல்லி மலைமீது படை எடுத்துச் சென்று வல்வில் ஓரியைக் கொன்று அவனுடைய மலைக் கோட்டையையும் நிர்மூலமாக்கினான்.

அதே காலத்தில் கொல்லி மலையை அடுத்திருந்த நிலப்பகுதியில் அதிகமான் நெடுமான் அஞ்சி என்னும் குறுநில மன்னன் அரசு புரிந்து வந்தான். வல்வில் ஓரியுடன் அவன் உறவு பூண்டவன். வல்வில் ஓரியைக் கொன்ற மலையமான் காரியை அவன் பழிவாங்க விரும்பினான். தன்னால் மட்டும் அது முடியாதென்று எண்ணிச் சோழ மன்னனாகிய கிள்ளி வளவனின் உதவியை நாடினான். மலையமானின் வலிமை அதிகமாகி வருவது பற்றியும் அவன் சேரனோடு தோழமை கொண்டிருப்பது பற்றியும் கிள்ளிவளவனுக்குக் கோபம் இருந்தது. எனவே சோழன் கிள்ளிவளவனும் தகடூர் அதிகமானும் சேர்ந்து திருக்கோவலூர் மலையமானைத் தாக்கினார்கள். மலையமான் போர்க்களத்தில் வீர சொர்க்கம் எய்தினான். மலையமானுடைய இரு இளம் புதல்வர்களைச் சோழ நாட்டு வீரர்கள் சிறைப்பிடித்து வந்தார்கள். மலையமானுடைய வம்சத்தையே அழித்துவிட வேண்டுமென்று கருதியிருந்த அதிகமானும் கிள்ளிவளவனும் அந்தக் குழந்தைகளைப் பூமியில் கழுத்தளவு புதைத்து யானைக் காலால் இடறிக் கொல்லும்படி கட்டளையிட்டார்கள். மலையமானுடைய வள்ளன்மையை அறிந்து, அதனால் பயன் துய்த்திருந்த புலவர் ஒருவர் அச்சமயம் அங்கு வந்து சேர்ந்தார். மலையமானுடைய குழந்தைகளின் உயிருக்காகச் சோழ மன்னனிடம் மன்றாடினார்.

"வேந்தே! அதோ பார்! கழுத்து வரை புதைக்கப்பட்டிருக்கும் குழந்தைகளின் முகங்களைப் பார்! அந்த முகங்களில் தவழும் புன்னகையைப் பார்! தங்களைக் காலால் இடறிக் கொல்லப் போகிற யானையைப் பார்த்து, அதன் துதிக்கை ஆடுவதைப் பார்த்து, அக்குழந்தைகள் ஏதோ வேடிக்கை என்று எண்ணிச் சிரிக்கின்றன! இத்தகைய குற்றமற்ற குழந்தைகளையா கொல்லப் போகிறாய்? அந்தக் குழந்தைகள் என்ன பாவம் செய்தன? தகப்பன் செய்த குற்றத்துக்காகக் குழந்தைகளைத் தண்டிக்கலாமா?" என்றார் புலவர்.

அதைக் கேட்ட சோழன் மனமாற்றம் அடைந்தான். தன் கட்டளையை உடனே மாற்றினான். குழந்தைகளைத் தரையிலிருந்து எடுக்கச் செய்தான். தன் அரண்மனையிலேயே வளர்க்கவும் செய்தான். வயது வந்த பிறகு அவர்களில் மூத்த பிள்ளைக்குத் திருக்கோவலூர் அரசையும் திரும்பக் கொடுத்தான்.

அது முதல் நூற்றாண்டு நூற்றாண்டாகச் சோழ குலத்து மன்னர்களிடம் திருக்கோவலூர் மலையமான் வம்சத்தினர் நன்றியுடன் நட்புரிமை கொண்டிருந்தார்கள். அந்த உறவு சுந்தர சோழர் காலம் வரையில் நீடித்திருந்தது. மலையமான் மகளாகிய வானமா தேவியைச் சுந்தர சோழர் மணந்து பட்டமகிஷியாகக் கொண்டிருந்தார்.

கொல்லிமலை வல்வில் ஓரி - தகடூர் அதிகமான் இவர்களுடைய வம்சத்தினர் அழிந்து பட்டனர். ஆயினும் அவர்களுடைய கிளை வம்சத்தில் தாங்கள் தோன்றியதாகக் கடம்பூர் சம்புவரையர்கள் சொல்லிக் கொண்டார்கள். அவர்களுடைய முன்னோர்கள் திருக்கோவலூர் மலையமான் வம்சத்தாரிடம் கொண்டிருந்த பகைமையையும் சம்புவரையர்கள் மறக்கவில்லை. ஆதலின் மலையமானுடைய பேரப் பிள்ளை சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடி சூடுவதை அவர்கள் விரும்பாதது இயற்கையே, யல்லவா? ஆதித்த கரிகாலனுடைய அகம்பாவமும், சிற்றரசர்களைச் சிறிதும் மதியாமல் அவன் நடந்து கொண்ட விதமும் சம்புவரையர்களின் வெறுப்பு வளருவதற்கு மேலும் காரணம்

தந்தது. ஆகையினாலேயே கண்டராதித்தருடைய குமாரன் மதுராந்தகனைத் தஞ்சைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்கும் முயற்சியில் சம்புவரையர்கள் ஊக்கமாக ஈடுபட்டார்கள்.

ஆனால் கரிகாலன் கடம்பூருக்கு வந்த நாளிலிருந்து பெரிய சம்புவரையரின் உள்ளம் சிறிது சிறிதாக மாறுதல் அடையலாயிற்று. அவருடைய செல்வப் புதல்வியாகிய மணிமேகலையே அவருடைய மனமாறுதலுக்குக் காரணமாயிருந்தாள். ஆதித்த கரிகாலனுடைய உள்ளத்தை மணிமேகலை கவர்ந்து விட்டாள் என்பதற்குப் பல அறிகுறிகள் தென்பட்டன. பெண்களைக் கண்ணெடுத்தும் பாராதவன் என்றும், பிரம்மச்சாரியாகவே காலத்தைக் கழிக்கப்போகிறான் என்றும் கரிகாலனைப் பற்றிப் பேசப்பட்டு வந்தது. அத்தகையவன் கடம்பூர் மாளிகைக்கு வந்ததிலிருந்து அடிக்கடி பெண்கள் இருக்கும் இடம் போவதும் அவர்களுடன் உல்லாசமாகப் பேசுவதுமாக இருந்தான். முக்கியமாக அவன் மணிமேகலையின் 'சூடிகை'யைப் பற்றி அடிக்கடி பாராட்டிப் பேசினான். கரிகாலன் வந்ததிலிருந்து மணிமேகலையும் ஒரே உற்சாகமாக இருந்தாள். அதற்குக் காரணம் அவளும் கரிகாலனிடம் பற்றுக் கொண்டதுதான் என்று பெரிய சம்புவரையர் கருதினார். அவர்கள் இருவருடைய குதூகலத்தையும் பார்த்துப் பார்த்துச் சம்புவரையரும் உற்சாகம் கொண்டார். கரிகாலன் மணிமேகலையை மணந்து கொண்டால் தம் செல்வத் திருமகள் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாக விளங்குவாள்! அவளுக்குப் பிறக்கும் குழந்தையும் தஞ்சை சிங்காதனத்துக்கு உரியவனாவான்! இன்று திருக்கோவலூர் மலையமான் அடைந்திருக்கும் பெருமிதத்தை அப்போது தாமும் அடையலாம். அதற்கெல்லாம் தாமே எதற்காகத் தடையாக இருக்க வேண்டும்? தமது அருமைக் குமாரியின் ஏற்றத்துக்குத் தாமே ஏன் இடையூறு செய்ய வேண்டும்?

மதுராந்தகனுக்குத் தம் மகளையும் மணம் செய்விக்கலாம் என்ற யோசனை முன்னம் சம்புவரையருக்கு இருந்தது உண்மைதான். ஆனால் மதுராந்தகனுக்கு ஏற்கெனவே இரு மனைவியர் இருந்தனர். சின்னப் பழுவேட்டரையரின் மகளை அவன் மணந்திருந்ததுடன், அவளுக்கு ஒரு ஆண் மகவும் பிறந்திருந்தது. ஆகையால் மதுராந்தகன் சிங்காதனம் ஏறினால் பழுவேட்டரையரின் வம்சத்தினர்தான் பட்டத்துக்கு உரிமை பெறுவார்கள். மணிமேகலை தஞ்சை அரண்மனையில் உள்ள பல சேடிப் பெண்களில் தானும் ஒருத்தியாக வாழ வேண்டியிருக்கும்.

ஆனால் ஆதித்த கரிகாலனை மணிமேகலை மணம் செய்து கொண்டால் அவள்தான் பட்டமகிஷியாயிருப்பாள். அவளுக்குப் பிறக்கும் பிள்ளைக்கே சிங்காதனம் உரியதாகும்.

மதுராந்தகனுக்குப் பட்டம் சூட்டுவதென்பது பிரம்மப் பிரயத்தனமான காரியம். மக்கள் அதற்கு விரோதமாயிருப்பார்கள். மலையமானுடனும் கொடும்பாளூர் வேளானுடனும் போராட்டம் நடத்தித்தான் அதைச் சாதிக்க வேண்டியதாயிருக்கும். மதுராந்தகனுடைய அன்னையே அதற்குத் தடையாயிருக்கிறாள். இவ்வளவு தொல்லையான முயற்சியை எதற்காக மேற்கொள்ள வேண்டும்?

ஆதித்த கரிகாலனுக்கு முடி சூட்டுவதென்பது ஏற்கெனவே முடிவான காரியம். அதை நிறைவேற்றுவதில் எவ்வித சிரமமும் ஏற்படாது. பழுவேட்டரையர்களின் பிடிவாதந்தான் பெரிய இடையூறாயிருக்கும். அவர்களில் பெரிய கிழவனோ இளைய ராணியின் மோகத்தில் மூழ்கிக் கிடக்கிறான். இன்னும் எத்தனை நாளைக்கு அவன் உயிரோடிருப்பானோ, தெரியாது. இந்தக் கிழவனை நம்பி ஒரு பெரும் அபாயகரமான காரியத்தில் எதற்காகத் தலையிட வேண்டும்?

மதுராந்தகன் பக்கம் இருப்பதாகத் தாம் சபதம் செய்து கொடுத்திருப்பது என்னமோ, உண்மைதான். அதனால் என்ன? சபதத்துக்குப் பங்கம் செய்யாமலே காரியத்தை முடிக்க வழியில்லாமலா போகிறது? மதுராந்தகன் ஓர் அப்பாவிப் பிள்ளை என்பது தெரிந்த விஷயந்தான். அவனைக் கொண்டே "எனக்கு இராஜ்யம் வேண்டாம்" என்று கூடச் சொல்லும்படி செய்து விடலாம். அல்லது அவனுடைய அன்னையின் சம்மதம் வேண்டும் என்று வற்புறுத்தினாலும் போதுமே!......

இவ்வாறெல்லாம் சம்புவரையரின் உள்ளம் சிந்திக்கத் தொடங்கியிருந்தது. ஆகையால் பழுவேட்டரையர் தஞ்சைக்குப் போகும் யோசனையை அவர் உற்சாகமாக ஆதரித்தார். அவர் இல்லாத சமயத்தில் கரிகாலனுடன் அந்தரங்கமாகப் பேசி அவனுடைய உள்ளத்தை

நன்கு அறிந்து கொள்ளலாம் என்றும், பிறகு சமயோசிதம் போல் நடந்து கொள்ளலாம் என்றும் எண்ணினர். ஆதலின் பெரிய பழுவேட்டரையரை அவரே துரிதப்படுத்திப் பரிவாரங்களுடன் தஞ்சைக்கு அனுப்பி வைத்தார்.

பழுவேட்டரையர் பிரயாணப்பட்டுச் சென்ற பிறகு ஆதித்த கரிகாலனும் அவனுடைய தோழர்களும் வேட்டைக்குப் புறப்பட்டார்கள். அவர்களுடனே மணிமேகலையையும் மற்ற அந்தப்புரப் பெண்களையும் அனுப்பக் கூடச் சம்புவரையர் சித்தமா யிருந்தார். ஆனல் நடப்பதையெல்லாம் வேறு நோக்குடன் கவனித்து வந்த கந்தமாறன் அதை ஆட்சேபித்தான். கரிகாலன் மணிமேகலையிடம் காட்டிய சிரத்தையெல்லாம் நந்தினியை முன்னிட்டுத்தான் என்பதை அவன் உணர்ந்திருந்தான். இதனல் கரிகாலன் பேரில் அவனுடைய வெறுப்பு வளர்ந்திருந்தது. இதையெல்லாம் தந்தையிடம் விளக்கிச் சொல்லவும் முடியவில்லை. ஆகையால், "வேட்டையாடும் இடத்தில் பெண்களைக் கூட்டிக் கொண்டு போய் என்னத்தைச் செய்வது? இவர்கள் பத்திரமா யிருக்கிறர்களா என்று பார்ப்பதற்குத்தான் சரியா யிருக்கும். மேலும் இது ஐப்பசி மாதம். எந்த நிமிஷத்திலும் பெரு மழை தொடங்கலாம். ஏரிக்கரைக் காடெல்லாம் வெள்ளமாகி விடும். பெண்கள் திண்டாடிப் போவார்கள்!" என்று சொன்னன்.

அதன் பேரில் சம்புவரையரும் அந்த யோசனையைக் கைவிட்டு விட்டார். ஆதித்த கரிகாலன் தன் தோழர்களாகிய பார்த்திபேந்திரன், வந்தியத்தேவன், கந்தமாறன் இவர்களையும், மற்ற வேட்டைக்காரர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றன்.

* * *

எல்லாரும் சென்ற பிறகு சம்புவரையர் மாளிகை வெறிச்சென்று இருந்தது. நந்தினி மணிமேகலையைப் பார்த்து, "புருஷர்கள் வீட்டில் இருக்கும்போது நமக்குத் தொல்லையாகத் தோன்றுகிறர்கள். ஆனல் அவர்கள் எங்கேயாவது போய் விட்டாலும் நமக்குச் சங்கடமாகத்தான் இருக்கிறது. பரிகசித்துச் சிரிப்பதற்குக்கூட விஷயம் கிடைப்பதில்லை!" என்றாள்.

"ஆம், அக்கா! நாம் கூட வேட்டைக்குப் போயிருக்கலாம். எனக்கு வேட்டை

## பிரபல திருமணம்



ஆலப்புழை பி. ராஜகோபால் ரெட்டியார் & சன்ஸ் மானேஜிங் புரொப்ரைட்டர் ஸ்ரீ ஆர். ராமநாதன் ரெட்டியார் அவர்களின் சகோதரி சௌபாக்கியவதி விசாலாட்சிக்கும் ஆலப்புழை ராதாகிருஷ்ணு பிலிம்ஸ் மானேஜிங் டைரக்டரும் ஸ்ரீ எஸ். குருசாமி ரெட்டியாரின் குமாரருமான சிரஞ்சீவி ராதாகிருஷ்ணனுக்கும் சென்ற மாதம் 26-ந் தேதி ஆலப்புழையில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. தம்பதிகளுக்குப் பல வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் வந்து குவிந்தன.

வாழ்க விசாலாட்சி - ராதாகிருஷ்ணன்

பார்க்கப் பிரியம் அதிகம். என் தந்தையோடும் தமையனோடும் சில சமயம் போவதுண்டு. ஆனால் இன்றைக்கு என்னமோ கந்தமாறன் பிடிவாதமாகத் தடை செய்து விட்டான். ஒருவேளை உங்களுக்கு வேட்டை பிடிக்காது என்று அவ்விதம் தடை செய்தானோ, என்னமோ?" என்றாள் மணிமேகலை.

"ஆமாம்; எனக்கு வேட்டை அவ்வளவாகப் பிடிப்பதில்லைதான். இரத்தத்தைக் கண்டாலே எனக்குத் திகிலாயிருக்கும். ஆனால் கந்தமாறன் அதற்காகச் சொல்லவில்லையடி! உன்னையும் உன் வீட்டு விருந்தாளிகளில் ஒருவரையும் பிரித்து வைப்பதற்காகவே அவ்விதம் அவன் தடை செய்து விட்டான்!" என்றாள் நந்தினி.

மணிமேகலையின் கன்னங்களில் குழிகள் காணப்பட்டன. சிறிது நேரம் தரையைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "புருஷர்கள் எங்கேயாவது போய்த் தொலையட்டும், அக்கா! அவர்கள் சகவாசமே நமக்கு வேண்டாம். நாம் ஏரிக் கரை நீராழி மண்டபத்துக்குப் போய் நீர் விளையாடி விட்டு வரலாம்! வருகிறீர்களா?" என்றாள். நந்தினியும் அதற்குச் சம்மதிக்கவே தந்தையிடம் சொல்லி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை மணிமேகலை செய்தாள்.

* * *

**வீ**ர நாராயண ஏரியின் கீழ்ப்புறத்தில் பெரிய கரையும் அதில் எழுபத்து நாலு மடவாய்களும் உண்டு என்பதைப் பார்த்திருக்கிறோமல்லவா? ஏரியின் மேற்புறத்தில் அத்தகைய பெரிய கரை இடையாது. ஏரி நீரின் ஆழம் சிறிது சிறிதாகக் குறைந்து வந்து ஏரிக்கரை அங்கே சம தரையாக அமைந்திருந்தது. இன்னும் மேற்கே அடர்ந்த காடுகள் மண்டிக் கிடந்தன.

இவ்விதம் ஏரி நீர் குறைந்து சம தரையாகும் பிரதேசத்தில், ஆங்காங்கே சிறிய சிறிய தீவுகள் காணப்பட்டன. தீவுகளில் மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்து வளர்ந்திருந்தன. அத் தீவுகளில் ஒன்றின் கரையில் படித்துறையும் நீராழி மண்டபமும் அமைக்கப்பட்டிருந்தன. இங்கே கடம்பூர் சம்புவரையரின் அந்தப்புரத்துப் பெண்கள் நீராடுவதற்காகவும் உல்லாஸமாகப் பொழுது போக்குவதற்காகவும் வருவது வழக்கம். அந்த இடத்துக்கு வந்து சேர வேண்டுமானால் இரண்டு காத தூரம் ஏரியைச் சுற்றிக்கொண்டு வரவேண்டும். அல்லது படகிலேறி ஏரியைக் கடந்து வரவேண்டும். இதனாலும் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் குளிக்குமிடம் என்று தெரிந்திருந்தபடியாலும் அன்னிய மனிதர்கள் அங்கே வருவது இடையாது.

நந்தினியும் மணிமேகலையும் படகிலேறிக் கொண்டு அந்தத் தீவுக்கு இப்போது வந்து சேர்ந்தார்கள். படகு ஓட்டத் தெரிந்த இரண்டு தோழிமார்கள் உடன் வந்தார்கள். சமையல் செய்வதற்கு வேண்டிய பண்டங்களையும் படகில் கொண்டு வந்தார்கள். நீராழி மண்டபப் படித்துறையை அடைந்ததும் தோழிப் பெண்கள் படகை விட்டிறங்கி மண்டபத்தில் சமையல் செய்யத் தொடங்கினார்கள்.

நந்தினியும் மணிமேகலையும் சிறிது நேரம் படித்துறையில் உட்கார்ந்து வம்பு பேசிக் கொண்டிருந்தார்கள். மணிமேகலை இயற்கை மதியூகமுள்ள பெண்; குறும்பில் பற்றுள்ளவள். அவள் பழுவேட்டரையர் பேசுவது போலவும், கரிகாலன், கந்தமாறன், பார்த்திபேந்திரன், வந்தியத்தேவன் ஆகியவர்கள் பேசுவது போலவும் பேசி நடித்துக் காட்டினாள். அதையெல்லாம் பார்த்தும் கேட்டும் நந்தினி கலீர், கலீர் என்று சிரித்துக் கொண்டிருந்தாள். ஆயினும் அவளுடைய கவனம் முழுதும் மணிமேகலையிடம் இல்லை என்பதும், அவள் மனம் அவ்வப்போது ஏதோ அந்தரங்க சிந்தனையில் ஈடுபட்டது என்பதும் வெளியாகி வந்தது.

திடீரென்று மணிமேகலை துள்ளிக் குதித்து எழுந்து நின்றாள். "அக்கா! வேட்டைக்கு நாம் போகவில்லை; ஆனால் வேட்டை நம்மைத் தேடி வந்திருக்கிறது!" என்று கூவிக்கொண்டே இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்தாள்.

நந்தினியும் திடுக்கிட்டு எழுந்து மணிமேகலை பார்த்த திசையை நோக்கினாள். அங்கே சாய்ந்து படர்ந்திருந்த ஒரு பெரிய மரக் கிளையின் மீது சிறுத்தைப் புலி ஒன்று காணப்பட்டது. அந்தச் சிறுத்தை அவர்கள் மீது பாயலாமா, வேண்டாமா என்று யோசிப்பது போலப் பார்த்துக் கொண்டிருந்தது.

அதே சமயத்தில் சிறிது தூரத்தில் குதிரைகள் தண்ணீரில் இறங்கிப் பாய்ந்து வரும் சத்தமும் கேட்டது.

# தமிழ்க்களஞ்சியம்

டி.கே.சி

## 21. காஞ்சியின் வளமும் உண்டு!

அன்பு என்றால் எதையும் கொடுத்து விடச் சொல்லும்.

பக்தி என்றாலும் எதையும் அர்ப்பணம் பண்ணச் சொல்லும்.

இந்த உண்மையை மக்கள் நெடுகிலும் கண்டு அனுபவித்திருக்கிறார்கள், நாமும் இன்று கண்டு அனுபவிக்கிறோம்.

லக்ஷம் லக்ஷமாகச் செலவு செய்து கோயில்கள் இன்றும் எழுகின்றனவே? அந்த ரூபாயில் லக்ஷமோ கோடியோ பாங்கியில் கிடந்தால் கையை வந்து அழுத்தவா செய்யும்?

பக்தியானது பாங்கியில் இருந்த ரூபாயைக் கோயிலாகவும் கோபுரமாகவும் கட்டி நிறுத்துகிறது.

இத்தகைய பக்தியை எங்கே தெளிவாய்க் காண முடியும்?

* * *

காஞ்சிபுரத்தில் அழகான பாலாற்றங்கரையில்ப் பல சிவ பக்தர்கள் வந்து மூர்த்தியைப் படியில் வைத்து அபிஷேகம், புஷ்பம், சந்தனம் முதலிய பல உபசாரங்களையும் செய்து பூஜை செய்வார்கள். மணி ஓசையும், தேவார திருவாசகப் பாடல்களும் ஒரே முழக்கமாயிருக்கும்.

சிவ பூஜை செய்கிறவர்கள் காரியம் இப்படி இருக்க, ஒரு பெண் கையில்ச் சந்தனம், புஷ்பம் எல்லாம் எடுத்துக் கொண்டு ஆற்றுக்குள் இருக்கும் திடருக்குப் போவாள். ஸ்நானம் செய்து ஆசாரமாக உட்கார்ந்து மணலைக் குவிப்பாள்—சிவலிங்க சொரூபமாக எண்ணிக் குவிப்பாள். அந்தச் சொரூபத்தின் மேல் சந்தன அபிஷேகம் செய்து புஷ்பத்தைச் சாத்துவாள். தன் கழுத்தில் இருந்த ரத்னகண்டியையும் சாத்துவாள்.

அப்படியே அந்த மூர்த்தியைக் கை குவித்த வண்ணமாய்த் தியானித்துக் கொண்டிருப்பாள். நெடுநேரம் அந்த சமாதி நிலையில் இருப்பாள்.

கல் மூர்த்திதான் இருக்கும். ஆனால் உள்ளத்துக்குள் வெகு அழகாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் மூர்த்தி.

இவ்வாறு பல நாள் நடந்தது. படித்துறையில் இருந்து பூஜை செய்து வந்தவர்களுக்குப் பெண் செய்த காரியமெல்லாம் சிறு பிள்ளையின் விளையாட்டாகத் தோன்றியது. வெளிப்படையாக ஏளனம் செய்தும் வந்தார்கள் பெண்ணை.

இந்தச் சிவ பூஜைக் காரருக்கு உண்மையைக் காட்டி, பக்தியின் சொரூபத்தை வெளிப்படுத்த வேண்டுமென்று பட்டது சிவ பெருமானுக்கு.

ஒரு நாள் சிவ பக்தர்களுடைய பூஜை, படித் துறையில் மும்முரமாய் நடந்து கொண்டிருந்தது. மணி ஓசையும் பாடல்களும் ஒரே முழக்கம்.

பெண்ணோ தன்னுடைய மூர்த்தியின் (மணலால்க் குவித்த மூர்த்தியின்) முன் கண் மூகிழ்த்து கை குவித்தவாறாய்த் தியான சொரூபத்தில் அப்படியே அழுந்தியிருக்கிறாள்.

இந்தச் சமயம் பார்த்து சிவபெருமான் ஆற்றில் மெள்ள வெள்ளம் வரும்படி செய்தார். வெள்ளம் ஒரு அடி உயர்ந்தது. இரண்டடி உயர்ந்தது. மூன்றடி உயர்ந்தது. படிமேல் ஏறிவிட்டது.

சிவ பூஜா துரந்தரர்கள் மணியையும் மூர்த்தியையும் அப்படியே விட்டு விட்டு ஓடியே போய்விட்டார்கள் மேலே.

பெண் என்ன செய்தாள்! அவளைச் சூழ்ந்து கொண்டது வெள்ளம், கண்ணை விழித்துப் பார்த்தாள். இறைவன் கரைந்து போகிறதாகக் கண்டாள். அப்படியே மார்போடு அணைத்துக் கட்டிக் கொண்டாள் இறைவனை.

இந்த பக்தியைத்தான் அனுபவித்தார் சிவ பெருமான். கரைமேல் ஏறி நின்ற பக்தர்களும் பார்த்துக் கொண்டார்கள்.

ஒரு சிறு பெண்ணின் இதயத்தில் பக்தி எப்படிக் குடி கொண்டிருக்கும் என்பதைக் காட்ட வந்த விஷயம் இது.

காஞ்சிபுரத்தில் ஏகாம்பரேசுவரர் கோயில் வட்டத்தில் விளக்கொளி ஈசுவரர் என்பதாக ஒரு மூர்த்தி. வாடாத நெய் விளக்கு அந்த மூர்த்தியின் சந்நிதியில் எரிந்து கொண்டே இருக்கும். பக்கத்திலிருந்த பல ஊர்களிலும் அந்த மூர்த்திக்குப் பக்தர்கள் உண்டு. வரும்போதெல்லாம் நெய் கொண்டு வந்து

விளக்கை நிரப்பி மிச்சத்தை அர்ச்சகர்களிடம் கொடுத்து அந்தக் கைங்கரியத்தைச் செய்யச் சொல்லுவார்கள்.

ஐந்தாறு மைலில் இருந்து வந்த ஒரு பக்தர் இந்தக் கைங்கரியத்தை ஒழுங்காகச் செய்து வந்தார்.

ஊருக்குத் திரும்பிய பிறகும் அவருடைய உள்ளத்தில் விளக்கொளி ஈசுவரரும் திருவிளக்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். இந்த அனுபவம் எத்தனையோ பேருக்கு.

**கா**ஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயிலுக்கு உத்சவ காலங்களில் ஏராளமான பக்தர்கள் வருவார்கள். அவர்களுக்கு விருந்தளிப்பதற்குக் காஞ்சிபுரத்தில் எத்தனை எத்தனையோ பேர். இந்த விருந்தோம்பல் பக்தியோடு கலந்து காஞ்சிபுரத்தில் உள்ள பிரபுக்களுக்கு அசைக்க முடியாத இயற்கைத் தத்துவமாய்ப் போய்விட்டது. ஏதோ ஐம்பது பேர் நிற்கிறார்கள் அங்கே, அவர்கள் சாப்பிட வேண்டும் என்று தெரிந்த உடன் சாப்பிட உட்கார்ந்தவருக்குச் சாப்பிட ஓடாது. ஐம்பது பேரையும் அழைத்து வரச் சொல்லுவார். ஒரு மணி நேரத்தில் சமையல் ஆய்விடும். வளமான சமையல். தானும் உட்கார்ந்து சந்தோஷமாய்ச் சாப்பிடுவார்; அன்றைக்கு அபார திருப்தி மனசுக்கு.

சாப்பிட்டுத் தாம்பூலம் எல்லாம் கொடுத்த உடன், "உத்சவம் முடியும் வரை இங்கேயே சாப்பாடு வைத்துக் கொள்ள வேண்டும்" என்று அருமையுடன் சொல்லிக் கோயிலுக்கு அனுப்புவார். இப்படி எத்தனையோ பிரபுக்கள் காஞ்சிபுரத்தில்.

**கா**ஞ்சிபுரமும் அதன் சுற்று வட்டமும் பாலாற்றங்கரையின் வளத்தினால் ஒரே வளம். நெல்லோ துவரையோ கறிகாய் வர்க்கங்களோ ஏதேஷ்டம்.] அப்படியேதான் நெய்யும் பாலும்.

* * *

**வி**ளக்கொளி ஈசுவரரது பக்தரைத்தான் பார்த்தோமே. அவரும் அவரைப் போல் பலரும் காஞ்சிபுரத்துக்கு வருவதில் கஷ்டமுண்டா? விருந்துண்டு, உத்சவத்தை அனுபவிப்பதில் கஷ்டம் உண்டா, இல்லை. கொஞ்சமும் இல்லை.

அவருடைய சகாக்களைப் பார்த்து ஒரே ஆனந்தத்தில் பேசுகிறார். "ஏகாம்பரேசுவரர், காமாட்சி அம்மன் சந்நிதிகள் இருக்கின்றன. விளக்கொளி ஈசுவரர் சந்நிதி இருக்கிறது. வள்ளல்கள் இருக்கிறார்கள். காஞ்சியின் வளங்களும் இருக்கின்றன.

பூண்தாங்கு கொங்கை
　பொரவே குழைபொருப்பும்,
தூண்டாத தெய்வச்
　சுடர்விளக்கும்—நாண்தாங்கு
வண்மையால் சான்றவரும்,
　காஞ்சி வளம்பதியும்
உண்மையால் உண்டிவ்
　உலகு.

[பூண்தாங்கு கொங்கை பொரவே குழைபொருப்பும்: பக்தி மயமான பெண்ணின் ஸ்தனியம் அழுத்திய காரணமாகக் குழைந்த மலை—இறைவன் என்ன காரணத்தினாலும் அசையாது நிலைத்த பொருள் என்பதைக் குறித்து மலை என்கிறார்கள்; தூண்டாத தெய்வத் திருவிளக்கும்: வாடா விளக்குப் போல் என்றென்றும் ஒளி விட்டுக் கொண்டிருக்கிற இறைவன்; நாண் தாங்கு வண்மையால் சான்றவரும்: பிறர் உண்ணாமல் இருக்கத் தான் உண்ண முடியாத உயர்ந்த வள்ளல் தன்மை உள்ளவரும்; உண்மையால் உண்டு இவ் உலகு: உண்டு என்றிருத்தலால் உலகமும் பக்தர்களும் இருக்கிறார்கள்; அல்லாத பக்ஷம் காஞ்சியாவது காமாவது.]

சமயப் பண்பாட்டையும் சமுதாயப் பண்பாட்டையும் அழகாய் எடுத்துக் காட்டுகிறது பாடல்.



புதுடெல்லி நகரில், தமிழ்நாடு புயல் நிவாரணக் கமிட்டியார் சென்ற ஜனவரி மாதம் 10, 11 தேதிகளில் ஒரு கதம்ப நிகழ்ச்சி நடத்தினர். அதில் மதராஸி பள்ளிப் பெண்களின் கோஷ்டி நடனம் சிறப்பாக நடைபெற்றது.

இதுவரை ரூ. 2,700 புயல் நிவாரண நிதிக்கு அனுப்பியிருப்பதாக அறிகிறோம்.

# பொருத்தமான பிலிம் தெரிந்தெடுப்பதில் இருக்கிறது உங்கள் ஸ்னேப்ஷாட்டுகளின் தராதரம்





**மங்கலான வெளிச்சம் அல்லது துரிதமான செயல்படங்களுக்கு:** உங்களுக்கு 'கோடக்' சூப்பர்-XX தேவை. அது துரிதமானது, மங்கிய ஒளியில் கூட நல்ல படங்கள் தருகிறது. தவிர, எல்லா நிறங்களையும் எடுப்பது. செயற்கை வெளிச்சத்திற்கு இன்றியமையாதது.

சூப்பர் - X X





**சிறந்த பிரிண்டுகள் மற்றும் பெரிய என்லார்ஜ்மெண்டுகளுக்கு:** 'கோடக்' ப்ளஸ்-X சிறந்தது. சிறு பேதங்களை அப்பட்டமாகச் சிறப்புறுத்தக்கூடிய பிலிமாகையால் இது சிறப்பான பிரிண்டுகள் தருகிறது. ஏறக்குறைய சூப்பர்-XX பிலிமின் வேகமும் இதற்குண்டு.

ப்ளஸ் - X





**வெளியிடங்களில் சாதாரண படங்கள் எடுக்க:** 'கோடக்' வெரிக்ரோம் உபயோகியுங்கள். அதன் அபார எக்ஸ்போஷர் வசதி காரணம், அநேகமாக எல்லா வெளிச்ச நிலைமைகளிலும் நல்ல படங்கள் தருகிறது. ஸ்திரமான லென்ஸ் அல்லது ஷட்டர் வேகமுள்ள எளிய காமிராக்களுக்கு விசேஷ தகுதி வாய்ந்தது.

வெரிக்ரோம்



## 'கோடக்' பிலிமில் நீங்கள் எப்பொழுதும் சிறப்பான படங்கள் தயாரிக்க முடியும்

கோடக் லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது) பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

ராஜகோபுரத்தின் முன் தோற்றம்



# மறைந்த ஆலயம் எழுந்தது

தர்மமும் தெய்விக ஸ்தாபனங்களும் சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தவை. அவற்றை யாராலும் அழிக்க முடியாது. ஒருவேளை சில கொடிய மூர்க்கர்களின் நாசவேலைகள் காரணமாக அவை தற்காலிகமாக மறைந்தாலும் மீண்டும் அவை உயிர் பெற்று விடும் என்பதில் சந்தேகம் இல்லை.

இந்த அற்புதத்துக்கு இந்திய சரித்திரத்தில் எத்தனையோ உதாரணங்கள் இருக்கின்றன. சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கஜனி முகம்மது செளராஷ்டிர நாட்டில் அடியோடு நாசம் செய்த சோமநாதர் ஆலயம் இன்று புனர் நிர்மாணமாகிப் புனித சோபையுடன் விளங்குவதைக் காண்கிறோம்.

அது போலவே மூன்று நூற்றாண்டுகளுக்கு முன், அதாவது 1624-ம் ஆண்டில் அழிக்கப்பட்ட திரிகோணமலை ஆலயம் இன்று மறுபடியும் இலங்கையில் கம்பீரமாகக் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது.

இலங்கையில் நாயன்மார்களினால் தேவாரப் பதிகம் பாடிப் புகழ் பெற்ற சிவ ஸ்தலங்கள் இரண்டாகும். ஒன்று, திருக்கேதீச்சுவரம்; இன்னொன்று திரிகோணமலை.

முந்நூற்று முப்பது வருஷங்களுக்கு முன் போர்ச்சுகீசியர்கள் இலங்கையில் படையெடுத்தபோது, திரிகோணமலை ஆலயத்தைத் தகர்க்கும் கைங்கர்யத்தில் ஈடுபட்டனர். அப்போது அந்தக் கோவிலைச் சேர்ந்த குருக்கள் போர்ச்சுகீசியர்களுக்குத் தெரியாமல் கோவிலில் இருந்த சில மூல விக்கிரகங்களை எடுத்துச் சென்று விட்டார். பிறகு தம்பல காமம் என்ற கிராமத்தில் ஒரு கோவிலை நிர்மாணித்து, அந்த விக்கிரகங்களை அதில் பிரதிஷ்டை செய்தார்.

தம்பல கிராமம் மிகப் புராதனமான திரிகோணமலை க்ஷேத்திரத்துக்குத் தென் மேற்கே பதின்மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது.

மேற்கூறிய நிகழ்ச்சிக்குப் பிறகு வெகு காலம் வரையில் அச்சிறிய கோவில் கவனிப்பாரற்றுக் கிடந்தது.

அந்தக் குறை இலங்கையில் உள்ள பக்தர்களின் மனதை உறுத்தி வந்தது. கடைசியாக அவர்களுடைய அபீஷ்டம் நிறைவேறும் காலம் வந்தது. பக்தர்களுடைய கோரிக்கைக்கு இணங்க, பதினெட்டு மாதங்களுக்கு முன் அந்த ஆலயத்தின் டிரஸ்டி போர்டார் அக்கோவிலின் திருப்பணி வேலைகளை மும்முரமாக ஆரம்பித்தனர்.

1951 ஜூன் மாதம் இலங்கைக் கல்வி மந்திரி ஸ்ரீ கனகரத்னம் கோபுர நிர்மாணத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டினார்.

டிரஸ்டி போர்டுத்தலைவர் ஸ்ரீ எஸ். சிவபாலரின் இடைவிடா முயற்சியினால் திரிகோணேசுவரர் ஆலயம் பக்தர்களின் மனம் குளிர மறுபடியும் காட்சி அளித்துக் கொண்டிருக்கின்றது. அங்கு பழைய ஆலயத்தைப் புதுப்பித் திருப்பதுடன், புதிதாகவும் சில சன்னிதிகள் நிர்மாணிக்கப் பட்டிருக்கின்றன.



ஸ்ரீ சிவபாலர்

கோயிலுக்கு ராஜ கோபுரம் எழுப்பப்பட்டிருக்கிறது. மேற்படி கோபுரம் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஸ்வாமி கோவில் கோபுரத்தின் அளவு உயரமாக இருக்கிறது.

* * *

சுதினமான சென்ற ஜனவரி மாதம் 20-ந் தேதி மேற்படி ஆலயத்தின் மகா கும்பாபிஷேக வைபவம் வெகு விமரிசையாக நடந்தது. அந்த வைபவத்தைக் கண்டு களிப்பதற்காகக் கொழும்பிலிருந்து இலங்கை உதவிப் பிரதம மந்திரி சர் ஜான் கொத்தலவாலா, தபால்

தந்தி இலாகா மந்திரி ஸ்ரீ எஸ். நடேசப் பிள்ளை, இலங்கை இந்தியர் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ எஸ். தொண்டைமான் முதலிய பிரமுகர்களும் ஏராளமான அதிகாரிகளும் ஆயிரக்கணக்கான பக்தர்களும் விஜயம் செய்திருந்தனர்.

புனர் நிர்மாணம் செய்த கோயிலில் ஈசுவரன், அம்மன் கோவில்களைப் பழுது பார்த்துப் புதுப்பித்திருக்கிறார்கள். இராஜ கோபுரம், நடராஜ சபை, பள்ளி அறை, பைரவ மண்டபம், மடப்பள்ளி முதலியவைகளை நிர்மாணித்திருக்கிறார்கள். மதில்களைப் பழுது பார்த்துப் புதிய கோபுரத்துடன் அழகாக இணைத்திருக்கிறார்கள்.



ஸ்ரீ நடராஜர், அம்மன் விக்ரகங்கள்

ஏழு கலசங்களுடன் கூடிய புதிய ராஜ கோபுரம் அறுபத்தைந்தடி உயரம் கம்பீரமாக எழுந்து நின்று காட்சியளிக்கிறது. புதிய கோபுர நிர்மாண சம்பந்தமாகச் சாஸ்திரீய முறைகளைக் கையாண்டிருக்கிறார்கள். வான வில் வர்ணங்களில் கோபுரம் சாஸ்திரோக்தமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது.

கும்பாபிஷேக வைபவம் முடிந்ததும் சர் கொத்தலவாலா, மேற்படி திருப்பணி வேலைகளை மேற்பார்வையிட்டு வெற்றிகரமாக முடித்த சென்னை சிற்ப ஆலோசகரும் இஞ்சினியருமான ஸ்ரீ வை. மு. நரசிம்மனுக்கு வெள்ளிப் பேழை பரிசளித்தார். கோவில் நிர்மாண வேலையின் பிரதம சிற்பி ஸ்ரீ வைத்தியநாத ஸ்தபதிக்குத் தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது.

* *

கம்பீரமான இராஜ கோபுரத்துடன் இப்போது விளங்கும் ஸ்ரீ கோணேசுவரர் ஆலயம்தான் இலங்கையிலேயே அழகான கோயிலாகும். மேற்படி ஆலய நிர்மாணம் இலங்கையில் உள்ள சைவ சமயத்தினருக்கு மிகுந்த உற்சாகத்தையும் ஊக்கத்தையும் உண்டு பண்ணியிருக்கிறது. எனவே பலரும் தங்கள் தங்கள் ஊரில் ஆலயம் நிர்மாணிப்பதற்கான முயற்சி எடுத்துக் கொண்டு வருகிறார்கள். யாழ்ப்பாணத்தில் வண்ணார்பண்ணையில் உள்ள ஆலயத்துக்கும் திரிகோணேசுவரர் ஆலயத்தில் இருப்பது போல் அழகிய கோபுரம் நிர்மாணிக்க உத்தேசித்திருக்கிறார்கள்.

இத்தகைய முயற்சிகளினால் இந்தியா-இலங்கைக் கலாச்சாரத் தொடர்பு மேலும் வலுவடையும் என்பதில் சந்தேகமில்லை.

அம்மன், சண்டிகேசுவரர், ஈசுவரன் சன்னதி விமானங்கள்






'சிரஞ்சீவி சுகுமாருக்கு அனேக ஆசிர்வாதம்' என்று எழுதினேன். அதற்கு மேல் என்ன எழுதுவது, எப்படி எழுதுவது என்று எனக்குப் பிடிபடவில்லை. வெகுநேரம் என்னவெல்லாமோ யோசித்துப் பார்த்தேன். ஊஹூம்! ஒன்றும் சரியாகப் படவில்லை. மறுபடியும் ஒருமுறை சுகுமாரிடமிருந்து வந்த கடிதத்தைப் படித்துப் பார்க்கலானேன்.

"மகா-ள-ள-ஸ்ரீ அப்பா அவர்களுக்கு. அனேக வணக்கங்கள். இங்கே என்னுடன் ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் மிஸ். சுலோசனாவைப் பற்றி உங்களுக்கு அடிக்கடி எழுதியிருக்கிறேன். அந்த சுலோசனாவுக்கும் எனக்கும் திருநீர்மலையில் வருகிற ஞாயிற்றுக்கிழமை மிக எளியமுறையில் கல்யாணம் நடக்கப் போகிறது. நீங்கள் இந்தக் கடிதத்தைப் பார்த்தவுடனே அடுத்த ரயிலில் புறப்பட்டு வந்து சேரவும்.

நமஸ்காரம்

சுகுமார்."

இந்தக் கடிதத்தை, அன்று நூறு தடவை படித்திருப்பேன். படித்துவிட்டு நான் விட்டுள்ள பெருமூச்சுகளுக்கு ஒரு அளவு இல்லை. மனத்தில் எழுந்த எண்ண அலைகளுக்கும் ஒரு வரை துறை இருந்திருக்குமா?

'சுகுமார்! உன்னை எப்படியெல்லாமடா வளர்த்தேன். தாய் இல்லாப் பிள்ளையாயிற்றே என்று உன் மீது எவ்வளவு பாசம் வைத்து, எவ்வளவு சிரத்தையுடன் வளர்த்தேன். அப்படியெல்லாம் வளர்த்தது, என் தவறு என்று என்னை எண்ணச் சொல்லுகிறாயா? பின், ஏன் இத்தகைய கடிதம் எழுதினாய்?

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இது தானா? என்னை ஒரு வார்த்தைகூடச் சம்மதம் கேட்காமல் 'கல்யாணம் நடக்கப் போகிறது' என்று அழுத்தந் திருத்தமாக எழுதினாயே? இதுதானா முறை? இதுதானா......' என்றெல்லாம் என் மனத்தில் ஆற்ற முடியாத தாபம் ஏற்பட்டது. இந்தத் தாபத்தையெல்லாம் கடிதத்தில் கொட்டி விடுவோமா என்று எண்ணினேன். அப்படி எழுதினால் என்ன பயன் ஏற்பட்டுவிடப் போகிறது? என்மேல் அவனுக்கு வெறுப்புத்தான் ஏற்படும். என்னை அவன் தன் தந்தையென்றுகூட அங்கீகரிக்க விரும்ப மாட்டான்! ஆம், நான் அப்படியெல்லாம் என் உணர்ச்சியைக் கொட்டிக் கடிதம் எழுதினால், தன் தந்தை இறந்து விட்டார் என்று சுலபமாகத் தீர்மானித்து விடுவான். ஆனால் அவன் என் பிள்ளை என்பதை, அந்தப் பிள்ளைப்

பாசத்தை, வளர்த்த தோஷத்தை என் உள்ளத்திலிருந்து களைந்து எறிந்து விட முடியாதே. ஆகவே, அவனுக்கு நான் நயமாகத் தான் கடிதம் எழுதியாக வேண்டும்.

ஆகவே, அடுத்த வரி, பின்வருமாறு எழுத ஆரம்பித்தேன்.

“உன் கடிதம் வந்து சேர்ந்தது. உனக்குக் கல்யாணம் என்கிற......”

இப்படி எழுத ஆரம்பித்தால் கட்டாயம் என்னைப் பற்றித் தவறாக நினைத்துக் கொள்வான். ஆம், 'கல்யாணம் என்கிற விஷயம் கேள்விப்பட்டேன்' என்று எழுதினால், அவன் சந்தோஷத்தில் நான் பட்டும் படாமலுமிருக்கிறேன் என்றுதான் நினைப்பான். அவன்தான் என்னைக் கேட்காமல் தன் கல்யாணத்தை நிச்சயித்துக் கொண்டு விட்டான் என்பதற்காக நான், அவன் கல்யாண விஷயத்தில் ஏனோதானோ என்றிருப்பது சரியல்ல. அவன் கல்யாணத்தில் என் பரிபூரண மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டேயாக வேண்டும்.

சுகுமார் சின்னஞ் சிறு குழந்தையாக இருந்தபோது, அவன் எதையாகிலும் நினைத்துக் கொண்டு அழுதானானால் என் மனசு என்ன பாடுபடும்! அவன் விரும்புவதை வாங்கிக் கொடுத்து, அவன் முகத்தில் மகிழ்ச்சிக்

# சிரஞ்சீவி சுகுமார்

எஸ்.வி.எஸ்

குறியைக் கண்டால் அல்லவோ என் மனசு நிம்மதியடையும். ஆம், சுகுமார் தாயில்லாக் குழந்தை. தாயில்லாக் குழந்தைக்கு நம்மை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள் என்று கண்ணில் மணியைப் போல் அவனைக் காப்பாற்றி வந்தேன்.

மேலும், அவன் தாயார் இருபது வருஷங்களுக்கு முன்பு சொல்லி விட்டுப் போனது, நேற்று சொன்னாற்போல் என் மனசில் இன்னும் பசுமையாக இருக்கிறது. அப்போது சுகுமாருக்கு ஐந்து வயதிருக்கும். அவனைப் பக்கத்தில் அழைத்து வைத்துக் கொண்டு கண்ணை மூடுவதற்குப் பத்து நிமிஷங்களுக்கு முன்பு, “சுகுமாருக்கு நீங்கள் இத்தனை நாளும் தகப்பனாராக இருந்தீர்கள். இனிமேல் நீங்கள்தான் அவனுக்குத் தாயாராகக்கூட இருக்க வேண்டும்” என்று கூறி விட்டுச் சென்றாள். சுகுமாருக்கு எங்கே நான் மாற்றாந் தாயை அளித்து விடுவேனோ, மாற்றாந்தாயின் கொடுமைக்குச் சுகுமார் எங்கே உள்ளாகி விடுவானோ என்று அவள் பயந்திருக்கிறாள் என்று உணர்ந்து, இன்று வரை அவனுக்கு நானே தாயாக இருக்கும் பொறுப்பை ஏற்று, அவள் வார்த்தையைக் காப்பாற்றி வந்திருக்கிறேன்.

அவள் இறந்து இன்றைக்குக் கிட்டத்தட்ட இருபது வருஷங்கள் ஆகின்றன. இந்த இருபது வருஷங்களில் சுகுமாரை வளர்த்ததில் நான் எவ்வளவு கஷ்டங்கள் பட்டிருக்க வேண்டும். நான் பட்ட கஷ்டத்தைப் பற்றி நினைந்து வருந்தவில்லை. நான் கஷ்டப்பட்டதனாலன்றோ, இன்று சுகுமார் டாக்டர் பட்டம் பெற்று சென்னையில் பிரபல டாக்டராக விளங்குகிறான். என் புதல்வன், புகழ் பெற்ற டாக்டர் என்பதில் எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சி தான். ஆயினும் தன் கல்யாண விஷயத்தில் ஒரு வார்த்தைகூட என் சம்மதத்தைக் கோராமல் அவன் தீர்மானித்ததைத்தான் என் மனசு ஆற்ற மாட்டாமல் தவிக்கிறது.

சுகுமார், உன் தாயார் இருந்திருந்தால் இப்படி அவளை ஒரு வார்த்தை கூடச் சம்மதம் கேட்காமல் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்திருப்பாயா? என்னை அலட்சியப் படுத்தியது போல் அவளையும் அலட்சியம் செய்ய உன் மனசு சம்மதித்திருக்குமா?

இந்த நவநாகரிக உலகத்தில், ஹிந்து சம்பிரதாயங்கள் எல்லாம் தலை கீழாக மாறி வரும் இந்நாட்களில், நீ எப்படி நடந்து கொள்வாய் என்று ஒன்றும் சொல்வதற்கில்லை. என்னை அலட்சியம் செய்ததுபோல், உன் தாயாரையும் அலட்சியப் படுத்தியிருந்தாலும் வியப்பதற்கில்லை.

அப்பா, சுகுமார்! பத்து மாதம் சுமந்து பெற்ற வயிறு, இந்த அலட்சியத்தைத் தாங்காது! அவள் மனம் ரொம்பவும் புண் பட்டிருக்கும்! அவள் போனதே நல்லதாயிற்று!

சுகுமார்! உன் தாயார் இறந்து இருபது வருஷத்துக்கு மேலாகிறது. இத்தனை நாட்களில் அவள் மறைவைப் பற்றி நான் வருந்தாத நாளில்லை. ஆனால் இன்று அவள் போனது நல்லதாயிற்று என்று நினைக்கும் படி செய்தாயே! சுகுமார், இதற்கு உனக்கு என்ன கைம்மாறு செய்வது என்று தெரியவில்லையடா?

சீ...சீ...இதெல்லாம் என்ன பைத்தியக்கார எண்ணங்கள். சுகுமாரைப் பற்றி இப்படியெல்லாம் நான் நினைப்பது கொஞ்சங்கூட நன்றாக இல்லை. இளமைப் பருவம். பருவ உணர்ச்சியால் உந்தப் பட்டு ஒரு காரியம் செய்தானானால் அதற்காக நான் இப்படி வருந்தலாமா? அல்லது அவனைத்தான் நோகலாமா? தகப்பனார் என்றால் மகனுடைய குற்றங் குறைகளைப் பொறுக்கத் தான் வேண்டும்! மேலும் அப்படித்தான் அவன் என்ன மாபெருங்



குற்றம் செய்துவிட்டான்? பார்க்கப் போனால் ஒன்றுமே இல்லை! கல்யாண விஷயம் அவன் சொந்த விஷயம்! அவன் யாரைக் கல்யாணம் செய்து கொள்கிறானோ, அவளுடன் வாழப் போகிறவன் அவனேயன்றி நானல்ல! இதற்கு என் சம்மதம் கேட்க வேண்டும் என்று என்ன வந்தது?

இப்படி மனசை என்னதான் மாற்றிக் கொள்ள முயன்றாலும் மாற மாட்டேன் என்கிறதே! இது என்ன கஷ்டம்! 'கல்யாணம்—அவன் சொந்த விஷயம்' என்று எண்ணி எப்படி நீ சும்மா இருக்க முடியும்? அவன் மண வாழ்க்கை மகிழ்ச்சி கலந்த வாழ்க்கையாக இருந்தால் தானே உனக்கும் மகிழ்ச்சி! அவன் இல்வாழ்க்கை துயரம் தோய்ந்த வாழ்க்கையாக இருந்தால், 'அவன்பாடு, அவன் தலைவிதி' என்று நீ நிம்மதியாக இருந்து விடுவாயா என்று என் உள் மனசு கேட்கிறதே! அவன், உன் சம்மதத்தைக் கேட்டுத்தான் இருக்க வேண்டும். தெரியாமலா, பெரியோர்கள் குலம், கோத்திரம் பார்த்து, மணப் பருவம் எய்திய வாலிபர்களுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள் அந்த நாட்களில்?......

போதும், இந்த யோசனைகள். இனி என் கடிதத்தைத் தொடர்கிறேன். முதலில் சரியாக வரவில்லை. ஆகவே முன் வரியை நன்றாக அடித்து விட்டு:

"உனக்கும் சுலோசனாவுக்கும் திருமணம்......"



டெல்லித் தமிழ்ச் சங்கத்தினர் பொங்கல் புது நாளை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். அன்று நடன விருந்தளித்த குமாரி யமுனாவையும், குமாரி கமலாவையும் அவர்களுடைய நடன ஆசிரியரான ஸ்ரீ பக்கிரி சாமியையும் டெல்லிவாசிகள் பாராட்டினர்!

சுலோசனா! இந்தப் பெண் யார்? என்ன குலம்? என்ன கோத்திரம்? ஒன்றுமே தெரிந்து கொள்ள வேண்டாமா? அவள் பெற்றோர் யார், என்ன செய்கிறார்கள், என்ன வென்பதை விசாரிக்க வேண்டாமா?

ஒன்றும் வேண்டாம்தான்! காலத்தோடு தானே நாமும் ஒட்டி வாழ வேண்டும்! ஆகவே, ஜாதகப் பொருத்தம் எல்லாம் பார்க்க வேண்டிய அவசியமில்லை; மனப் பொருத்தம் இருந்தால் சரிதான்!

குலம், கோத்திரம் விசாரிக்கும் பழம் சம்பிரதாயத்தில் பொருள் இருப்பதாக இன்றைய நாகரிகத்துக்கு உருவளிக்கும் பெரியோர்களே ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். தற்கால விஞ்ஞான ரீதியாகக்கூட அந்தப் பழைய கோட்பாடு சரியானதே என்று பலர் கூறுகிறார்கள். ஒரு குடும்பத்தில் மூன்றாவது தலைமுறையில் ஒருவன் அயோக்கியனாகப் பிறந்திருந்தானானால், இந்தத் தலை முறையில் பிறக்கும் குழந்தை அயோக்கியனாக மாற ஏதுவுண்டு என்பதெல்லாம் சுகுமாருக்குத் தெரிந்துதான் இருக்கும். டாக்டர் பரீட்சை எழுதிப் பட்டம் பெற்ற அவனுக்கு உயிர் வர்க்க சாஸ்திரத்தின் இந்தச் சாமான்ய உண்மை தெரியாமல் போக நியாயமில்லை. ஆகவே, அந்தப் பெண் - சுலோசனா - நல்ல குலத்தைச் சேர்ந்த மங்கையாகத்தான் இருக்க வேண்டும்! ஆயினும், அவன் ஒரு வார்த்தைகூட என்னைக் கேட்காமல் தன் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டான் என்பது எனக்குப் பெருத்த மன வருத்தத்தை விளைக்கிறது!

'தந்தை' என்றால் இப்படியெல்லாம் அல்லலும் துன்பமும் அடைய வேண்டியதுதான் இயற்கை போலும்.

ஐயோ! இதென்ன இந்தக் கடிதம் இத்தனை தடவை ஆரம்பித்து மேலே தொடர முடியாமல் நின்று போகிறது. இனி வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாமல் கடிதத்தை எழுதி முடிக்கிறேன்.

"சுலோசனாவைப் பற்றி நீ எனக்கு அடிக்கடி எழுதியிருக்கிறாய். அவள் உன் மனசுக்குப் பிடித்த மங்கையென்றால் எனக்கு ஒரு ஆட்சேபமுமில்லை. எங்கேயோ நீ க்ஷேமமாய்க் குடியும் குடித்தனமுமாக இருந்தால் சரி."

என்ன இது? நான் என்ன, எழுதும் சக்தியையே இழந்து விட்டேனா? என் அருமைப் புதல்வன் சுகுமாரின் கல்யாண விஷயத்தைக் கேட்டு, என் மனப்பூர்வமான நல் ஆசியையும் ஆனந்தத்தையும் தெரிவித்துக் கொள்ள முடியவில்லையே! என் உள்ளத்தை, என் வார்த்தைகளால், என் பேனாவினால் மறைத்துக் கொள்ள முடியவில்லையே!

* * *

பாம்...பாம்... பாம்...என்று சத்தமிட்டுக் கொண்டு என் வீட்டு வாயிலில் ஒரு மோட்டார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

நான் எழுந்திருந்து, வாசலில் யார் வந்து இறங்குகிறார்கள் என்று பார்க்கப் போனேன்.

டாக்ஸியை விட்டு முதலில் சுகுமார் இறங்கினான். அவனுக்குப் பின்னால் முகத்தில் லட்சுமி களை தவழ ஒரு நவநாகரிக மங்கை இறங்கினாள். அவள், என் மருமகளாகப் போகிறவளாகத்தான் இருக்க வேண்டும்; சுலோசனாவாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். ஆயினும், சற்றும் எதிர்பாராத சமயத்தில் இவர்கள் வந்து சேர்ந்தது எனக்கு ஒரு புறமும் ஆச்சரியமும் சஞ்சலமும் அளித்தன! ஆகவே, அவர்களை வாய் நிறைய 'வா' என்றுகூட என்னால் சொல்ல முடியவில்லை.

ஆனால் சுகுமார் உள்ளே நுழைந்ததுமே, "அப்பா! இவள்தான் உங்கள் புதிய மருமகள், சுலோசனா! இவளும் ஒரு எம். பி. பி. எஸ். இவள்தான் உங்களை நேரில் பார்த்து, எங்கள் கல்யாணத்துக்கு உங்கள் சம்மதத்தையும் ஆசீர்வாதத்தையும் பெற்றுக் கொண்டு, உங்களையும் கையோடு கல்யாணத்துக்கு அழைத்துப் போக வேண்டும் என்று சொன்னவள்.

"நான் எவ்வளவோ சொன்னேன். 'உன்னை நேரில் பார்க்காவிட்டாலும் அப்பாவுக்கு உன்னைப் பற்றி நன்றாகத் தெரியும். நான் பல தடவை எழுதியிருக்கிறேன். நீ ஒரு கவலையும் படாதே! அவர் நம் கல்யாணத்துக்கு நிச்சயம் சம்மதிப்பார்!' என்று. அவள்தான், 'அதெல்லாம் முறையாகாது; மரியாதையாகாது. அப்பாவை நேரில் பார்த்து அவர் சம்மதத்தையும் ஆசியையும் பெற வேண்டும்' என்று கூறிவிட்டாள். அதனால்தான் உங்களுக்குக் கடுதாசி எழுதின கூட்டோடு புறப்பட்டு வந்து விட்டோம். இனிமேல் அப்பா உங்கள் சம்மதத்தைத் தெரிவிக்க வேண்டியதுதான்—சுலோசனா காதில் விழும்படியாக" என்றான்.

சுகுமார் சொல்லி முடிக்கவில்லை. சுலோசனா பஞ்ச அங்கங்களும் பூமியில் பட பாரதப் பெண் குலத்தின் முறைப்படி வணங்கினாள்.

அப்பொழுது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி கொஞ்ச நஞ்சமல்ல. மேல் நாட்டுப் பவுடரும், மேல் நாட்டுப் படிப்பும் இன்னும் நம் பெண் குலத்தின் உள்ளத்திலிருந்து பாரதப் பண்பைப் பரிபூரணமாகத் துடைத்து விடவில்லை என்பதை எண்ணி மகிழ்ந்தேன்.

"சுகுமாருடைய இஷ்டத்துக்கு மாறாக, இந்த இருபத்தைந்து ஆண்டுகளில், ஒரு நாளாவது ஒரு காரியமாகிலும் செய்தறியேன், அம்மா! பின், உன்னைப் போன்ற பத்தரை மாற்றுக் குணவதியைத் தன் வாழ்க்கைத் துணையாக அவன் தேர்ந்தெடுத்திருக்கும்போது, அவன் அபிப்பிராயத்துக்குச் சம்மதம் தெரிவிப்பதன்றி வேறு என்ன சொல்ல முடியும்? நீங்கள் இருவரும் என்னாளும் இன்பமாக வாழவேண்டும் என்பதே என் விருப்பம். ஆண்டவனிடம் நான் செய்து கொள்ளும் பிரார்த்தனையும் அதுவே."

இதைக் கேட்டுக் கொண்டே எழுந்து நின்ற சுலோசனா, நாணத்தினால் தலை குனிந்த வண்ணம் என் மேஜை பக்கமாக வந்தாள்.

உடனே நான் மேஜைமேலிருந்த பூர்த்தி பெறாத கடிதத்தை, அவள் எங்கே பார்த்து விடுவாளோ என்று பயந்து கொண்டே எடுத்துச் சுக்கு நூறாகக் கிழித்து எறிந்தேன்.

# ஹரிஜனத் தலைவரின் மறைவு

காங்கிரஸ் மகா சபையின் காரியக் கமிட்டி அங்கத்தினரும் சிறந்த ஹரிஜனத் தலைவருமான ஸ்ரீ வி.ஐ. முனுசாமிப் பிள்ளை அவர்கள் காலமானது தேசத்துக்கும் முக்கியமாகத் தமிழ் நாட்டுக்கும் பெரும் நஷ்டமாகும். அறுபத்தினாறு வயதான ஸ்ரீ பிள்ளை தமது வாழ்க்கையில் முப்பது வருஷ காலம் ஹரிஜன சமூகத்துக்குத் தலைமை வகித்து அரிய தேசத் தொண்டு புரிந்து புகழ் பெற்றார்.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன் சென்னை ராஜாஜி மந்திரி சபையில் ஸ்ரீ முனுசாமிப் பிள்ளை விவசாய, கிராம அபிவிருத்தி மந்திரி பதவி ஏற்றுத் திறம்பட வகித்தார். பிரிட்டிஷ் சர்க்காரின் யுத்தக் கொள்கையைக் கண்டித்து ராஜாஜி மந்திரி சபை ராஜிநாமா செய்தபோது, ஸ்ரீ முனுசாமிப் பிள்ளையும் மந்திரி பதவியை உதறித் தள்ளினார். பிறகு அவர் காந்தி மகான் தலைமையில் நடந்த தனிப்பட்டவர்களின் சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றார்.


ஸ்ரீ வி.ஐ. முனுசாமிப் பிள்ளை

பாரத நாடு சுதந்திரம் பெற்ற பின் அமைக்கப் பட்ட அரசியல் நிர்ணய சபையிலும் ஸ்ரீ முனுசாமிப் பிள்ளை அங்கம் வகித்து அரும் தொண்டு புரிந்தார்.

பொதுஜன க்ஷேமார்த்தமான பல ஸ்தாபனங்களிலும் ஹரிஜன முன்னேற்றத்துக்காக உழைக்கும் சங்கங்களிலும் ஸ்ரீ முனுசாமிப் பிள்ளை முக்கிய பங்கெடுத்துக் கொண்டு வந்தார்.

அப்படிப்பட்ட ஒரு தலைவர் காலமானதைப் பற்றி மிகவும் வருந்துகிறோம். அவரது குமாரரும் பார்லிமெண்டு அங்கத்தினருமான ஸ்ரீ சுரேந்திர ராமுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# அரசியல் மேதையின் பிரிவு

நிர்வாகத் துறையில் சுதந்திர சர்க்காருக்குப் பேருதவி புரிந்து வந்த ஸ்ரீ என். கோபாலசாமி ஐயங்கார் காலமானது பாரத தேசத்துக்கு ஈடு செய்ய முடியாத பெரும் கஷ்டமாகும். பிரிட்டிஷார் காலத்தில் நிர்வாகத் திறமைக்குப் பெயர் போனவராயிருந்த ஸ்ரீ ஐயங்கார் பல பெரிய பதவிகளை வகித்தார். உத்தியோக வாழ்க்கையிலிருந்து விலகி ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டிய சமயத்தில் அவரைப் பல உயர்ந்த பதவிகள் தேடி வந்தன. அப்போது பெரும் குழப்பத்தில் ஆழ்ந்திருந்த காஷ்மீர் ராஜ்யத்தின் முதன் மந்திரியாகப் போனார். அங்கே காஷ்மீர் மன்னருக்கும் பிரஜைகளுக்கும் அச்சமயம் தீவிரப் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. அப் போராட்டத்தில் ஸ்ரீ என். ஜி. ஐயங்கார் பிரஜைகளின் கட்சியில் நியாய நெறியில் நின்று காஷ்மீர் மன்னருக்கு நல்ல வழி காட்டினார். அவர் அச்சமயம் தீர்க்க திருஷ்டியுடன் கையாண்ட சமரச முயற்சிகளின் பயனாகவே காஷ்மீர் இன்றைக்கு இந்தியா தேசத்துடன் இணைந்து நிற்கிறது என்று கூறுவது சிறிதும் மிகையாகாது.

பாரத நாடு சுதந்திரம் பெற்றது முதல் மத்திய சர்க்காரில் மந்திரி பதவி அவரை விடாமல் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

ஸ்ரீ கோபாலசாமி ஐயங்கார் முதலில் இந்திய சர்க்காரில் இலாக்கா இல்லாத மந்திரி பதவி பெற்று அரசாங்க நிர்வாகத்தைச் சீர்படுத்தினார். பிறகு ரயில்வே மந்திரியாக இருந்து ரயில்வே இலாக்காவில் குடிகொண்டிருந்த ஊழல்களைக் களைந்து, போக்கு வரத்து முன்னேற்றத்துக்கான பல அருமையான காரியங்களைச் செய்தார். கடைசியாக இராணுவ மந்திரி பதவியைத் திறம்பட வகித்து வந்தார்.

ஸ்ரீ என். ஜி. ஐயங்கார் மந்திரி பதவியைப் பல தடவை ராஜிநாமா செய்தும், அதைப் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார் எனில், அவர் எவ்வளவு தூரம் நேருஜியின் நன்மதிப்பைப் பெற்றிருந்தார் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

சொந்த நலனைக் காட்டிலும் தேசத்தின் நலனையே அவர் முக்கியமாகக் கருதியதால், கஷ்டங்களும் பொறுப்புகளும் நிறைந்த பதவிகளை ஏற்றுக்கொள்ள அவர் சிறிதும் தயங்கவில்லை.

காஷ்மீர் பிரச்னை கொந்தளிப்பான கட்டத்தை அடைந்த காலத்தில், அந்தச் சமஸ்தானத்தில் பல வருஷங்களாகத் திவான் பதவி வகித்து அநுபவம் பெற்ற ஸ்ரீ கோபாலசாமி ஐயங்காரின் ஆலோசனையையே இந்திய சர்க்கார் நாட வேண்டியிருந்தது. அவரது யோசனைக்கு இணங்கவே இந்திய சர்க்கார் காஷ்மீரின் சுதந்திரத்தைப் பாதுகாக்க இந்தியப் படைகளை விரைந்து



அனுப்பி வைத்தனர். எனவே, காஷ்மீர் சமஸ்தானம் சுதந்திர இந்தியாவை விட்டுப் போய் விடாமல் பாதுகாத்த பெருமை ஸ்ரீ கோபாலசாமி ஐயங்காருக்கே உரியதாகும்.

ஸ்ரீ என். ஜி. ஐயங்கார் சுதேசமித்திரன் ஆசிரியராக இருந்து அகில இந்தியாவிலும் புகழ்பெற்று விளங்கிய ஸ்ரீ ஏ. ரங்கசாமி ஐயங்காரின் சகோதரர். "ஹிந்து" பத்திரிகையை இந்தியாவிலேயே இணையற்றதாகச் செய்த ஸ்ரீ எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார் அவர்களுடைய சகோதரியின் புதல்வர்.

ஸ்ரீ கோபாலசாமி ஐயங்காரின் ஏக புதல்வரும் "ஹிந்து" பத்திரிகையின் துணை ஆசிரியருமான ஸ்ரீ ஜி. பார்த்தசாரதிக்கும் மற்றும் அவருடைய உறவினர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

*　　　*　　　*

சென்ற செவ்வாய்க் கிழமை மாலை நடந்த கோபாலசாமி ஐயங்காரின் ஈமச் சடங்குக்குப் பல தலைவர்களும் உயர்தர இராணுவ அதிகாரிகளும் பிரமுகர்களும் வந்து கடைசி மரியாதை செலுத்தினர்.

இந்தியா ஜனாதிபதி, உப ஜனாதிபதி, இந்தியாவின் பிரதம மந்திரி இவர்களின் சார்பில் பூ வளையங்கள் வைக்கப்பட்டன.

சென்னை கவர்னர் சார்பிலும் பல இராணுவ ஸ்தாபனங்களின் சார்பிலும் ஏராளமான பூவளையங்கள் வைக்கப்பட்டன.

டில்லியிலிருந்து விமானத்தில் உதவி இராணுவ மந்திரிகள், பிரதம சேனாதிபதி ஜெனரல் ராஜேந்திரசிங் ஜீ, இந்தியக் கடற் படைப் பிரதம தளபதி வைஸ் அட்மிரல் பைரி, இந்திய விமானப் படை தளபதி எஸ். என். கோயால் முதலியோர் வந்திருந்தனர். ஸ்ரீ ஐயங்காரின் உடல் தேசியக் கொடியினால் போர்த்தப் பட்டு, பூரண இராணுவ மரியாதைகளுடன் மயானத்துக்கு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது.

பீரங்கி வண்டியில் பல முக்கிய ரஸ்தாக்களின் வழியாக ஊர்வலம் சென்றபோது, இரண்டு மைல் தூரத்துக்கு ரஸ்தாக்களின் இரு புறங்களிலும் தரைப் படை, கடற் படை, விமானப் படையைச் சேர்ந்த ஆயிரம் பேர்கள் அணிவகுத்து நின்று மரியாதை செலுத்தினர்.

வழி நெடுக ஆயிரக் கணக்கான பொது மக்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

காலஞ் சென்ற என். ஜி. ஐயங்காருக்கு மரியாதையாக சென்ற செவ்வாய்க் கிழமை தேசம் முழுதும் கோர்ட்டுகளும் சர்க்கார் காரியாலயங்களும் மூடப் பட்டிருந்தன.




## 4. இளைய ராணியின் வெற்றி!

ராஜா வீர வர்மன் எவ்வளவோ புத்திசாலி என்று தன்னை நினைத்துக் கொண்டிருந்தான். அதில் அவனுக்குப் பூரண நம்பிக்கை யிருந்தது. இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளுகிற வரையில் அந்த நம்பிக்கை தளரவில்லை. இரண்டாவது கல்யாணம் செய்துகொண்ட சில நாட்களுக் கெல்லாம் அவனுக்குத் தான் எவ்வளவு பெரிய முட்டாள் என்பது நன்றாய்த் தெரிந்து விட்டது.

வீரவர்மன் முதல் கல்யாணம் செய்து கொண்டபோது எந்த ராஜ குமாரியைக் கல்யாணம் செய்து கொள்ளுவது என்று தவித்துப் போய் விட்டான். தேச தேசங்களிலிருந் தெல்லாம் ராஜ குமாரிகள் அவனுக்கு மாலையிட வந்தனர். ஆனால் அவர்களுக் கெல்லாம் அந்தப் பாக்கியம் கிடைக்கவில்லை. ராஜ குமாரி மல்லிகாவைத்தான் அரசன் மணந்து கொண்டான். மல்லிகாவின் அழகு அவனை மட்டும் வசீகரிக்கவில்லை. நாட்டு மக்களையே பிரமிக்க வைத்தது.

வீர வர்மனும் மல்லிகாவும் நெடு நாள் இன்ப வாழ்க்கை வாழ்ந்தனர். அரண்மனை ரதத்தில் ஏறிக்கொண்டு தூர தூர தேசங்களுக்கெல்லாம் உல்லாசப் பிரயாணம் போய் வந்தனர்.

ஆனால் இந்த இன்பம் நீடிக்க வில்லை. காரணம் மல்லிகாவுக்குப் பல வருஷங்களாகக் குழந்தை இல்லாததுதான். வீர வர்மனுக்கும் குழந்தை இல்லாத குறை பெருங் குறையாகத் தோன்றியது. பிரபல சோதிடர்களை யெல்லாம் வரவழைத்து மல்லிகாவுக்குக் குழந்தை பிறக்குமா என்று கேட்டான். அவர்கள் மல்லிகாவின் ஜாதகத்தைப் பார்த்து விட்டு, "இந்த ஜாதகத்துக்குரிய பெண்ணுக்குப் புத்திர பாக்கியம் இல்லை!" என்று சந்தேகத்துக் கிடமின்றி நிச்சயமாய்க் கூறி விட்டனர்.

வீரவர்மன் வேதனைக் குள்ளானான். ராணி மல்லிகா மனம் முறிந்து போனாள்.

அவர்கள் வாழ்க்கையில் முன் பெல்லாம் இருந்த இன்பம் எங்கேயோ மறைந்து விட்டது. அவர்கள் மட்டும் என்ன? அரண்மனையே சொல்ல முடியாத சோகத்தில் ஆழ்ந்து விட்டது.

நாட்டு மக்களெல்லாம் அரசனுக்குக் குழந்தை இல்லை என்பதைப் பற்றியே பேசி வருந்தினர்.

இந்தச் சமயத்தில், அரண்மனை ஆலோசகர்களும் மந்திரி மார்களும், அரசனின் வயது முதிர்ந்த தாயாரும் வீரவர்மனை இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினார்கள்.

வீரவர்மனுக்கு அதில் விருப்பமில்லை. ஆனால் கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் அல்லவா?

கடைசியில், வீரவர்மன் சுந்தரி என்ற ஓர் இணையற்ற ரூபவதியை மணந்து கொண்டான்.

மல்லிகாவுக்கு ஏற்பட்ட மனவருத்தத்தைச் சொல்லி முடியாது. தன் ஜன்மமே இனிமேல் பாழாகிவிட்டமாதிரிதான் என்று நினைந்து ரொம்பவும் மனம் வருந்தினாள்.



மல்லிகா உயர்ந்த குணங்களுக்கு இருப்பிடமாக விளங்கிய உத்தமி யாதலால், தன் மன வருத்தத்தை ஒரு சிறிதும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. தனக்கு இளையவளாக வந்து, தன் கணவனின் கரம் பிடித்து, தன் வாழ்வையே குலைத்த சுந்தரியை அன்போடு வரவேற்று, அணைத்துக் கொண்டாள். "என்னைப் போல் அவளும் ஒரு பெண்தானே? அவளிடம் பொறுமைப் படுவதினால் என்ன பிரயோஜனம்?" என்று எண்ணி, அவளிடம் மிகவும் அன்பு காட்டினாள்.

வீரவர்மன் சுந்தரியிடமும் மல்லிகாவிடமும் மிகவும் அன்பாகவே பழகினான்.

சுந்தரியும் கொஞ்ச நாளைக்கு மல்லிகாவிடம் பிரியமாக யிருந்தாள்.

நாட்கள் செல்லச் செல்ல, அவள் மனதில் காரணம் தெரியாமலே மல்லிகாவிடம் வெறுப்புத்தோன்ற ஆரம்பித்தது. போதாக்குறைக்கு, சுந்தரியின் தாயார் சில மாத காலம் இங்கு வந்து அவளுடன் தங்கியிருந்தாள். அவள் மல்லிகாவைப் பற்றித் தன் பெண் சுந்தரியிடம் ஓயாமல் கோள் சொல்ல ஆரம்பித்தாள்.

"சுந்தரி, இந்த உலகத்துச் சூது வாது கொஞ்சங் கூடத் தெரியாமல் இன்னும் குழந்தையாகவே இருக்கிறாயே! உன் மூத்தாள் மல்லிகாவுக்குக் குழந்தை இல்லை என்பதற்காகத்தானே அரசர் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டார்? நீ அவளையும் அரண்மனையிலேயே இன்னும் வைத்துக் கொண்டிருக்கிறாயே! ஒருவேளை உனக்கு முன்னால் அவளுக்குக் குழந்தை பிறந்து விட்டால் உன் கதி என்னவாகும் என்று நீ கொஞ்சமாவது யோசித்துப் பார்த்தாயா? முதலில் மகாராஜாவிடம் பக்குவமாகச் சொல்லி மல்லிகாவை வேறெங்காவது தனியாக அனுப்பிவைக்க ஏற்பாடு பண்ணு!" என்றாள் அவள்.

சுந்தரி, தாயார் சொன்னதைப் பற்றியே தீவிரமாக யோசனை செய்தாள். அவளுக்குத் தன் தாயார் சொன்னது ரொம்ப சரி என்று உறுதியாகப் பட்டது.

அன்றைய தினத்திலிருந்து இளைய ராணி சுந்தரிக்கு மல்லிகாவைக் கண்டால் கொஞ்சங் கூடப் பிடிக்காமற் போய் விட்டது. அரசன் வீரவர்மனிடம் அவளைப் பற்றி ஏதாவது குற்றம் சொல்ல ஆரம்பித்தாள். அரசன் அவற்றை யெல்லாம் அதிகம் கவனியாமல் இருந்தான்.

ஆனால் சுந்தரி தன் காரியம் வெற்றியடைகிற வரையில், சும்மா இருக்கவில்லை. பலவிதத்திலும் அரசனுக்கு மல்லிகாவினிடம் கோபம் உண்டாகும்படி செய்து வந்தாள். அரண்மனையில் எந்தத் தவறு நடந்தாலும் அதை யெல்லாம் பெரிதாக்கி மல்லிகாவின் மேல் சுமத்தி அரசனிடம் கோள் சொல்லி வந்தாள்.

ஒருநாள் அரசன் வழக்கம் போல் தன் அரண்மனை அந்தப்புரத்தில் இளையராணி சுந்தரியின் இருப்பிடத்துக்குச் சென்றான்.

அங்கே ஒருவரையும் காணோம்; வழியிலேயே எதிர் கொண்டு வந்து புன்முறுவலுடன் அரசனை வரவேற்கும் சுந்தரியும் காணவில்லை. அந்தப்புரத்துத் தாதிகள் அத்தனை பேரும் எங்கே தொலைந்து போனார்கள் என்று வீரவர்மனுக்குக் கோபம் கோபமாக வந்தது. பைத்தியக்காரன்! இவ்வளவும் இளைய ராணியின் சூழ்ச்சியான முன்னேற்பாடு என்பது அவனுக்கு எப்படித் தெரியும்?

வீரவர்மன் அந்தப் பெரிய அந்தப்புரத்துத் தாழ்வாரங்களை யெல்லாம் கடந்து இளையராணி சுந்தரியின் அழகிய அரண்மனைக்குள்ளே போனான்.

அங்கே, அற்புதமான வேலைப்பாடுகள் அமைந்த, விலை மதிக்க முடியாத தந்தக் கட்டிலில் வீரவர்மன் கண்ட காட்சி, அவனுடைய தீர நெஞ்சத்தையும் திடுக்கிட வைத்தது. பெரிய போர்க்களங்களில் யானைப் படைகளையும் குதிரைப் படைகளையும் கண்டு சிறிதும் அஞ்சாத அவன் மனம் ஏனோ பயந்து நடுங்கியது. அவனது வீர மார்பு பட படவென்று அடித்துக் கொண்டது.

அரசனையும் நடுங்க வைத்த பயங்கரக் காட்சி என்னவாயிருக்கும்?

வீரவர்மன் அடிமேல் அடி எடுத்து வைத்து, நெருங்கினான்.

சுந்தரி தலைவிரி கோலமாக விம்மி விசித்துக் கொண்டிருந்தாள்.

"சுந்தரி, உனக்கு உடம்புக்கு என்ன? அரண்மனை வைத்தியரை வரச் சொல்லட்டுமா?" என்று அன்பு கலந்த தேன் குரலில் கேட்டான் வீரவர்மன். (தொடரும்)

# வளர்பிறை

கே. ஆர். கௌஸல்யா

நித்யா கூறிய அந்த விஷயத்தைக் கேட்ட போது படுத்த படுக்கையில் கிடந்த பவானியின் தேகம் ஒரு முறை தூக்கி வாரிப் போட்டது. "நிஜம்மாகவா நித்யா சொல்லுகிறாய்!" என்று பயத்தால் வறண்ட குரலில் கேட்டாள் பவானி.

"ஆமாம் அக்கா!......எல்லாம் உன் அசட்டு எண்ணத்தினால் வந்த விபரீதம்தான்......" என்று தழுதழுத்த குரலில் கூறினாள் நித்யா.

மெள்ளப் பொழுது சாய்ந்து இருள் நாற்புறமும் படர ஆரம்பித்தது.

* * *

கருணாகரனுக்கும் பவானிக்கும் விவாகம் நடந்து மூன்று வருஷங்கள் ஆகியிருந்தன. அழகு, அறிவு, அடக்கம் முதலியன ஒருங்கு சேர்ந்து அமைந்திருந்த பவானியைத் தன் மனைவியாக அடைந்ததில் கருணாகரனுக்கு ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியை அளவிட முடியாது. தன்மீது உயிரையே வைத்திருக்கும் தன் கணவனின் மேல் மட்டற்ற பிரேமை ஏற்பட்டிருந்தது பவானிக்கு. அவர்களுடைய வாழ்க்கை தான் கங்கு கரையற்ற இன்ப சாகரத்தில் மிதந்து கொண்டிருந்தது.

திடீரென்று ஒரு நாள் ஜுரம் என்று படுத்தாள் பவானி. கொடிய இருமல் அவளை வாட்டி வதைத்தது. முதலில் கொஞ்ச நாட்கள் வரை வியாதி இன்னதென்று புரியாமலே பணம் மட்டும் செலவழிந்து கொண்டிருந்தது. ஒரு கைதேர்ந்த டாக்டரை அழைத்து வந்து பவானியின் தேக நிலையைப் பரிசோதிக்கச் செய்தான் கருணாகரன். பவானிக்கு வந்திருக்கும் வியாதி டி. பி. என்றும் ஆரம்பத்திலேயே வியாதி ரொம்ப மும்முரமாக வந்திருப்பதால் பணத்தைப் பாராமல் செலவழித்து வைத்தியம் செய்தால் ஓரளவு பலன் ஏற்படலாம் என்றும் கூறினார் டாக்டர். கருணாகரனுக்கும், பவானிக்கும் உலகமே இருண்டு விட்டதைப் போன்ற பிரமை ஏற்பட்டது.

இவ்வளவு இளம் வயதில் தன் மனைவி ஒரு நோயாளியாகிவிட்டாளே என்ற துயரம் கருணாகரனின் உள்ளத்தைப் பிழிந்தெடுத்தது. டாக்டர் கூறிய மருந்துகளைத் தயங்காமல் வாங்கிக் கொடுத்து உயர்தர வைத்தியம் செய்து ஓய்ச்சல் ஒழிவு இன்றி அவளுக்குச் சிசுருஷை செய்து வந்தான். தான் வீட்டிலில்லாத சமயங்களில், வேளை தவறாமல் அவளுக்கு மருந்துகளும், ஆகாரமும் கொடுத்துக் கவனித்துக் கொள்ள ஒரு வேலைக்காரப் பெண்ணையும் அமர்த்தினான்.

நாளுக்கு நாள் பவானியின் தேகஸ்திதி கேவலமாகிக் கொண்டே வந்தது. வியாதி அவளுடைய உடலோடு, உள்ளத்தையும் சேர்ந்து அரிக்க ஆரம்பித்தது. தான் பிழைத்து எழுந்து பழையபடி யாவோம் என்ற நம்பிக்கை அவள் உள்ளத்திலிருந்து சிறுகச் சிறுக விடை பெற்றுக் கொள்ள ஆரம்பித்தது.

அன்று ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்த கருணாகரன் கை கால்களைக் கழுவிக் கொண்டு பவானியின் கட்டிலருகில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

"பவானி! இந்த வேளை மருந்து சாப்பிட்டாயோ!" என்று பரிவுடன் கேட்டான் அவன்.

"......அதற்கென்ன குறைவு! சாப்பிட்டேன்" என்று கலங்கிய கண்களுடன் கூறினாள் அவள்.

'பவானி, ஏன் வருத்தப்படுகிறாய்!... மனத்தை அலட்டிக் கொள்ளாமல் இருந்தால்தானே உன் வியாதி குணமாகும்! வீணாக அதைரியப்பட்டு உன் உடம்பை நீயே பாழடித்துக் கொள்ளுகிறாயே!" என்று குழைவுடன் கூறினான் அவன்.

அன்று காலை வேலைக்காரப் பெண்ணை அழைத்துப் பவானிக்கு வேளை தவறாமல் மருந்துகளும், ஆகாரமும் கொடுக்கும்படியாக எச்சரித்து விட்டு ஆபீஸுக்குக் கிளம்பினான் கருணாகரன்.

அவனைத் தொடர்ந்து வாசல்வரை வந்த வேலைக்காரப் பெண் ஏதோ சொல்வதற்காகத் தயங்கித் தயங்கி நின்றாள்.

"என்ன சொல்ல வேண்டும்!" என்று இரண்டு மூன்று முறை கருணாகரன் வற்புறுத்திக் கேட்ட பின்பு விஷயத்தை மெள்ள வெளியிட்டாள் அவள்.

"...அம்மா இப்பொதெல்லாம் என்னை மருந்து கொடுக்க வேண்டாம்னு சொல்லிட்டாங்க...... அவர்களே சாப்பிட்டுக்கறதாச் சொல்லி மருந்து பாட்டிலை வாங்கிக்கறாங்க. ஆனா சாப்பிடறதே இல்லை. அன்னைக்கு ஒரு நாள் நான் மருந்து கொடுத்தபோது அதை வாங்கி கிட்டு என்னை வெளியே போகச் சொல்லிவிட்டுச் சாப்பிடாம ஜன்னலாலே கொட்டிட்டாங்க" என்று அவள் சொல்லிவிட்டு நிமிர்ந்தபோது கருணாகரன் அங்கே இல்லை. விடு விடுவென்று உள்ளே வந்த அவன் நேரே பவானியின் அறைக்குச் சென்றான்.

"பவானி...!" என்று மெள்ளக் கூப்பிட்டபோது அவன் குரல் கம்பியது.

"ஏன்!" என்று கேட்டு விட்டு அவனுடைய முகத்தையே கூர்ந்து நோக்கினாள் அவள்.

"இது உனக்கே நன்றாக இருக்கிறதா!"

"எது!..."

"ஒன்றும் தெரியாதவள்போல் கேட்காதே, பவானி!... நீ இப்பொதெல்லாம் ஏன் மருந்தே சாப்பிடுவதில்லை!"

"யார் சொன்னார்கள்!" என்று திடுக்கிட்டு வினவினாள் பவானி.

"எனக்குத் தெரியும். மறைக்காதே! நீ முன்பெல்லாம் என் வார்த்தைகளுக்கு எவ்வளவோ மதிப்பு வைத்து என் சொற்படி நடந்து வந்தாய். இப்பொதெல்லாம் ஏனோ உனக்கு என் வார்த்தைகளின் மீது அத்தனை அலட்சியம். நான் சொல்வதைக் கேட்கக் கூடாது என்று திடசங்கல்பம் செய்து கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது. உன் பிடிவாதமும், குழந்தைத்தனமான செய்கையும் கொஞ்சங்கூட நன்றாக இல்லை" என்று வருத்தமும், வெறுப்பும் ஒருங்கே தொனிக்கும் குரலில் கூறி விட்டு விடு விடுவென்று அறையை விட்டுச் சென்று விட்டான் அவன். கருணாகரன் பவானியைக் கடிந்து பேசியது அது தான் முதல் தடவை.

பவானிக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. விம்மி விம்மி அழுதாள்.

அந்தச் சம்பவம் நடந்த பிறகு கருணாகரனின் முகம் களையிழந்து காணப்பட்டது. அவனுடைய பேச்சு, செய்கை எல்லாவற்றிலுமே ஒரு மாறுதலைக் கண்டாள் பவானி.

பவானிக்கு வந்திருக்கும் வியாதி டி. பி. என்று டாக்டர் என்றைக்குச் சொன்னாரோ, அன்றிலிருந்தே தான் மறுபடியும் அந்த வியாதியினின்று மீண்டு எழுந்திருப்பான் என்ற நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டாள் அவள். தன் குறுகிய கால வாழ்வுக்காக எதற்காக விலையுயர்ந்த மருந்து

ளைச் சாப்பிட்டுக் கருணாகரனைக் கடனாளியாக்குவது என்று நினைத்துத்தான் வேளா வேளைக்கு மருந்து சாப்பிடாமல் தன் உடலைத் தானாகவே வற்ற அடித்துக் கொண்டு வந்தாள் அவள்.

நித்யா, பவானியின் அருமைத் தங்கை. நல்ல அழகும் அறிவும் வாய்ந்த அவள்மேல் தன் உயிரை வைத்திருந்தாள் பவானி. பவானிக்கு விவாகம் செய்து வைக்கும் வரை நல்ல நிலைமையிலிருந்த அவள் தந்தை காலச் சக்கரத்தின் 'சுழற்சியின் வேகத்தால் சமீபகாலமாக ரொம்பவும் கை நொடித்துப் போயிருந்தார். மணப் பருவத்தை எட்டிப் பிடித்துவிட்ட நித்யாவுக்குப் பணமில்லாத காரணத்தால் விவாகம் செய்ய முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார் அவர். கல்யாணமாகிச் சந்தோஷமாக வாழ்க்கை நடத்த வேண்டிய வயதில் கன்னிப் பெண்ணாகவே இருக்கும் அவளைப் பற்றித் தன் கணவன் கருணாகரனிடம் கூறி அவளை மணந்து கொண்டு தன்னாலேற்பட்டுள்ள குறையை நிவர்த்தி செய்து கொள்ளும்படியாகக் கூற வேண்டும்; தன் தங்கைக்கும் அதனால் வாழ்வு ஏற்பட்டு விடும் என்று நிர்மானித்து விட்டாள் பவானி.

ஒருநாள் மாலை. பவானியைப் பார்ப்பதற்காக நித்யா வந்திருந்தாள். ஏதேதோ பீடிகைகள் போட்டு விட்டு அவளிடம் மெள்ளத் தன் எண்ணத்தை வெளியிட்டாள் பவானி. அதைக் கேட்டவுடன் நித்யா அலறினாள். அத்தகைய ஒரு காரியத்திற்குத் தன் மனம் கொஞ்சம்கூடச் சம்மதிக்காது என்று கூறிக் கதறினாள். கருணாகரனிடம் அப்படிப்பட்ட ஒரு யோசனையைத் தயவு செய்து சொல்ல வேண்டாம் என்று கூறி மன்றாடினாள் நித்யா.

இது நடந்த சில நாட்களுக்குப் பிறகு ஒருநாள் நித்யா வந்திருந்தாள். அப்போது அவள் கூறிய ஒரு விஷயம் பவானியை ஒரு கலக்கு கலக்கியது. கருணாகரன் சமீபத்தில் சில நாட்களாகச் சந்திரிகா என்ற ஒரு பெண்ணுடன் நெருக்கமாக இருப்பதாகவும், அவள் நித்யா இருக்கும் வீட்டுக்கு—பவானியின் பிறந்தகத்துக்கு—எதிர் வீட்டில் புதிதாகக் குடி வந்திருக்கிறாள் என்றும், அடிக்கடி அவன் அந்தப் பெண்ணுடன் எங்கோ வெளியே சுற்றிவிட்டு வருவதையும், அவளுடைய வீட்டு மாடியில் அவர்களிருவரும் உல்லாசமாகப் பேசிப் பொழுது போக்குவதையும் தான் பார்த்திருப்பதாகவும் கூறினாள் நித்யா.

"அக்கா! நீ அநியாயமாக மருந்து சாப்பிடாமல் உன் உடலைப் பாழ்படுத்திக்கொண்டு விடவே அவருக்கு உன்மேல் வெறுப்பு ஏற்பட்டு, உன் உடல் இனி தேறாது என்று நிச்சயித்து, வேறு ஒரு பெண்ணை மணந்து கொள்ளத் தீர்மானித்து விட்டார். எனக்கு நன்மை செய்ய எண்ணி அநியாயமாக உன் வாழ்வு பாழாகப் போகிறதே...... நடைப் பிணம்போல் நீ விழுந்து கிடக்க, உன் கண்ணெதிரிலேயே அவர் வேறொரு பெண்ணுடன் இன்ப வாழ்க்கை நடத்துவதைக் காண உனக்குச் சகிக்குமா! உன் அசட்டு எண்ணத்தினால் ஏற்பட்ட விபரீதம்தான் இது" என்று தன் சகோதரியிடம் கூறித் தேம்பித் தேம்பி அழுதாள் நித்யா.

பவானிக்கு அப்போதுதான் தன் கணவன் முன்போல் அன்பாகவும், ஆதரவாகவும் நடந்து கொள்ளாமல் ஏதோ 'விதியே' என்று இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டுப் போவதற்கும், முன்பெல்லாம் சரியாக ஆபீஸுக்குக் கிளம்பும் அவன் இப்போது காலை கொஞ்ச நேரம் முன்பாகப் புறப்பட்டுப் போய், இரவு சிறிது நேரம் கழித்து வீடு திரும்புவதற்கும் காரணம் புரிந்தது.

* * *

'டங்' 'டங்'—இரவின் நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு அறையில் மாட்டியிருந்த கடிகாரம் பன்னிரண்டு முறை அடித்து ஓய்ந்தது. மெள்ளக் கண்ணை விழித்துப் பார்த்தாள் பவானி. அவளுக்குச் சற்றுத் தூரத்தில் கட்டிலில் படுத்து ஆழ்ந்த நித்திரையிலிருந்த கருணாகரன், "சந்திரிகா! சந்திரிகா!" என்று பிதற்றிக் கொண்டே ஒரு முறை புரண்டு படுத்தான். மெள்ள சுவரைப் பிடித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் அவள். பயமும் ஏக்கமும் பிரதிபலிக்கும் விழிகளால் சுற்று முற்றும் பார்த்தாள் அவள். 'சந்திரிகா!' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

'அக்கா! அநியாயமாய் மருந்து சாப்பிடாமல் உன் உடம்பைப் பாழ்படுத்திக் கொண்டுவிட்டாயே! நடைப்பிணம்போல் நீ விழுந்து கிடக்க உன் கண்ணெதிரிலேயே அவர் வேறு ஒரு பெண்ணுடன் இன்ப வாழ்க்கை நடத்துவதைக் காண உனக்குச் சகிக்குமா!' என்ற நித்யாவின் வார்த்தைகள் அவள் காதுகளில் எதி



ரொளித்தன. எவ்வளவோ பணத்தைக் கொட்டி வாங்கி யிருந்த மருந்துகள், அவள் சாப்பிடாததால் அப்படி யப்படியே தூங்கிக் கொண்டிருந்த மருந்து பாட்டில்கள் வைக்கப்பட்டிருந்த அலமாரியை வெறித்து நோக்கினாள் அவள். தலையை அழுக்கிப் பிடித்தவாறே படுக்கையில் சாய்ந்தாள் பவானி.

மறு நாள் காலை, எழுந்ததும் எழுந்திருக்காதது மாக வேலைக்காரப் பெண்ணை மெல்லிய குரலில் அழைத்தாள் பவானி. இனி முன்போல் வேளை தவறாமல் மருந்துகளும் டானிக்குகளும் தனக்குக் கொடுக்கும் படியாகக் கட்டளை யிட்டாள். அவள் மனத்தி லிருந்த பளு சிறிது இறங்கியது.

மாதங்கள் உருண்டோடின. ஒரு நாள் எங்கோ வெளியே கிளம்பிக் கொண்டிருந்த கருணா கரனை அழைத்தாள் பவானி.

"இன்று மாலை டாக்டரைக் கூட்டி வந்து என் தேக நிலைமையைப் பரிசோதிக்கச் சொல்லுகிறீர் களா ?" என்று மெல்லக் கேட்டாள் அவள்.

"ஏன் ! நீதான் மருந்துகளையே சாப்பிடுவ தில்லையே ! எதற்காக டாக்டரை அழைத்து வரு வது! உன் தேகநிலைமை இன்னும் எவ்வளவு கேவல மாகி யிருக்கிறது என்று பார்க்கவா!" என்று கேலி யும் கோபமும் கலந்த குரலில் கேட்டான் அவன். பவானிக்குத் துக்கம் நெஞ்சை அழுத்தியது.

"இல்லை; நான் இப்போதெல்லாம் தவறாமல் மருந்துகளையும் டானிக்குகளையும் சாப்பிட்டு வரு கிறேன். எனக்கே மாறுதல் தெரிகிறது ......" என்று கூறித் தன் கண்ணீரைச் சமாளிக்கும் நிமித்தம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

* * *

திறந்திருந்த ஜன்னல் வழியாக, களங்கமற்ற நீலவானில் சிதறிக் கிடந்த தாரகைகளிடையே பவனி வந்துகொண்டிருந்த வளர்பிறையையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் பவானி. இன்னும் சில தினங்களில் பூரண பிம் பத்தை அடையப் போகும் அந்த வளர்பிறையைப் போலவேதான் பவானியின் தேக நிலைமையும் சிறு கச் சிறுக மாறுதல் அடைந்துகொண்டு வந்தது.

அன்று மாலை. கட்டிலில் எழுந்து உட் கார்ந்து கொண்டிருந்தாள் பவானி.

"அக்கா !..." என்று உற்சாகத்துடன் அழைத் துக் கொண்டே அவளருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள் நித்யா. "இப்போது உன் உடம்பு நன்றாகத் தேறி விட்டது இல்லையா !..." என்று அன்புடன் கேட்டாள் அவள்.

பவானி ஒரு நீண்ட பெரு மூச்செறிந்தாள். "நித்யா !.... எனக்கு உடம்பு தேறி என்ன பிர யோஜனம் ! ... அந்த சந்திரிகாவை உன் அத்திம் பேர் எங்கே மறக்கப்போகிறார்! நீ முன்பு கூறியது போல் அவர் இப்போதுகூடக் காலை முன்னைவிடச் சீக்கிரம் போய் மாலை வேளைகளிலும் நேரம் கழித் துத்தான் திரும்பி வருகிறார்" என்றாள்.

'டக்' 'டக்'கென்று வாயிற்புறத்தில் பூட்ஸ் சத்தம் கேட்டது. உள்ளே நுழைந்த கருணா கரனை, "வாருங்கள் அத்திம்பேர் !" என்று மகிழ்ச்சியுடன் வரவேற்று அங்கிருந்த நாற் காலியை இழுத்துப் போட்டாள் நித்யா. பவானி தலையைக் குனிந்தவாறு உட்கார்ந்திருந்தாள்.

"... வந்து இனிமேதான் தனக்கு உடம்பு தேறி விட்டதே ! அந்த சந்திரிகாவை நீங்க மறந்துடுவே ளோல்லியோ என்று கேட்கிறாள் அக்கா ..." என்று கேட்டு விட்டு உரக்கச் சிரித்தாள் நித்யா.

"அதெப்படி முடியும் !" என்று கூறி அவ ளுடைய சிரிப்பில் கலந்து கொண்டான் கருணா கரன். பவானிக்கு ஒன்றுமே புரியவில்லை. "இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது !" என்று விளங் காமல் கருணாகரனையும், நித்யாவையும் மாறி மாறிப் பார்த்தாள் அவள்.

"ஐயோ பாவம் ! அக்காவை எவ்வளவு நாழி தான் ஏமாற்றுவது ! அக்கா ! அன்று நான் உன்னைப் பார்க்க வந்திருக்கையில் நீ உன் பைத் தியக்கார எண்ணத்தை வெளியிட்டபோது என் உள்ளம் அளவற்ற வேதனை யடைந்தது. அத்துடன் உன்னைப் பரிசோதித்து விட்டுச் சென்ற டாக்டர் மனத்தை அலட்டிக் கொள் ளாமல் நம்பிக்கையோடும் விருப்பத்தோடும் மருந்து சாப்பிட்டால்தான், அது உன் உடம்பில் ஒட்டும் என்று அத்திம்பேரிடம் கூறி யிருந்தாராம். அவர் அன்று ஒரு நாள் என்னைச் சந்தித்து இதை வெளியிட்டு நீ வேண்டுமென்றே மருந்தை வேண்டாமென்று சொல்வதையும், கீழே கொட்டு வதையும் கூறி, உன் புதிய மனமாற்றத்திற்குக் காரணம் புரியவில்லை என்று வருத்தப்பட்டார். அப்போதுதான் எனக்கு அந்த யோசனை தோன்றி யது. அத்திம்பேர் அப்போதுதான் சில நாட்க ளாக, "சந்திரிகா" என்ற ஒரு புது பத்திரிகை வெளிவந்து கொண்டிருந்த காரியாலயத்தில் வேலை ஏற்றுக் கொண்டிருந்தார். தம் ஆபீஸில் சம்பளம் போதவில்லை என்ற காரணத்தால் அந்த காரியாலயத்தில்தான் இனி அத்திம்பேர் வேலை செய்யப் போகிறார். அந்தக் காரியாலயம் நம் வீட்டுக்கு எதிரேதான் இருக்கிறது. அதை வைத் துக் கொண்டு வேண்டுமென்றேதான் நானும் அவருமாகக் கலந்தாலோசித்து அவர் 'சந்திரிகா' என்ற ஒரு பெண்ணுடன் சிநேகமாக இருப்ப தாக உன்னிடம் போய் சொல்ல வேண்டும் என்று தீர்மானித்தோம். அன்று உன்னிடம் இதை நான் முதன் முதலில் கூறும்போதே உன் புதிய எண்ணத்தின் அஸ்திவாரம் கலகலத்து விட்டதை நான் புரிந்து கொண்டேன். ஆனால் நானும் அதற்கு வருத்தப்படுவது போல நடித் தேன். அன்றிரவு உன்னை இன்னும் சோதிப்பதற் காகத்தான் நீ விழித்துக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு 'சந்திரிகா, சந்திரிகா' என்று அத்திம்பேர் தூக்கத்தில் பிதற்றுவதைப் போல் பாவனை செய்தார். அப்போது நீ வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்ததையும், பிறகு ஏதோ முணு முணுத்து விட்டு வருத்தத்துடன் படுத்துக் கொண்டதையும் அவர் என்னிடம் வந்து கூறிய வுடனேயே நாங்கள் செய்த தந்திரம் பலித்து விட்டதென்று எனக்குப் புரிந்து விட்டது.

"எப்படிப்பட்ட பெண்ணாக இருந்தாலும், தன் கணவனின் நலத்தில் எவ்வளவுதான் கருத்துள்ள பெண்ணானாலும், அவனுடைய இதய பீடத்தில் மற்றொரு பெண்ணுக்கு இடம் கிடைப்பதை ஒரு போதும் பொறுக்க மாட்டாள்; விரும்பமாட் டாள். அதற்கு நீமட்டும் எப்படி விதிவிலக்காக முடியும் !" என்று கூறிய நித்யா பவானியை நோக்கிக் குறும்புப் புன்னகை புரிந்தாள்.

"என்ன பவானி ! இனிமேல் நான் உன் மீது வைத்துள்ள அன்பில் சந்தேகம் ஏற்படாதே !" என்று கேலியாகக் கேட்டான் கருணாகரன்.

அவள் சொல்ல வேண்டுமென்று நினைத்த வார்த் தைகளனைத்தையும் அவள் கண்களில் துளித்து நின்ற ஆனந்தக் கண்ணீரே சொல்லி விட்டது.




அன்றையதினம் வழக்கம் போல் ஆபீஸுக்குப் புறப்பட்டேன். ஸ்டேஷனுக்குப் போனதும் "ரயில் 180 நிமிஷம் லேட்" என்ற போர்டு என்னைப் பரிகசித்தது. ஆனால் அதைக் கண்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போடவில்லை. பெரம்பூரிலிருந்து கொண்டு ரயில் தாமதமாக வருவதைப் பற்றிக் கவலைப் பட்டால் அந்தக் கவலைக்கு முடிவே இல்லை. அதுதான் வாரத்துக்கு நாலு நாள் தாமதமாக வந்து கொண்டிருக்கிறதே!

ஆனால் நான் வண்டி தாமதமாக வருவதைப் பற்றிக் கவலைப்படவில்லை. என்றும் நூற்றெண்பது நிமிஷம் ஸ்டேஷனில் உட்கார்ந்து கொண்டு எப்படிப் பொழுதைப் போக்குவது என்று எனக்கு யோசனையாயிருந்தது. என் யோசனைக்குக் காரணம் ரயில் நண்பர்கள் யாரும் அப்போது ஸ்டேஷனில் இல்லாததுதான். ரயில் ரொம்பத் தாமதமாக வருகிறது என்று தெரிந்ததும் அவர்கள் பஸ்ஸில் ஏறிப் போய் விட்டார்கள். நானும் இன்னும் சிலரும்தான் வண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தோம்.

அடாத மழை பெய்யினும் விடாது ரயிலிலேயே போவது என்னும் கொள்கையுடையவன் நான். ஆகையினால் ரயில் தாமதமாக வந்தால் அதைத் திட்டிக் கொண்டே ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் காத்துக் கொண்டிருந்து வண்டி வந்ததும் போவேன். இப்படி வண்டிக்கு ஆதரவளிப்பதில் நான் என் நண்பர்கள் குழுவில் மிகவும் பிரசித்தியடைந்திருந்தேன் என்பதை மிகவும் தாழ்மையுடன் சொல்லி வைக்கிறேன்.

"என்ன ஸார், ரயில் எத்தனை நிமிஷங்கள் தாமதமாக வந்தாலும் உங்கள் மேலான ஆதரவை ரயில் வண்டிக்குத்தான் அளிப்பீர்கள், இல்லையா?" என்று கேட்டுக் கொண்டே நண்பர் பாலு வந்து சேர்ந்தார்.

பாலுவைப் பார்த்ததும் ரயில் வண்டியின் தாமதத்தினால் ஏற்பட்டிருந்த ஏக்கம் பனிச் சென்று நீங்கியது. பாலுவும் நானும் பேச ஆரம்பித்து விட்டால், எங்களுக்கு நேரம் போவதே தெரியாது. இந்த நூற்றெண்பது நிமிஷம் எந்த மூலைக்குக் காணும்?

"இன்று என்ன ஏகாந்த சேவை தருகிறீர்களே! நண்பர்கள், ஆதரவாளர்கள் யாருமே இல்லையா?" என்று கேட்டார் பாலு.

"இல்லை. முதல் வண்டியே தாமதமாக வந்ததனால் அனேகமாக எல்லோரும் அதிலேயே போய் விட்டார்கள். ரயில் வருகிற வரையில் காத்துக் கொண்டிருக்க வேண்டுமே என்று நினைத்தேன். நல்ல வேளை, நீங்கள் வந்தீர்கள்!" என்றேன்.

இந்தச் சமயம் ஒரு புதிய மனிதர் எங்கள் பக்கத்தில் பெஞ்சியில் வந்து உட்கார்ந்தார்.

"ரயில் வருவதற்கு ரொம்ப நேரம் ஆகும் போலிருக்கிறதே! ஒரு உத்தேசமாக '180 நிமிஷம் லேட்' என்று போட்டிருக்கிறார்கள். அவகாசம் இல்லாத நாளில் பேசுவதற்கு விஷயம் நிறையக் கிடைக்கும்; பேசுவதற்கு விஷயம் நிறைய இருக்கும்போது அவகாசம் கிடைக்காது!" என்றார் பாலு.

"ஏன், வண்டி வருகிறவரையில் பேசிப் பொழுதை ஓட்ட வேண்டுமே என்று பார்க்கிறீர்களா? உங்களுக்கு ஆக்ஷேபனை இல்லை என்றால் நான் ஒரு கதை சொல்லுகிறேன். பொழுது சொல்லாமல் ஒரு நொடியில் ஓடி விடும்!" என்றார் அந்தப் புதிய மனிதர்.

"கதை கேட்கத் துளிக் கூட ஆக்ஷேபனை கிடையாது. சொல்லுங்கள்!' என்றேன்.

"அது ஒரு சோகக் கதை. மன முறிவு, மனக் கசப்பு, நிறைவேறாத காதல், பூர்த்தியாகாத மனோரதம்—இப்படிச் சோகக் கதைக்கு வேண்டிய எந்த நிகழ்ச்சியும் இதில் இடம் பெறவில்லை. ஆனால் கதை முடிவில் மனதில் இனந் தெரியாத சோக உணர்ச்சி ஏற்படும்!" என்றார் அவர்.

"அதைப் பற்றிப் பாதகமில்லை. வாழ்க்கையில் தான் சோக ரஸத்தை யாரும் விரும்ப மாட்டார்கள். ஆனால் கதையில் அது இல்லாவிட்டால் சுவாரஸ்யப்படாது. நீங்கள் சொல்லுங்கள்!" என்றேன்.

அந்தப் புதிய மனிதர் ஆரம்பித்தார்:

அந்த மைதானத்தில் அப்பொழுது யாரும் இருக்கவில்லை. அது ஒரு பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த விளையாடும் இடம். புல்லை ஒழுங்காகச் செதுக்கி மைதானம் மிகவும் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தது. விளையாடும் இடத்துக்குக் கூப்பிடு தூரத்தில் பெரிய பெரிய மரங்கள் இருந்தன. அவை மிகவும் செழிப்பாக வானுற ஓங்கிப் பரந்து வளர்ந்து குளிர்ந்த நிழலைத் தந்தன.

அந்த வெய்யில் வேளையில் களைத்துப் போய், ஒரு கிழவன் தள்ளாடித் தளர் நடை நடந்து அந்தப் பெரிய மரத்தின் அடியில் வந்து உட்கார்ந்தான். அவனுக்கு மேலும் நடக்கச் சக்தியில்லை. அவனுக்குச் சுமார் எண்பது வயதிருக்கும் என்பதை அவன் உடல் தளர்ச்சியும் அவன் முகத்தில் விழுந்திருந்த சுருக்கங்களும் எடுத்துக் காட்டின. அவனுக்கு நினைவு தெரிந்தது முதல் இந்தப் பரந்த உலகத்தில் அவன் அறிந்ததெல்லாம் வறுமை ஒன்றுதான். சிறு பையனாகத் தெருவில் துள்ளித் திரிந்த காலத்தில் அடுத்த வேளைச் சோறு எப்படி அகப்படும் என்று யோசிக்க வைத்த கவலை, அவனுக்கு எண்பது வயதாகியும் அவனை விட்டு அகன்ற பாடாயில்லை. இத்தனை வருஷங்களையும் எப்படிக் கழித்தான் என்பது அவனுக்கே தெரியாது.

ஆனால் அவன் சோம்பேறித்தனமாக, உழைப்புக்கு அஞ்சி, பிறர் கையை எதிர்பார்த்து வாழும் பிச்சைக்காரனல்ல.



அவன் சில காலம் மளிகைச் சாமான் மண்டிகளில் மூட்டை தூக்கிக் கூலி பெற்று வயிறு வளர்த்து வந்தான்; கடைத் தெருவில் கையில் பெரிய கூடையுடன் நின்று கொண்டு சாமான் நிறைய வாங்கிச் செல்லுபவர்களைப் பார்த்து அவைகளை வாங்கித் தன் கூடையில் வைத்துக் கொண்டு, அவர்களோடு வீடு வரையில் சென்று கூலி பெற்றுக் கொண்டான்; பிறகு ஒரு நாடகக் கம்பெனி வந்தது; அதில் அவன் சென்று மூன்று மாதம் ஏதோ எடுபிடி வேலை செய்து மாதக் கூலிக்கு வேலை செய்தான். அந்தக் கம்பெனி அந்த ஊரை விட்டுப் போன போது அவனுக்கு அந்த ஊரை விட்டுப் போக இஷ்டமில்லை. ஆகவே, வேலையை விட்டு நின்று விட்டான். இப்படி எதிலும் நிலைத்து இல்லாமல் எத்தனையோ இடங்களில் வேலை பார்த்து அலுத்துப் போய் விட்டான்.

இப்போது அவனுக்கு வயதும் ஆகி விட்டது. இவ்வளவு வயது முதிர்ந்த இந்தக் கிழவனுக்கு ஆதரவு யாரும் இல்லை. தன் மனிதர்கள், தனக்கு உதவி செய்யக் கூடியவர்கள் என்று யாருமே இல்லை. கிடைத்ததை உண்டு இப்படிக் காலந் தள்ளி வந்தான். கூலி வேலை செய்து அவன் சம்பாதித்துச் சாப்பிட்ட பணம் போக மிச்சம் சில்லறையை யெல்லாம் ஆப்பம் செய்து விற்கும் ஒரு கிழவியிடம் கொடுத்து வைத்திருந்தான்.

அவளும் அதை யெல்லாம் கணக்கு வைத்துக் கொள்ளாமல் கிழவனின் பசி வேளைக்குக் கிடைத்ததைக் கொடுத்து வந்தாள். இப்பொழுது அவனால் எங்கும் வேலை செய்ய முடியவில்லை. கிழவிக்குத் தன்னால் கூடிய வரையில் ஒத்தாசையாக இருந்து வந்தான்.

வெய்யில் மிகக் கடுமையாகக் காய்ந்து கொண்டிருந்தது. அந்த விசாலமான மைதானத்தில் அந்தக் கிழவனைத் தவிர வேறு யாரும் கிடையாது.

வெய்யில் தணிய ஆரம்பித்ததும் பறவைகளெல்லாம் கூட்டங் கூட்டமாக வந்து, தங்களுடைய இனிமையான பாஷையில் பேசி அந்த மைதானத்துக்குப் புத்துயிர் அளித்தன.

கிழவன் பாவம், அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான்.

திடீரென்று அந்த மைதானத்தில் ஒரு பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. ஏழெட்டுப் பத்துச் சிறு பையன்கள் கூட்டமாக ஓடி வந்து மைதானத்தில் குழ்ந்து கொண்டனர்.

கிழவனுடைய ஆழ்ந்த நித்திரை அப்பொழுது கூடக் கலையவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் அவன் மேல் ஒரு பந்து விழுந்து துள்ளிக் குதித்து ஓடியது. கிழவன் திடுக்கிட்டு எழுந்தான். சுற்றுமுற்றும் பார்த்தான். கொஞ்ச தூரத்தில் விழுந்து கிடந்த பந்து அவன் கண்களில் பட்டது. உடனே தன் தள்ளாமையையும் பொருட்படுத்தாமல் ஒரு வாலிபனைப் போல் 'விருக்'கென எழுந்து ஓடி அந்தப் பந்தை எடுத்துக் கொண்டு வந்து அந்தச் சிறுவர்கள் இருந்த இடத்தை நோக்கி வீசினான்.

கிழவனுக்கு இப்பொழுது இந்த உலகத்து நினைவே மறந்துவிட்டது. அவன் தன்னையே மறந்து விட்டான். சிறுவர்களின் பந்தாட்டம் அவ்வளவு தூரம் கவர்ந்து விட்டது. பந்து ஓடும்போது அவன் உள்ளமும் துள்ளி ஓடியது; பையன்கள் ஆரவாரத்துடன் பந்தை உதைத்து விளையாடிய போது அவன் மனமும் களி துள்ளியது. அவனும் அவர்களைப் போலவே சின்னப் பையனாகி விட்டான்.

அவனுக்குச் சின்னஞ்சிறு வயதிலிருந்தே பந்தாட்டத்தைப் பார்ப்பதில் அலாதிப் பிரியம். பெரிய கால்பந்துப் பந்தயம் ஒன்று முன்பு ஒரு சமயம் நடந்தது. அப்பொழுது அவன் சிறு பையன். ஒரு மரத்தின் மேலே ஏறி அந்தப் பந்தாட்டத்தைப் பார்த்தான். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் மரக்கிளை முறிந்து கீழே விழுந்து விட்டான். பிறகு ஒரு மாதம் ஜெனரல் ஆஸ்பத்திரியில் இருந்தான். அந்தச் சம்பவம் அவன் மனத்தில் எப்போதும் பசுமையாயிருந்தது. அதற்குக் காரணமும் இருந்தது. அந்த மாதம் அவனுடைய வாழ்நாளிலேயே மிகவும் செழிப்பான சௌக்கியமான மாதம். வேளா வேளைக்கு ஆகாரம், பால், கிடைத்து வந்தது. படுப்பதற்குச் சௌகரியமான இடம் கிடைத்தது. கவலையற்ற நிம்மதியான சாப்பாட்டை அந்த ஏழை அநாதை அடிபட்டு ஜெனரல் ஆஸ்பத்திரியில் கிடந்த போதுதான் அடைய முடிந்தது.

இப்பொழுது அந்தச் சம்பவத்தை நினைத்துப் பார்த்தால் அவனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. வேளைக்கு ஆகாரம் சாப்பிட்டுக் கொண்டு கவலையின்றி இருக்க வேண்டும் என்பதற்காகக் காலையோ கையையோ முறித்துக் கொள்ள முடியுமா என்ன?

சிறுவர்களின் பந்து விளையாட்டில் ஈடுபட்டு நேரம் போவதே தெரியாமல் அவன் பார்த்துக் கொண்டிருந்தான். முதலில் பையன்கள் அவனைப் பொருட் படுத்தவே இல்லை. அவன் மிகவும் உற்சாகத்தோடு அவர்கள் விளையாட்டைப் பார்த்து ரஸித்து மகிழ்வதைக் கவனித்த பையன்களுக்கு அவனிடம் ஒரு பிரியம் உண்டாயிற்று. அவன் பக்கமாகப் பந்தை உதைத்தால், அவன் உடனே ஓடிப் பந்தையெடுத்து அவர்களிடம் தூக்கி எறிந்து பன்மடங்கு உற்சாகம் அடைவதைப் பார்த்துப் பையன்கள் மிகவும் உற்சாகம் அடைந்தனர்.

சூரியன் அஸ்தமனம் ஆகிவிடவே இருட்ட ஆரம்பித்தது. பையன்களெல்லோரும் வீட்டுக்குப் புறப்பட்டனர். உற்சாகமாகப் பேசிக் கொண்டே சென்றனர்.

அவன் பையன்களுடைய உருவம் மறைகிற வரையில் பார்த்துக் கொண்டிருந்தான். அவர்கள் பேச்சுக் குரல் கேட்கிற வரையில் செவிகொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.

பையன்கள் எல்லோரும் போன பின்பு மைதானம் வெறும் பாழ்வெளியாகத் தோன்றியது. பறவைக் கூட்டங்களெல்லாம் அந்தப் பெரிய மரத்தை நாடி ஓடி வந்தன. இராக் காலத்தில் அந்தப் பெரிய மரம் எத்தனையோ பறவைகளுக்கு உறைவிடமாயிருந்தது.

அவனுக்கு இப்பொழுது அங்கேயிருக்கப் பிடிக்கவில்லை. மெதுவாக எழுந்து ஊருக்குள் போய், அந்தக் கிழவியின் குடிசைக்குச் சென்றான். அவள் அவனுக்காகச் சாப்பிடுவதற்கு ஏதோ எடுத்து வைத்திருந்தாள். அதைச் சாப்பிட்டுவிட்டு, திண்ணையில் படுத்தான்.



'சுரீர்' என்று வெய்யில் உறைக்க ஆரம்பித்த பிறகுதான் அவன் துயில் நீங்கி எழுந்தான். வழக்கம் போல் கிழவிக்கு உதவியாக இருந்தான். கிழவி கொஞ்சம் சாதம் போட்டாள். சாப்பிட்டுவிட்டு, பகல் வேளையை ஒரு வீட்டுத் திண்ணையில் கழித்தான். மாலை நாலு மணியானதும் நேரே விளையாட்டு மைதானத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

மாலை மணி ஐந்து ஆனதும் ஓரே ஆரவாரத்துடன் பையன்கள் அங்கே வந்து சேர்ந்



வந்தவர் :—ஸௌக்கியமா ?

உட்கார்ந்திருப்பவர் :—என்னய்யா இது; தினம் வந்து ஸௌக்கியமா, ஸௌக்கியமா என்று கேட்டு விட்டு இருக்கிற 'அசோகா' பாக்கெல்லாம் போட்டுக் கொண்டு போய் விடுகிறீர்கள். இன்னிக்கு ஸௌக்கியம் இல்லே போயிட்டு வாங்கோ !

தனர். கிழவனுக்கு உடம்பில் புத்துயிர் வந்தது. உற்சாகத்தோடு அவர்கள் விளையாடுவதைக் கவனிக்கலானான்.

பந்து விளையாடிக் கொண்டிருந்த போது ஒரு பெரிய பையன் மிகவும் பலமாகப் பந்தை உதைத்தான்; அது உயர எழும்பி மரக் கிளையில் பாய்ந்து மறைந்தது.

பையன்கள் எல்லோரும் மிகவும் ஆவலோடு பந்து கீழே விழுவதை எதிர்பார்த்து, அண்ணாந்து பார்த்துக் கொண்டேயிருந்தனர். அது வரவேயில்லை.

பையன்கள் மிகவும் ஏக்கத்தோடு அந்த மரத்தைச் சுற்றி வந்தார்கள்; கல்லை வீசினர்; மரத்தில் இரண்டொருவர் ஏறிக் கிளையை உலுக்க முயன்றனர். ஊஹும். பந்து இதற்கெல்லாம் மசிகிற வழியாயில்லை.

பையன்களின் முயற்சியையும் அது தோற்றுப் போனதையும் கிழவன் பார்த்துக் கொண்டேயிருந்தான். ஒருவனைப் பார்த்து, "தம்பி, அந்தப் பந்து உங்களுக்குக் கிடைக்கும் என்று தோன்றவில்லை. அதன் விலை என்ன இருக்கும்?" என்று கேட்டான்.

"அரை ரூபாய் தாத்தா !" என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினான் அவன்.

உடனே கிழவன் தன் மேல் துண்டின் மூலையில் முடிச்சுப் போட்டிருந்ததை எடுத்து அவிழ்த்து, இரண்டு கால் ரூபாய் நாணயங்களை எடுத்தான். அதுதான் அவனுடைய சாசுவத நிதி, சேமிப்பு, பொக்கிஷம் எல்லாம்.

"தம்பி, இந்தா. இதைக் கொண்டு போய்ப் புதிதாகப் பந்து வாங்கிக் கொண்டு வந்து தினம் இங்கே பந்து விளையாடுங்கள் !" என்று கூறித் தன் நடுங்கும் கைகளினால் காசை எடுத்து அந்தப் பையனின் கையில் வைத்தான். பையனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. மற்றப் பையன்களுடைய முகங்களும் மலர்ச்சி யடைந்தன.

கிழவன் அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மனம் அப்பொழுது நிறைந்திருந்தது. வாழ்க்கையிலேயே தன் மனசுக்கு மிகவும் உகந்த காரியத்தைச் செய்து முடித்த பெருமை அவனுடைய வயோதிக முகத்தில் நன்கு வெளியாயிற்று.

அன்று அஸ்தமித்து இருட்ட ஆரம்பித்ததும் அதைத் தொடர்ந்து ஒரு பேய்க்காற்று வீசியது. மழையும் கொட்ட ஆரம்பித்தது. பாவம், கிழவனால் ஊருக்குள் போக முடியவில்லை. அங்கேயே படுத்து விட்டான்.

மறு நாள் காலை வான வீதி மாசு நீங்கி நிர்மலமாக விளங்கியது. அந்த நிர்மலமான வானத்தில் சூரியன் தனியரசு செலுத்தினான்.

அன்று ஞாயிற்றுக்கிழமையாதலால் காலையிலேயே பையன்கள் உற்சாகத்தோடு மைதானத்துக்கு வந்தனர். அவர்களில் ஒருவன் கையில் ஒரு புதிய பந்து இருந்தது.

முதல் நாள் மாலை தாத்தாவினிடம் பந்துக்குக் காசு வாங்கிக் கொண்டவன் நேரே மரத்தடிக்குச் சென்றான். எல்லாப் பையன்களும் அவனைத் தொடர்ந்து சென்றார்கள்.

கீழே படுத்துக்கொண்டிருந்த கிழவனிடம் போய், "தாத்தா, தாத்தா ! இதோ பார், பந்து ! புதிய பந்து !" என்று கத்திச் சூழ்ந்து கொண்டார்கள்.

அப்பொழுது 'விர்'ரென்று ஒரு பெரிய காற்று வீசி அந்தப் பெரிய மரத்தை இப்படியும் அப்படியுமாக அலைக்கழித்தது. மரக் கிளையில் சிக்கிக் கொண்டிருந்த பந்து, பொத்தென்று கீழே விழுந்தது. பையன்களில் ஒருவன் ஓடி அதை எடுத்தான்.

"தாத்தா, எங்களுடைய பழைய பந்தும் கிடைத்து விட்டது ! இதோ பார் !" என்று கத்திக் கிழவனை எழுப்ப முயன்றனர்.

அவனை எப்படி எழுப்ப முடியும்? அவன் தான் மீளா நித்திரையில் ஆழ்ந்துவிட்டானே !

கதையை முடித்து விட்டு அந்தப் புதிய மனிதர் "எப்படி ஸார், கதை?" என்று கேட்டார். அவருடைய கண்களின் ஓரங்களில் கண்ணீர் கசிந்திருந்தது. அவர் முகமே உணர்ச்சி வசப்பட்டிருந்தது.

அப்பொழுது ரயில் வந்துவிட்டது. அவரைப் பார்த்து, 'நீங்கள்தான் அந்தக் கிழவனிடம் பந்து வாங்கக் காசு வாங்கிக் கொண்ட பையனா?' என்று கேட்க நினைத்தேன். ஆனால் ஏனோ கேட்கவில்லை. அதற்குள் அந்தப் புதிய மனிதர் வேகமாகப் போய் வண்டியில் ஏறிக் கொண்டார்.

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ்:

9, செம்புதாஸ் தெரு, மதறாஸ் -1

அநேகரின் வேண்டுகோளுக்கிணங்கி நாங்கள் ஒவ்வொருவரின் சக்திக்குகந்த எங்கள் புதிய குறைந்த கால சீட்டு வரிசை மீண்டும் ஆரம்பித்திருக்கிறோம்.

## எங்கள் புதிய

## மாதாந்திர சீட்டுகள்

பிப்ரவரி மாத சீட்டு வரிசை
(4-வது ஞாயிற்றுக்கிழமை ஏல வரிசை)

சந்தா செலுத்தும் கடைசி தேதி 20-2-53 முதல் ஏலத் தேதி 22-2-53

எங்கள் புதிய சீட்டு வரிசைகள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| C | ரூ. 100/- | ரூ. 2000/- |
| D | ரூ. 50/- | ரூ. 1000/- |
| E | ரூ. 25/- | ரூ. 500/- |
| F | ரூ. 20/- | ரூ. 400/- |
| G | ரூ. 15/- | ரூ. 300/- |
| H | ரூ. 10/- | ரூ. 200/- |
| | 20 மாதங்கள் | 20 சந்தாதாரர்கள் |

விலாசத்தைத் தெளிவாக எழுதி மனுச் செய்து கொள்பவர்களுக்கு விதிகளும் நிபந்தனைகளும் இலவசமாக அனுப்பப்படும். ரூ. 25-க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் செக் கமிஷன் இன்றி பெற்றுக்கொள்ளப்படும். சீட்டில் சேர்த்துக்கொள்ளும் உரிமை கம்பெனியைச் சேர்ந்தது. சீக்கிரம் விண்ணப்பித்து சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்.

(போர்டார் உத்தரவுப்படி) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்

உங்கள் சேமிப்புப் பெருக எங்கள் சீட்டுகள் உதவுகின்றன.

தந்தி: 'KALLIFUNDS'

---

PZY-21-TAM



# வெடிப்பும் நோயும் கொண்ட பாதத்திற்கு விரைவில் இதமளிக்கும்

வலியுள்ள பாதத்திற்கு ஜாம்-பெக் மூலிகை களிம்பைப் போடுங்கள். அதன் துரிதமான இதமளிக்கும் தன்மையை நீங்களே அறிந்து கொள்ளலாம். அதிலிருக்கும் நோய்க் கொல்லும் மருந்துக்கலப்புள்ள தைலங்கள், நோய், நன்னாமை ஆகியவற்றைப் போக்கி வெடிப்புகளை ஆற்றி, வீக்கம், புண் ஆகியவற்றைக் குணப்படுத்தும். ஜாம்-பெக்கின் ஊடுருவிப்பாய்ந்து வேலை செய்யும் குணம் எப்போதும் இதமளிப்பதாகும். இன்றே ஜாம்-பெக் வாங்குங்கள். சருமம் சம்பந்தப்பட்ட நோய்களுக்கும், வெட்டுக்காயம், தெருப்புப்புண், கஞ்சிக் கொப்பளம், விஷப்புண்கள், ரணங்கள், சேற்றுப்புண், பூச்சிக்கடி, மூல உபத்திரவம் ஆகியவற்றிற்கும் ஜாம்-பெக் உலகப் பிரசித்தி பெற்ற நிவாரணியாகும்.

**Zam-Buk**

ஜாம்-பெக் உலகத்தின் தலைசிறந்த சரும ஆயின்ட்மெண்ட்




மிருகக் கொழுப்பற்றது என்பதற்கு உத்திரவாதம்

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்.



# வழக்கும் விசாரணையும்

ரா. கி.

## 3. உயிருக்கு ஆபத்து!

பிரபாகரைக் காணக் கள்ளிக் கோட்டையில் உள்ள அத்தனை பிரபல வியாபாரிகளும் வந்து குழுமி விட்டனர். பிரபாகர் நல்ல தேர்ந்த வியாபாரி அல்லவா! எல்லோரையும் தனது கட்டிக் கொண்டால்தானே அவர் வியாபாரம் செழிக்கும்! ஆகவே, வந்தவர்கள் ஒவ்வொருவரிடமும் நாலு வார்த்தைகள் நல்லபடியாகப் பேசி விடை பெற்றுக் கொண்டார். இவ்விதம் தெரிந்த மிர்ஜா தாவூத்தும் அவருக்கு அதற்கெல்லாம் அவகாசம் கொடுத்துச் சிறிது நேரம் ஒதுங்கி யிருந்தார். சிறிது நேரத்துக் கெல்லாம் பிரபாகர், "மிர்ஜா சாஹேப்! அப்புறம் என்ன விசேஷம்!" என்று கேட்டவாறே அவரை அணுகினார்.

"விசேஷம் என்ன! நீதான் வெளியிலிருந்து வந்திருக்கிறாய். விசேஷம் நீதான் சொல்ல வேண்டும்.—ஏன், பிரபாகர்! இந்தத் தடவை நீ என்ன என்ன பொருள்களெல்லாம் கொண்டு வந்திருக்கிறாய்!" என்று கேட்டார் மிர்ஜா தாவூத்.

"இந்தத் தடவை மிக நேர்த்தியான துணிகள் கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் அம்மாதிரித் துணிகளை இதுவரை பார்த்தே இருக்க மாட்டீர்கள். சிலந்தி வலையைக் காட்டிலும் மெல்லியவை. அவை எப்படி யிருக்கும் என்று நீங்களே பார்த்துக் கொள்ளுங்களேன்! நூற்றைம்பது கஜத் துணியைக் கைப் பிடிக்குள் அடக்கிக் கொண்டு விடலாம் என்றால் அதிகம் சொல்லுவானேன்!.........ஆமாம், ஒரு மடிக்கு ஐந்து தோலாத் தங்கம் தரவேண்டும். அதைக் காட்டிலும் ஒரு தம்பிடி கூடக் குறைத்து வாங்கிக் கொள்ள மாட்டேன். ஆமாம், இப்பொழுதே சொல்லி விட்டேன். கொச்சியில் எனக்கு நான்கு தோலாத் தருவதாகச் சொன்னார்கள். ஆனால் நான் விற்கவில்லை. கஷ்டப்பட்டு விட்டு வீட்டுக்குப் போனால் அவள் வாயால் வசவு கேட்பது நானா, நீங்களா! அவள் வாயில் புகுந்து புறப்பட எனக்குத் திராணி யில்லை. அவள் என்னை அடிக்க வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை" என்றார் பிரபாகர் கண்களைச் சிமிட்டிக் குறுநகை புரிந்தவாறே.

"அடிபட்டால் அடிபடேன்! அவள் கையால் அடிபடுவதற்கு நீ கொடுத்து வைத்திருக்க வேண்டும், அப்பா!......சரி, விளையாட்டுப் பேச்சு அப்புறம் ஆகட்டும். முதலில் பொருளைக் காட்டு, பார்ப்போம்!" என்றார் மிர்ஜா தாவூத்.

"என்ன சொன்னீர்கள்! அடிபடவா! நன்றாயிருக்கிறதே, நீங்கள் சொல்வது! இப்பொழுது தான் நான் புதிதாகப் பெண்டாட்டி கட்டியிருக்கிறேன். இப்பொழுது தான் எங்களுக்கு வயது காலம். இப்பொழுதே அடிபட ஆரம்பித்து விட்டால் அப்புறம் நான் என்ன ஆவது, எங்கே போவது!...அது கிடக்கட்டும். உங்கள் மனைவிக்கு உடம்பு சரியில்லை என்று கேள்விப்பட்டேனே! இப்பொழுது எப்படி யிருக்கிறது! குணம் அடைந்து விட்டதா! வேறு ஏதாகிலும் நற்செய்தி உண்டா!" என்று கேட்டார் பிரபாகர்.

"கடவுள் புண்ணியத்தில் ஒரு பெண் குழந்தை பிறந்திருக்கிறது" என்றார் மிர்ஜா தாவூத்.

"அப்படியா! பேஷ், பேஷ்! இவ்வளவு நேரம் இந்தச் சமாசாரத்தைச் சொல்லாமல் மூடி மறைத்து வைத்து விட்டீர்களே! பெண் பிறந்தால் தகப்பனுக்கு ஆயுசு அதிகரிக்கும் என்று எங்கள் பக்கத்தில் சொல்வார்கள். அப்படியானால் இன்று தங்கள் மாளிகையில் எனக்கு ஒரு நல்ல விருந்து இருக்கிறது என்று சொல்லுங்கள். எங்கள் பக்கத்திலே கோழி - கீழி உண்ணக் கிடைப்பதில்லை. பிராம்மணர்களுக்காக வேறு அஞ்சி அஞ்சிச் சாக வேண்டியிருக்கிறது. ஆமாம், இந்தக் கனவான் யாரோ! இம்மாதிரி விசித்திர உடை உடுத்தியவர்களை நான் இதுவரை பார்த்ததில்லையே! இவர்கள் எங்கிருந்து வந்திருக்கிறார்கள்!" என்று தூரத்தில் வரும் இரு நபர்களைச் சுட்டிக் காட்டிக் கேட்டார் பிரபாகர்.

வாஸ்கோ டி காமா தன் இரு தோழர்களுடன் தம்மை நோக்கி வருவதைக் கவனித்தார் மிர்ஜா தாவூத். இதற்கிடையில் அவனுக்கும் அவருக்கும் எத்தனையோ தடவை சந்திப்பு ஏற்பட்டுவிட்டது. "இவர்கள் எல்லோரும் போர்த்துகீசியர்கள். போகப் போகத் தானாக இவர்களைப் பற்றி நீ தெரிந்து கொண்டு விடுவாய்!" என்றார் தாவூத்.

இதற்குள்ளாகப் பிரபாகரின் சரக்குகள் அத்தனையும் கப்பலிலிருந்து இறங்கி விட்டது. விய

பாரிகள் அவற்றின் மாதிரியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மிர்ஜா தாவூத் ஒரு சிறு மல்மல் துண்டைக் கையில் எடுத்துப் பார்த்து விட்டு, "இது மிகமிக நேர்த்தியான மல்மல் துணி தான். ஆமாம், இது எத்தனை கொண்டு வந்திருக்கிறாய்!" என்று கேட்டார்.

"வள்ளிசாக ஒரு கப்பல் கொண்டு வந்திருக்கிறேன்!" என்றார் பிரபாகர்.

"சரி, அந்தக் கப்பல் சரக்கு அவ்வளவும் என்னுடையது. விலைவாசியைப் பற்றி இன்றிரவு நம் வீட்டில் சாவகாசமாகப் பேசிக் கொள்ளலாம். என்ன, தெரிந்ததா!" என்றார் மிர்ஜா தாவூத்.

வாஸ்கோ டி காமா இதற்குள் அருகே வந்து விட்டான். அவனும் மல்மல் துணியை எடுத்துப் பார்க்கலானான். தன் வாழ்நாளில் முதன் முதலாக இம் மாதிரித் துணியை அவன் இங்கேதான் பார்த்தான். ஏனெனில் இந்த மாதிரி மல்மல் துணிகள் பாரசீகத்தைத் தவிர வேறு எந்த நாட்டுக்கும் ஏற்றுமதி ஆனதில்லை. போர்த்துகீசியா, ஸ்பெயின், பிரான்சு முதலிய நாடுகளுக்கு மட்டரகமான மல்மல்கள்தான் போய் வந்தன. இந்த மல்மலைப் பார்த்ததும் அவனுக்கு ஒரு ஆசை உண்டாயிற்று. 'இந்த மல்மல் துணியை வாங்கிச் சென்று நம் நாட்டு அரசனுக்கு அன்பளிப்பு அளித்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' என்று எண்ணினான். ஆகவே, "இந்த மல் மல்லை நான் விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்!" என்றான்.

"இதை நான் வாங்கி யாகி விட்டது!" என்றார் மிர்ஜா தாவூத்.

வாஸ்கோ டி காமா அதைக் கேட்டதும் பிரபாகர் பக்கம் திரும்பி, "இவரைக் காட்டிலும் நான் இதற்கு அதிக விலை தருகிறேன்!" என்று ஆசை வார்த்தை காட்டினான்.

"அதிக விலை கொடுத்தாலும் இது உங்களுக்குக் கிடைக்காது. ஏனெனில் இனி இது என்னுடையதாகி விட்டது" என்றார் மிர்ஜா தாவூத்.

தாவூத்தின் வார்த்தையைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே வாஸ்கோ டி காமா பிரபாகரைப் பார்த்து, "நான் இதற்கு இவரைக் காட்டிலும் இரண்டு மடங்கு விலை தருகிறேன். என்ன சொல்கிறீர்கள்!" என்றான்.

"நூறு மடங்கு விலை தந்தாலும் இது உங்களுக்குக் கிடைக்காது. வீண்பேச்சு எதற்கு!" என்று விட்டெறிந்தாற்போல் பேசினார் மிர்ஜா தாவூத்.

வாஸ்கோ டி காமா மின்னல் வேகத்தில் திரும்பி மிர்ஜா தாவூத்தைப் பார்த்தான். பிறகு கடுமையும் கசப்பும் தொனிக்கும் குரலில், "ஏய், மூர்! வாயைத் திறக்காதே! சும்மா இரு. நான் உன்னைக் கேட்கவில்லை. சரக்கின் சொந்தக்காரருடன் பேசிக் கொண்டிருக்கிறேன்!" என்றான்.

பிரபாகர் தொழில் முறை தெரிந்தவர்; கெட்டிக்காரர். மிர்ஜா தாவூத் அவருடைய பழைய வாடிக்கைக்காரர். அத்துடன் அந்தப் புதிய மனிதனைப் பிரபாகருக்குத் தெரியவும் தெரியாது. ஆகவே, "இந்தச் சரக்கின் சொந்தக்காரர் இனி மிர்ஜா ஸாஹேப்தான். இனி இது சம்பந்தமாக எனக்கு எவ்விதமான உரிமையோ பொறுப்போ கிடையாது. விற்பதென்றாலும் அவர்தான் விற்றாக வேண்டும்" என்றார்.

வாஸ்கோ டி காமாவின் அநாகரிகமான செய்கையும் பேச்சும் மிர்ஜா தாவூத்துக்கு மிகவும் கெட்ட கோபத்தை வருவித்து விட்டன. அவர் முகம் ரத்தச் சிவப்பாகச் சிவந்தது. ஆகவே, கூரிய சொற்களில் மிகவும் கசப்பாக, "வாஸ்கோ டி காமா! எனக்கு முன்பே தெரியும். நான் நினைத்த படியே இன்று உன் உண்மை உருவத்தைக் கண்டேன். வியாபாரம் என்பது உனக்கு ஒரு சாக்குப்போக்கு. நீ திருடன். இல்லா விட்டால் அதிகமான அநுசித விலை கொடுப்பதாகக் கூறி இவ்விடத்து வியாபாரத்தைக் கெடுத்து மண்ணாக்க முனைய மாட்டாய்!" என்றார்.

காயமுற்ற புலியைப்போல் உறுமிக்கொண்டே கோபம்கொண்ட வாஸ்கோ டி காமா இடையிலிருந்த உடைவாளை உருவினான்.

பிறகு, "என் வெறுப்புக்காளான ஹே மூர்! இன்று உன் ரத்தத்தை உறிஞ்சி என் வாள் தன் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறது பார்!" என்று கத்தினான்.

அதைக் கேட்ட மிர்ஜா தாவூத், "ஏய், பரங்கிப் பதரே! இன்று உன்னை நரகத்துக்கு அனுப்பி விட்டு மறு காரியம் பார்க்கிறேன். என்னை யார் என்று எண்ணினாய்!" என்றார் ரோஷத்துடன்.

கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள்ளாக ஜனக் கும்பல் நகர்ந்து விலகி நின்று அவர்கள் போர் செய்வதற்கு இடம் செய்து கொடுத்தது. அமைதி நிறைந்த வியாபார ஸ்தலமாயிருந்த பொழுதிலும், அங்கே இம்மாதிரிச் சம்பவம் நிகழ்வது இதுதான் முதல் தடவை என்பது அல்ல. வியாபார ஸ்தலமா யிருந்தும் கூட அங்கே வாளும் வேலும் எத்தனையோ தடவை மோதிப் போர் புரிந்திருக்கின்றன.

மிர்ஜா தாவூத்தும் வாஸ்கோ டி காமாவும் ஒருவரை யொருவர் விஷந் தோய்ந்த விழிகளுடன்



பார்த்துக் கொண்டனர். வாஸ்கோ டி காமாவின் சரீரம் விசாலமானதாயிருந்தது போலவே, பலமும் யானையைப் போன்றிருந்தது. இருவரையும் ஒன்று சேர்த்துப் பார்க்கும்பொழுது மிர்ஜா தாவூத் அவனைக் காட்டிலும் எவ்வளவோ சின்னவர்தான். யானைக்கும் பூனைக்கும் என்பார்களே, அவ்வளவு வித்தியாசம் அவ்விருவருக்கும் இடையே இருந்தது. ஆனால் மிர்ஜா தாவூத் கஞ்சன்ன ராகத்தைப்போல் உள்ளூறக் குமுறிக் கொண்டிருந்தார்.

இருவருடைய வாள்களும் மோதி ஒலித்தன. மிர்ஜா தாவூத் தம்மை வெட்டி வீழ்த்தும் நோக்கத்துடன் வாஸ்கோ டி காமா தன் வாளை வீசுவதற்கு முன்பாகவே, மின்னல் வேகத்தில் பாய்ந்து தம் வாளினால் அவன் தொடையைப் பதம் பார்த்து விட்டார். அவன் பின் நகர்ந்து அவர் வாள் வீச்சிலிருந்து தப்பத்தான் முயன்றான். ஆயினும் அவனுக்குப் பூரண வெற்றி கிடைக்கவில்லை. ரத்தத்தினால் அவன் தொடை நனைந்து விட்டது. அதற்கப்புறம் அவன் தன்னை ஜாக்கிரதை செய்து கொண்டு வாள் வீச ஆரம்பித்தான். இருந்தாலும் எதிரி தன்னைக் காட்டிலும் அதிக சாமர்த்தியசாலி என்பதைத் தெரிந்து கொள்ள அவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. மறுபடி சிறு பிழை நேர்ந்து விட்டாலும், தான் மரணத்தின் வாயில் சிக்க நேரும் என்பதையும் அவன் நன்கு உணர்ந்து கொண்டான்.

மிர்ஜா தாவூத்தும், வாஸ்கோ டி காமா தம்மைக் காட்டிலும் அதிகப் பலம் பொருந்தியவன் என்பதையும் தம் வாளைக் காட்டிலும் அவனுடைய வாள் அதிகக் கூர்மை வாய்ந்தது என்பதையும், அவனே கடைசியில் வெற்றி வாகை சூடிக் கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை என்பதையும் நன்கு உணர்ந்திருந்தார். ஆகவே, அவரும் கண் குத்திப் பாம்பாக, சர்வ ஜாக்கிரதையுடன் போரிட்டார்.

வாஸ்கோ டி காமாவின்மீது மிர்ஜா தாவூத் வாள் வீசுவதோடு நிற்காமல் தம் சொல் அம்புகளையும் வீசி அவன் உடலுடன் உள்ளத்தையும் துளைக்கலானார். "ஏய், பரங்கிக் கொள்ளைக்காரா! தலை நிமிர்ந்து ஒரு முறை என்னைப் பார்! உன் ரத்தம் மனிதனின் ரத்தத்தைப் போல் சிவப்பாக இல்லை. சாத்தானின் ரத்தத்தைப் போல நீலமா யிருக்கிறது. வெளி நாட்டு நாயே! இப்பொழுதாவது மன்னிப்புக் கேள். நான் போனால் போகிறது என்று உன்னை விட்டு விடுகிறேன்" என்றார்.

வாஸ்கோ டி காமா வாய் திறந்து ஒன்றும் சொல்லவில்லை. விடாமல் சண்டை போட்டுக் கொண்டேயிருந்தான். மிர்ஜா தாவூத் அவனைக் குத்தித் தூண்டி விட்டுத் தைரியம் இழக்கும்படி செய்ய விரும்பினார். ஆனால் மிக மிகக் கெட்டிக்காரனான வாஸ்கோ டி காமா அவருடைய அந்த ரகசிய நோக்கத்தைப் புரிந்து கொண்டு விட்டான். யுத்தம் இன்னும் வலுத்தது. வாள் வீச்சின் வேகமும் அதிகரித்தது. ஒருவரையொருவர் எப்படி அடித்து வீழ்த்தலாம், கவிழ்க்கலாம் என்பதைத் தங்கள் தங்கள் சாமர்த்தியத்துக் கேற்றவாறு முயற்சித்துக் கொண்டிருந்தனர். இருவரும் அந்தச் சண்டையில் வியர்வையினால் சொட்டச் சொட்ட நனைந்து விட்டனர். வாஸ்கோ டி காமாவின் வாள் அடிக்கடி தாவூத்தின் கழுத்துக்கு வெகு அருகில் சென்று திரும்பியது. தாவூத் தம் வாளை வீசி 'டணார்' என்று அவனுடைய வாளின்மீது மோதி அவனுடைய ஒவ்வொரு வீச்சையும் வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தார். ஆகவே, அவரை அடித்துக் காயப்படுத்த நினைத்த அவனுக்குச் சிறிதும் அதற்கு இடமே கிடைக்கவில்லை.



இப்படியாகப் போரிட்டவாறே, தான் கடல் நீருக்கு வெகு அருகே வந்து விட்டதைக் கண்டான் வாஸ்கோ டி காமா. இனி ஒரு அடி நகர்ந்தால்கூட அவன் கடலில் விழ வேண்டியதுதான்; அவ்வளவு ஓட்டுக்கு வந்துவிட்டான் அவன். எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டு விட்டோமே என்று வாஸ்கோ டி காமா அப்பொழுது மனம் புழுங்கினான்.

மிர்ஜா தாவூத் சிரித்துக் கொண்டே, "டேய் பரங்கியனே! இன்று உன்னைக் கடலில் முழுக்காட்டி மூச்சுத் திணற வைத்துச் சாக அடிக்கிறேன், பார்! அதுமட்டும் அல்ல; அதற்குப் பிறகு உன் பிணத்தை உன் நாட்டு அரசன் இமானுவேலுக்கே வெகுமதியாக அனுப்பி வைக்கிறேன். என்னை இலேசுப்பட்டவன் என்று எண்ணாதே!" என்றார்.

சண்டையில் மிர்ஜா தாவூத் விரும்பியபடியே நடந்தது. வாஸ்கோ டி காமா உணர்ச்சி மீறிப் போனதன் பலனாகத் தைரியமிழந்து விட்டான். வெறி பிடித்த எருமைக் கடாவைப் போலக் கத்திய

"ஏன் சார், ஊரில் எல்லோரும் வீட்டைக் கட்டுகிறார்கள், கோவிலைக் கட்டுகிறார்கள், அதைக் கட்டுகிறார்கள், இதைக் கட்டுகிறார்கள், நம் பிள்ளை மாத்திரம் ஒன்றும் கட்டாமல் சும்மா இருக்கிறாரே?"

"ஓய், அவர் இங்கே சும்மாவா இருக்கிறார்? முன்னால், மாட்டைக் கட்டி விட்டு வந்து, இப்பொழுது முழங்காலைக் கட்டிக் கொண்டிருக்கிறார், ஐயா!"

---

வாறு மிர்ஜா தாவூத்தின் மீது கத்தியை முறை மீறி வீசினான். அச்சமயம் மிர்ஜா தாவூத் நினைத்திருந்தால் அவனை வெகு சுலபமாக வேலை தீர்த்துக் கட்டியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. அவனுடைய வலது கையைப் பார்த்துத் தம் வாளை வீசினார். வாஸ்கோ டி காமாவின் வாள் கையிலிருந்து வெகுதூரம் சென்று விழுந்தது. அடுத்த கணம் அவன் காயமுற்றுக் கீழே விழுந்து விட்டான்.

வாஸ்கோ டி காமாவின் இரு தோழர்களும் நின்ற வண்ணம் வாஸ்கோ டி காமாவுக்கும் மிர்ஜா தாவூத்துக்கும் நடந்து கொண்டிருந்த போரை அதுவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். டி காமா கீழே விழுந்து விடவே, இருவரும் அவன் உதவிக்காக விரைந்தனர். அதைக் கண்ட ஒரு நீக்ரோ அடிமை, அதற்கு இடம் கொடுக்காமல் அவர்களுக்கிடையே குறுக்கிட்டு, இருவருடைய தலைமயிரையும் பிடித்துக் கரகரவென்று இழுத்து வெகு தூரத்துக் கப்பால் தள்ளி விட்டான்.

மிர்ஜா தாவூத் வாளின் முனையை வாஸ்கோ டி காமாவின் மார்பிலே வைத்து அழுத்தி, "டி காமா! முழங்காலை மண்டியிட்டு வணங்கு. இல்லாவிட்டால், உன்னைக் கொன்று போட்டு விடுவேன்!" என்றார் ரௌத்திராகாரமான கோபத்துடன்.

அதைக் கேட்டதும் டி காமாவின் முகம்போன போக்கைச் சொல்லி முடியாது. அவனுடைய விகாரமடைந்த முகத்தைப் பார்க்கவே மிகவும் பயங்கரமாயிருந்தது. இருந்தாலும் அவன் தன்னை ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டு, "ஸார்! நிராயுதபாணிகளைக் கொலை செய்வது என்பது உன் போன்றோர்க்குத்தான் அழகு!" என்றான்.

மிர்ஜா தாவூத் கண நேரம் யோசித்தார். பிறகு, "சரி! உன்னை விட்டு விடுகிறேன். ஆனால் நீ ஒரு பிரதிக்ஞை செய்ய வேண்டும்!" என்றார்.

டி காமா, "பிரதிக்ஞையா? முடியாது, முடியாது. நான் எந்தவிதமான பிரதிக்ஞையும் செய்ய முடியாது" என்றான்.

அதைக்கேட்ட மிர்ஜா தாவூத், "முடியாதா? நீ பிரதிக்ஞை செய்துதான் ஆகவேண்டும். இன்றிலிருந்து ஒரு வாரத்துக்குள் இங்கிருந்து உன் கும்பலுடன் போய் விடுவதாகவும், அப்புறம் இந்தப் பக்கம் தலைகாட்டுவதில்லை என்றும் நீ ஆணையிட்டுச் சொன்னால்தான் உன்னை உயிர் பிழைக்க விடுவேன்!" என்றார்.

டி காமா அட்டகாசச் சிரிப்புச் சிரித்து "ஸார்! நீ எவ்வளவு பெரிய முட்டாள் தெரியுமா? என்னை நீ கொன்று போட்டாலும் சரி, நான் பிரதிக்ஞை செய்து தர முடியாது. என் ரத்தத்தினால் கள்ளிக்கோட்டை மண் நனையுமானால் இந்தியாவில் இமானுவேலின் வெற்றிக் கொடி வெகு இலகுவாகப் பறக்கத் தொடங்கி விடும் என்பதை நினைவு வைத்துக் கொள்!" என்றான்.

மிர்ஜா தாவூத் சிரித்து விட்டு, "அட்படியா! பேஷ்! கடைசியில் இவ்வளவு நாட்கள் கழித்தாவது உன் உள்ளத்தில் உள்ள விஷயத்தைச் சொன்னாயே. ஆனால் அது நடவாத காரியம்; கனவிலும் நடவாத காரியம். இமானுவேலின் வெற்றிக் கொடியை ஒரு நாளும் இங்கே நிலைநாட்ட முடியாது. கள்ளிக் கோட்டை, பூமியில் உள்ள எல்லா ஜாதியினரும் மதத்தினரும் கலந்து உறவாடும் இடமாகத்தான் எந்நாளும் இருக்கும். பிரதிக்ஞை செய். இல்லாவிட்டால்..." என்றார்.

டி காமா புருவத்தை நெளித்துச் சூடான குரலில், "இல்லாவிட்டால் என்ன செய்து விடுவாய்?" என்று கேட்டான்.

"...இல்லாவிட்டால் ஒரு போர்த்துகீசியன்கூட இங்கிருந்து க்ஷேமமாகத் திரும்பிப் போர்த்துகீசியாவுக்குப் போக மாட்டான். உன்னுடைய நூற்று முப்பது கூட்டாளிகளையும் வெட்டிக் கடலில் போட்டு விடுவேன். உன் கப்பல்களைத் தீக்கு இரையாக்கி விடுவேன்!" என்றார் தாவூத்.

டி காமா வாய் அடைத்துப் போய்விட்டான். அப்பொழுது தான் அவனுக்குத் தான் பொறியில் அகப்பட்டுக் கொண்ட எலியாக இருப்பது தெரிந்தது. இக்கட்டான அந்த நிலையிலிருந்து தப்புவதற்கு ஏதாவது வழி இருக்கிறதா என்று யோசித்துப் பார்த்தான். வழி புலப்பட்டால் தானே! எனவே, மிர்ஜா தாவூத்துக்கு என்ன பதில் சொல்வதென்று புரியாமல் விழித்தான்.

அவன் அவ்வாறு விழிப்பதைக் கண்ட மிர்ஜா தாவூத் மறுபடியும், "டி காமா! இன்னும் காலம் தாழ்ந்து விடவில்லை. ஆணையிட்டுச் சொல்லிவிடு. நான் உன் தர்மத்தின் மீது நம்பிக்கை வைத்து உன்னை விட்டு விடுகிறேன். சற்றுத் தீர யோசித்துப் பார்! உன் கூட்டாளிகள் அனைவரும் கொல்லப்பட்டால், உன் நாட்டில் உள்ள மற்ற பிச்சைக் காரர்களுக்கு யார் வழிகாட்டி இவ்வளவு தூரம் இந்நாட்டுக்கு மறுபடியும் அழைத்து வருவார்கள்!" என்றார்.

டி காமா, துக்கம் தொண்டையை அடைக்க, "நான் ஆணையிடுகிறேன்" என்றான்.

"நீ உன் கிறிஸ்து பேரிலும் அன்னை மேரியின் மீதும் ஆணையிட்டுச் சொல்!" என்றார் மிர்ஜா தாவூத்.

மிர்ஜா தாவூத் சொன்னபடி டி காமா, "நான் ஒரு வாரத்துக்குள் இந்தியாவை விட்டு என் கூட்டாளிகளுடன் வெளியேறி விடுகிறேன். அப்புறம் இங்கே திரும்பி வரமாட்டேன்!" என்று அன்னை மேரியின் மீதும் கிறிஸ்துமீதும் ஆணையிட்டுச் சொன்னான். அவன் ஆணையிட்டதும் மிர்ஜா தாவூத் அவன் மார்பில் அழுத்தியிருந்த தம் கத்தியை எடுத்து விட்டார். (தொடரும்)




பரிசுக் கதை: கூகென்ஹீம் (ஸ்விட்ஜர்லாந்து) மொழிபெயர்ப்பு: வாஞ்சி

நானும் என் அருமை நண்பன் ரோஜர் ஸ்டெக்கும் ஒரே பள்ளிக்கூடத்தில் வாசித்தவர்கள் மாத்திரமல்ல, ஒரே பெஞ்சியில் ஒருவர் பக்கத்தில் ஒருவர் உட்கார்ந்து வாசித்தவர்கள். ஆனால் மெட்ரிகுலேஷன் பரீட்சைக்குப் பிறகு நாங்கள் பிரிந்து விட்டோம். அவன் அவனுக்கு உகந்த ஒரு பாதையில் சென்றான்; நான் வேறொரு பாதையில் செல்லத் தொடங்கினேன்.

அவன் வைத்தியப் படிப்புக்காகக் கல்லூரியில் சேர்ந்தான். நான் ஜீவனோபாயத்திற்கான பாதையை நாடிச் சென்றேன்.

ஸ்விட்ஜர்லாந்து மலைகளில் உள்ள ஓடைகளைப் போல் என் வாழ்க்கையும் பல ஏற்றத் தாழ்வுகளுடன் கரடுமுரடாகவும் வளைந்து வளைந்தும் செல்லலாயிற்று.

இரண்டொரு வருஷங்களுக்குப் பிறகு, கல்லூரிப் பரீட்சையில் தேறிப் பட்டம் பெற வேண்டும் என்ற ஆசை என்னை ஆட்கொண்டது. ஆனால் அந்த ஆசை நிறைவேறுவதற்கு ஒரு விஷயம் பெரும் முட்டுக்கட்டையாக இருந்தது. லத்தீன் பாஷையில் தேர்ச்சி பெற்றாலன்றி, நான் கல்லூரிப் பரீட்சையில் தேற முடியாது. லத்தீன் பாஷையோ எனக்கு ஜன்ம விரோதியாக இருந்தது.

படிப்பில் மாத்திரமல்ல, பிறருக்கு யுக்தி சொல்லிக் கொடுப்பதிலும் ரோஜர் சூரன் ஆனதால், அவனது உதவியை நாடினேன். லத்தீன் பாஷையைக் கற்றுக் கொள்ள அவன் ஏதாவது அரிய யோசனை கூறக் கூடும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டாயிற்று.

நான் கூறியவற்றை நிதானமாகக் கேட்ட ரோஜர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு, "சரி, புறப்படு. சிகையலங்காரக் கடைக்குப் போகலாம்" என்று சொல்லி அவசரமாக எழுந்தான்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் கல்லூரிப் பரீட்சையில் தேறுவதற்கும் சிகையலங்காரக் கடைக்கும் என்ன சம்பந்தம்?

"ரோஜர்! விளையாடுவதற்கு இது சமயமல்ல" என்றேன் சிறிது கோபத்துடன்.

"விளையாடவில்லை அப்பா, உண்மையாகவே சொல்லுகிறேன். நீ பரீட்சையில் தேறுவது சிகையலங்காரக் கடைக்காரனின் திறமையைத்தான் பொறுத்திருக்கிறது" என்று கூறினான் ரோஜர்.

அவன் தன் கூற்றை விவரமாக விளக்கிய பின்தான், அவனது யுக்தி என்ன என்பது எனக்குப் புலனாயிற்று.

பரீட்சை தினத்தன்று காலையில் நாங்கள் சிகையலங்காரத்தில் நிபுணனான ஒருவனின் கடைக்குச் சென்றோம். தனக்கு ஒரு போலி மீசை வைத்து அலங்காரம் செய்ய வேண்டும் என்று ரோஜர் கூறியதைக் கேட்ட கடைக்காரன் திகைத்துப் போனான்.

"காலையில் இந்த நேரத்தில் பொய் மீசை வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது?"

இவ்விதம் கடைக்காரன் கேட்டு விட்டு எங்களைச் சந்தேகத்துடன் ஒரு விதமாகக் கவனிக்கத் தொடங்கினான். அப்போது ரோஜர் தன் முழு சாமர்த்தியத்தையும் உபயோகித்து அவனைச் சமாதானப் படுத்த வேண்டியிருந்தது.

"கல்லூரி மாணவர்களான நண்பர்களை ஏமாற்றித் தமாஷ் செய்வதற்காகத் தான் இந்த வேஷம் போட்டுக் கொள்ளப் போகிறேன்; வேறு ஒன்றுமில்லை."

இவ்விதம் ரோஜர் கூறியதுடன், கடைக்காரன் மேற்கொண்டு ஆட்சேபணை செய்யாமல் இருப்பதற்காக அவன் கையில் கொஞ்சம் சில்லறையையும் வைத்தான்.

அந்தக் கடையிலிருந்து வெளியே வந்த போது ரோஜர் உருமாறி விட்டான். அவனது மாறுவேஷம் யாரும் கண்டு பிடிக்க முடியாத வாறு பொருத்தமாக இருந்தது. மீசை மாத்திரம் சரியாக ஒட்டிக் கொள்ளாதலால், ரோஜர் அதை முறுக்கிக் கொள்ளும் பாவனையில் சரிவர அழுத்தி ஒட்டிக் கொள்ளும்படி செய்தான். பிறகு இருவரும் பிரிந்து வெவ்வேறு பக்கமாகச் சென்றோம்.

* * *

கல்லூரிப் பரீட்சை மண்டபம் திறப்பதற்கு முன் மாணவர்கள் எல்லோரும் வெளியில் காத்துக் கொண்டிருந்தார்கள். என் மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டிருந்தது. ஒருபுறம் பரீட்சையின் முடிவு என்ன ஆகுமோ என்ற கவலை வாட்டியது; மற்றொரு புறம் ரோஜர் மேற்கொண்டுள்ள நாடகம் எப்படி முடியுமோ என்றும் என் மனம் கலங்கியது.

அச்சமயத்தில் புதிய மீசையுடனும் சுத்தமான உடைகளுடனும் ரோஜர் வந்து சேர்ந்தான். யாரும் எளிதில் அடையாளம் கண்டு பிடிக்க முடியாத விதத்தில் அவனது உருவம் மாறியிருந்தது. அவன் என்னைப் பார்த்தான். எனினும் அவன் முகத்தில் புன்முறுவல் எதுவும் தோன்றவில்லை. முகம் தெரியாத அன்னியனை எப்படிப் பார்ப்பானோ, அதுபோலவே என்னைப் பார்த்துக் கொண்டு அப்பால் சென்று விட்டான்.

கதவு திறக்கப்பட்டதும் எல்லாரும் உள்ளே சென்றோம். நான் குறிப்பிட்ட ஓரிடத்தில் உட்கார்ந்தேன். அப்போது நான் தற்செயலாக வாயிற்புறத்தைப் பார்த்தபோது, என் மனம் பகீரென்றது. காவற்காரனுக்கும் ரோஜருக்கும் ஏதோ கடுமையான வாக்கு வாதம் நடந்ததே என் பீதிக்குக் காரணம்.

ரோஜர் கூறிய பெயர் பரீட்சைக்கு எழுதுவோரின் ஜாப்தாவில் இல்லை என்று காவற்காரன் கூறினன்.

" சரியாகப் பார், இருக்கும். அப்படியே என் பெயர் அச்சாகாமல் விடப் பட்டிருந்தாலும், அது யார் குற்றம்? என் குற்றமல்ல. ஜாக்கிரதை!" என்று துணிந்து ஒரு போடு போட்டான் ரோஜர்.

ரோஜரின் நடை உடை பாவனையில் எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமில்லாததால், மேற்கொண்டு பேச்சை முற்றவிடக் காவற்காரன் விரும்பவில்லை. தவிர, போலி ஆசாமி எவனாவது அவ்வளவு துணிந்து பரீட்சைக்கு எழுதக் கல்லூரி மண்டபத்துக்குள் நுழைவானா என்றும் தோன்றியது அவனுக்கு. எனவே, மேற்கொண்டு வார்த்தையை வளர்த்தாமல் ரோஜரை உள்ளே விட்டு விட்டான்.

அன்று எனக்காக என் நம்பரைப் போட்டு ரோஜர் பரீட்சைக்கு எழுதி விட்டதால், நான் தேறிவிட்டேன் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை!

அன்று ரோஜர் கல்லூரி அதிகாரிகளிடம் அகப்பட்டுக் கொண்டிருந்தால், அவனைக் கல்லூரியிலிருந்து பகிஷ்காரம் செய்திருப்பார்கள். அதனால் அவனது எதிர்கால வாழ்க்கைக்கே குந்தகம் ஏற்பட்டிருக்கக் கூடும். எனவே எனக்காக அத்தகைய பேருதவி செய்த நண்பனை நான் எப்படி மறக்க முடியும்?

எனினும் எனது ஆயுளில் மற்றொரு தடவையும் ரோஜரின் பேருதவியை நாடும்படி நேரும் என்று நான் அப்போது நினைக்கவே இல்லை. ஆனால் மேற்படி சம்பவம் நிகழ்ந்த பல வருஷங்களுக்குப் பிறகு நான் மறுபடி





சபா காரியதரிசி:—அதான் அப்பவே முதற் கொண்டு சொல்லுகிறேனே... முதலில் சின்னக் கச்சேரியாகத் தான் இருந்தது. எல்லோரும் பேசிப் பேசி பெரிய கச்சேரியாக ஆக்கி விட்டார்கள்!

---

யும் ரோஜரின் உதவியை நாடும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது

ரோஜரின் உதவியால் கல்லூரிப் படிப்பில் தேறிய நான், அதைத் தொடர்ந்து இலக்கியத் துறையில் உத்தியோகம் எதுவும் ஏற்கவில்லை. அதற்கு மாறாக, யாருக்கும் இடம் கொடுக்கும் சினிமாப்பட உலகில் பிரவேசித்தேன்.

ஹர் புருனெட்டி என்ற பிரமுகர் சொந்தத்தில் விளம்பர பிலிம் கம்பெனி ஒன்றை நடத்தி வந்தார். பலவிதமான யுக்திகளைக் கையாண்டு மேற்படி கம்பெனியின் மூலம் அவர் நல்ல லாபம் சம்பாதித்து வந்தார். என்னைப் போன்ற இலக்கிய 'மேதாவி'களை உபயோகித்துக் கொள்ள அவர் தயங்கவில்லை எனில், அவரது கம்பெனியின் தரத்தை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்!

அப்போது இரண்டாவது மகா யுத்தம் ஆரம்பமாகி யிருந்தது. எனவே, பிறநாடுகள் சம்பந்தமான சினிமாப் படங்களைப் பார்ப்பதில் ஜனங்கள் ஆர்வம் கொண்டிருந்தார்கள். ஆகையால், ஹர் புருனெட்டி அரேபியா, துருக்கி, எகிப்து முதலிய நாடுகள் சம்பந்தமான படங்களை எடுப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்.

எனினும் அந்தப் படங்களில் ஒன்று என்னைப் பெரும் சங்கடத்துக்கு உள்ளாக்கும்; அதன் காரணமாக நான் ரோஜரின் உதவியை நாடும்படி நேரும் என்று அப்போது நான் கனவிலும் நினைக்கவில்லை.

* * *

அச் சம்பவம் 1942-ம் வருஷம் ஜூன் மாதம் எட்டாம் தேதி நிகழ்ந்தது.

நான் ஒரு ஹோட்டலில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். எனக்குப் பக்கத்து மேஜையில் இரண்டு பேர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். எத்தனையோ பேர்கள் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும் அச்சமயத்தில், அந்த இருவர் மாத்திரம் ஏனோ என் கவனத்தைக் கவர்ந்தனர். நான் சிறிது நேரம் அவர்களையே உற்றுப் பார்த்தேன். அவர்களுடைய நடை, உடை, பாவனை எல்லாம் அவர்கள் ஜெர்மன் இராணுவ அதிகாரிகள் என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டின. மேற்படி யுத்தத்தில் ஸ்விட்ஜர்லாந்து நடுநிலைமை வகித்ததால், அந்த நாட்டில் அப்போது அடிக்கடி ஜெர்மன் இராணுவ அதிகாரிகள் கண்ணில் தென்படுவது உண்டு.

ஆனால் நான் பிறகு ஹர் புருனெட்டி கம்பெனிக்குச் சென்ற போது அங்கும் அந்த இரண்டு ஜெர்மன் அதிகாரிகள் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அதைப் பார்த்த போதுதான் என் மனத்தை என்னவோ செய்தது.

அவர்கள் என்ன காரியமாக வந்திருக்கிறார்கள் என்று கம்பெனிக் காரியதரிசியான பிராவின் காகெலைக் கேட்டேன். அவன் அவ்விஷயமாகத் தனக்கு எதுவுமே தெரியாது என்று கூறிவிட்டான்.

உடனே மாடிக்குச் சென்றேன். அங்கு 'ஆபரேட்டர்' ரெமி கோபத்துடன் ஏதோ முணு முணுத்துக் கொண்டிருந்தான்.

"திடீரென்று தங்களுக்கு ஏதோ ஒரு பழைய படம் வேண்டும் என்று சற்று முன் இரண்டு பேர் வந்து சேர்ந்தார்கள். அந்தப் படத்தைத் தேடி எடுத்துக் கொடுப்பதற்குள் என் பிராணன் போய்விட்டது. உருப்படாத அந்தப் பழைய படத்துக்கு இப்போது என்ன கிராக்கி வந்து விட்டதோ, தெரியவில்லை!" என்று மிகவும் அலுத்துக் கொண்டான் ரெமி.

"இவ்வளவுதானே? அவர்களிடம் படச் சுருளைக் கொடுத்தாகி விட்டதா?" என்றேன்.

"இல்லை. ஜெர்மனியில் ஸ்டட்கார்ட்டில் உள்ள ஒரு சினிமாக் கம்பெனிக்கு மேற்படி படத்தைப் பார்சலில் அனுப்பும்படி கூறி விட்டுப் போனார்கள்" என்றான் ரெமி.

நானும், 'இவ்வளவு தானா' என்று எண்ணியவனாய்க் கீழே இறங்கி 'பார்க்' பக்கமாகச் சென்றேன்.

வெகு நேரத்துக்குப் பிறகு, ஸ்டட்கார்ட் ஸ்டேஷனிலிருந்து செய்தி கேட்பதற்காக யாரோ ரேடியோவைத் திருப்பினார்கள். லிபியாவில் உள்ள நைட்ஸ் பிரிட்ஜில் ஜெனரல் ரிட்சி தோல்வி அடைந்தார் என்ற செய்தி அந்த ஸ்டேஷனிலிருந்து தடபுடலாக ஒலி பரப்பப்பட்டது.

அங்கிருந்தவர்களுக்கு மேற்படி செய்தி சிறிதும் பரபரப்பை உண்டாக்கவில்லை. அடுக்கடுக்காக ஜெர்மனியின் வெற்றி பற்றிய செய்திகளைக் கேட்டுக் கேட்டுப் பழக்கமாகி விட்டது அல்லவா? ஆனால், அந்தச் செய்தியைக் கேட்டதும் எனக்கு மாத்திரம் தூக்கி வாரிப் போட்டது.

நான் எங்கேயோ மூலையில் கிடக்கும் சாதாரண மனிதன்தான். இருந்தாலும் அப்போது என் மூளையில் திடீரென்று ஒரு மின்னொளி தோன்றியது. நான் துள்ளிக்

குதித்தேன். ஊர் புருனெட்டி கம்பெனியை நோக்கி ஓடினேன்.

ரெமி ஓர் ஓரத்தில் உட்கார்ந்து சாவதானமாக சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான்.

"ரெமி, பார்சல் போய் விட்டதா?" என்று பரபரப்புடன் கேட்டேன்.

"எந்தப் பார்சல்?"

"அதுதான், அந்த அரேபியா படப் பார்சல்."

"ஒரு மணி நேரத்துக்கு முன்பே பையன் அதை எடுத்துக் கொண்டுபோய் விட்டானே!" என்றான்.

"அந்தப் படத்தில் என்னென்ன இருக்கிறது? உனக்கு ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டேன்.

ஆனால் ரெமி என்னுடைய பரபரப்பையும் கலக்கத்தையும் சிறிதும் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

"நான் பிடித்த படத்தில் என்னென்ன இருக்கிறது 'என்பது எனக்கு ஞாபகம் இராமற் போய் விடுமா?" என்று திருப்பிக் கேட்டான் ரெமி.

"அந்தப் படத்தில் என்னென்ன காட்சிகள் இருக்கின்றன? சீக்கிரம் சொல்லு" என்று அவசரப் படுத்தினேன்.

"ஸூஎஸிலிருந்து மெக்கா வரையில் நடந்த சண்டை சம்பந்தமான படங்கள் அதில் இருக்கின்றன."

"சரி, சரி, சண்டை நடந்த பாதைகள் அதில் இருக்கின்றனவா?"

"ஆமாம், இத்தாலி, மத்தியதரைக் கடல், கிரீஸ், போர்ட் செட், கெய்ரோ, ஸினை முதலிய இடங்கள் அதில் காணப் படுகின்றன. அது எவ்வளவு அழகான படம், தெரியுமா? ஒட்டகங்களின் ஓட்டம், படகுகளின் காட்சி, கோட்டைகள், பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள்......"

"ரெமி! போதும், நிறுத்து உன் கதையை. எகிப்து வாசற்படியில் ரோம்மெல் நின்று கொண்டிருக்கும் இச்சமயத்தில் நீ கேந்திர ஸ்தானங்களைத் தெளிவாகக் காட்டும் படத்தை ஜெர்மன் ஒற்றர்களிடம் விற்று விட்டாய். உன்னைக் காட்டிலும் மோசமான ஒரு பைத்தியக்காரன் இந்த உலகத்தில் இருக்க முடியுமா?"

இவ்விதம் ஆத்திரத்துடன் சொல்லிவிட்டு, நான் கம்பெனியை விட்டு வெளியேறினேன். யாருக்கும் தெரியாத மேற்படி இரகசியத்தை அறிந்த எனக்கு மேலே என்ன செய்வதென்று தோன்றவில்லை. அந்தப் பார்சல் ஜெர்மானியர்களின் கைக்குப் போய் விடாமல் தடுக்க என்ன செய்வது? அதன் மூலம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு ஏற்படக்கூடிய பேராபத்தை எவ்வாறு தவிர்ப்பது?

* * *

இவ்விதம் என் மனம் தத்தளித்துக் கொண்டிருக்கும் சமயத்தில்தான் எனக்கு என் நண்பன் ரோஜரின் ஞாபகம் வந்தது. நான் கல்லூரிப் பரீட்சையில் தேறுவதற்காகத் தன் பெயருக்கே ஹானி ஏற்படும்படியான காரியத்தைத் தயங்காமல் செய்த ரோஜர், இச்சமயத்திலும் எனக்குச் சரியாக உதவி புரியலாம் அல்லவா?

ரோஜர் தன் அறையில் உட்கார்ந்திருந்தான். அவனிடம் எல்லா விவரங்களையும் கூறினேன். ஜெர்மன் தளபதிகளுக்கு அந்தப் படத்தைக் காட்டிலும் வெற்றியைக் கொடுக்கக்கூடிய ஆயுதம் வேறு எதுவும் இருக்க முடியாது என்று சொன்னேன். உடனே எனக்கு ஒரு மோட்டார் வேண்டும் என்றேன். அது யுத்த காலமானதால், டாக்டர்கள் மாத்திரம்தான் மோட்டார்கள் வைத்துக்கொள்ள அனுமதிக்கப் பட்டிருந்தார்கள்.

## ஸ்ரீ புரந்தர தாஸர் ஆராதனை விழா

● ○ ●

நாதோபாஸனை மூலம் பகவத் ஸாந்நித்யம் பெற்ற ஸ்ரீ புரந்தரதாஸர் ஆராதனை விழாவை ஜனவரி 11-ந் தேதி முதல் 17-ந் தேதி வரை திருவல்லிக்கேணி ஸ்ரீ புரந்தரதாஸ பஜனை மண்டலியார் வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். அந்த மகானின் ஆராதனை வைபவத்தை ஒட்டி தினந்தோறும் மாலை வேளைகளில் நடந்த சங்கீதக் கச்சேரிகளில் பல பிரபல வித்துவான்கள் பங்கெடுத்துக் கொண்டனர். பொதுமக்களும் பக்தர்களும் ஏராளமாக விஜயம் செய்து அந்த வைபவத்தைச் சிறப்பித்தனர்.



மோட்டாரில் எல்லைப்புறத்துக்குச் சென்று, அந்தப் பார்சல் ஸ்விட்ஜர்லாந்து எல்லையைத் தாண்டுவதற்கு முன் அதைத் தடுத்துவிட வேண்டும் என்பது என் எண்ணம்.

ரோஜர் சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையில் உட்கார்ந்திருந்தான். பிறகு என்னைப் பார்த்து "அந்தப் பார்சல் இன்று எல்லையைக் கடந்து செல்லாது. நாளைக் காலையில் சுங்க ஆபீசில் பரிசோதனை செய்த பின்தான் பார்சல்களை வெளியே அனுப்புவார்கள். நாளைக் காலையில் நாம் அந்த ஆபீசுக்குச் சென்று விட்டால் போதும்" என்றான்.

அவன் குறிப்பிட்டபடி அவனுடன் அவனுடைய மோட்டாரிலேயே மறு நாள் காலையில் சுங்க ஆபீசுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

சிறிது நேரத்தில் கதவைத் திறந்தனர். அங்குள்ள அதிகாரியினிடம் நான் பார்சலைப் பற்றிக் கேட்பதற்காக வாயெடுத்தேன். ரோஜர் என் கையை அழுத்தினான்.

"நீ பேசாமல் இரு. நேரடியாகப் போனால் உன் காரியம் பலிக்காது. நீ என்ன காரணம் கூறித் தலைகீழாக நின்றாலும், பார்சலை உன்னிடம் கொடுக்க மாட்டார்கள்" என்று காதோடு காதாகச் சொன்னான்.

எனவே, பார்சலைத் திரும்பப் பெறும் பொறுப்பை அவனிடமே விட்டு விட்டேன்.

ரோஜர் தன் தோல் பெட்டியுடன் உள்ளே சென்றான். நானும் அவனைத் தொடர்ந்தேன்.

"அந்த நாய் வந்து விட்டதா?" என்று கேட்டான் ரோஜர் சுங்க அதிகாரியிடம்.

"எந்த நாய்?"

"ஜெர்மனிக்கு நாங்கள் அனுப்பியுள்ள நாய். அது உயர்ந்த ஜாதி ஆண் நாய். அதற்கு ஆகாரம் கொடுக்கத் தவறி விடாதீர்கள்."

"நாய் எதுவும் வந்ததாகத் தெரியவில்லையே!" என்றார் அதிகாரி யதார்த்தமாக.

"அதோ கோழிகள் முதலியன அடைக்கப்பட்டுள்ள கூடைகள் இருக்கின்றன. அங்கு போய்ப் பாருங்கள்" என்றார் தொடர்ந்து.

அதுதான் சமயம் என்று இருவரும் சென்றோம். என் கண்கள் நாலாபுறத்திலும் சுற்றிச் சுழன்றன. கடைசியில் நான் ரோஜரின் கையை வெடுக்கென்று கிள்ளினேன்.

"அதோ இருக்கிறதே, சிவப்பு முத்திரையுடன், அதுதான் அந்தப் படம் இருக்கும் பார்சல். புருனெட்டி கம்பெனியின் முத்திரைதான் அது" என்று மெதுவாகக் கூறினேன்.

"அதன் அருகில் சென்றதும், அப்படியே திடீரென்று கீழே விழுந்தாற்போல் பாசாங்கு செய். நான் சமிக்ஞை செய்யும் வரையில் நீ எழுந்திருக்கக் கூடாது. கண்களையும் திறக்கக் கூடாது" என்றான் ரோஜர்.

அப்படியே அந்தப் பார்சலுக்கு அருகில் சென்றதும் கீழே விழுந்து விட்டேன். உடனே சுங்க அதிகாரி 'என்ன, என்ன?' என்று கேட்டுக் கொண்டே பரபரப்புடன் அந்த இடத்துக்கு ஓடி வந்தார்.

"பயப்படாதீர்கள். என் நண்பனுக்கு அடிக்கடி இவ்விதம் வலிப்பு வருவது உண்டு. இஞ்ஜெக்ஷன் செய்தால் சரியாகி விடும்... கொஞ்சம் தயவு செய்து ஒரு கிளாஸில் தண்ணீர் கொடுக்கிறீர்களா?"

இவ்விதம் ரோஜர் கூறியது என் காதில் விழுந்தது. நான் கண்களைத் திறக்கவேயில்லை. திறந்தால் காரியம் கெட்டுப் போய் விடும் அல்லவா?

இரண்டொரு நிமிஷ நேரத்தில் அதிகாரியின் பேச்சுக் குரல் கேட்டது. ரோஜர் உண்மையிலேயே எனக்கு இன்ஜெக்ஷன் செய்யத் தொடங்கியது எனக்கு ஆச்சரியமாகவும் வேதனையாகவும் இருந்தது.

* * *

நான் கண்களை விழித்துப் பார்த்த போது, சுங்க ஆபீசுக்கு வெளியே உள்ள பெஞ்சியின் மேல் படுத்துக் கொண்டிருப்பதை உணர்ந்தேன். என் பக்கத்தில் ரோஜரும் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"என்ன, தூக்கம் கலைந்து விட்டதா?" என்று கேட்டான் ஏளனமாக.

"நான் சுங்க ஆபீசுக்கு உள்ளே அல்லவா வேண்டுமென்று கீழே விழுந்தேன்? இங்கு எப்படி வந்தேன்?" என்று கேட்டேன்.

"நான்தான் உனக்குத் தூக்க இஞ்ஜெக்ஷன் கொடுத்தேன். சுங்க அதிகாரி நம்மை அடிக்கடி சந்தேகத்துடன் பார்த்தார். அவர் சந்தேகப்படாமல் இருப்பதற்காகவே அப்படிச் செய்தேன். நீ கீழே விழுந்த சில நிமிஷ நேரத்தில் திடீரென்று எழுந்து சென்று விட்டால், அவருடைய சந்தேகம் உறுதிப்பட்டு விபரீதமாகி விடும் அல்லவா?"

"அது சரி. பார்சல் எங்கே?" என்று பரபரப்புடன் கேட்டேன்.

ரோஜர் தன் கைப்பெட்டியைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினான்.

"தண்ணீர் கொண்டு வருவதற்காகச் சுங்க அதிகாரி வெளியே சென்றபோது, லபக் கென்று அந்தப் பார்சலை எடுத்து என் பெட்டிக்குள் போட்டுக் கொண்டு விட்டேன். இனிமேல் நாம் யாருடைய சந்தேகத்துக்கும் ஆளாகாமல் இங்கிருந்து போகலாம், வா" என்று புறப்பட்டான் ரோஜர்.

* * *

அதே வருஷம் ஆகஸ்டு மாதம் எல் அலாமின் பிரதேசத்தில் தளபதி மாண்ட்காமெரி வெற்றிபெற்ற செய்தி கிடைத்தது. அதன் பலனாக சைல் பீடபூமியிலும் குயஸ் கால்வாய்ப் பிரதேசத்திலும் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் பலம் அடைந்தது.

அந்தப் படம் ஜெர்மனி தளபதிகளுக்குக் கிடைத்திருந்தால், யுத்தத்தின் போக்கு வேறு விதமாகி யிருக்கலாம். மிகவும் சாதாரண மனிதனான நான் யாரும் அறியாமல் மகத்தான காரியத்தைச் சாதித்த சந்தோஷம் எனக்கு ஏற்பட்டது. எனவே, பிரிட்டிஷ் தளபதி மாண்ட்காமெரி அடைந்த மாபெரும் வெற்றியில் எனக்கும் ரோஜருக்கும் பங்கு உண்டு அல்லவா?

# கோலினோஸ்

# இயற்கையின் அற்புதப் பச்சை க்ளோரோபில் சேர்ந்தது

## ...உங்கள் பல் சுத்திகரிப்பில் இதுவரை ஏற்படாத மாபெரும் அபிவிருத்தி!

செடிகொடிகளை பசுமையுடன் வைத்திருக்கும் பொருளாகிய இயற்கையின் சிருஷ்டி க்ளோரோபில் உதவியால் நாள் முழுதும் வாய் துர்நாற்றத்தை அகற்றுங்கள்....பல் சிதைவும் சாதாரண ஈறுக்கோளாறுகளும் ஏற்படாமல் தடுங்கள்!

உங்கள் பல் பராமரிப்புக்கு இதுவரை இல்லாத முறையில் மிகப் பயன்படக்கூடிய மார்க்கம் இதுவே, சந்தேகமில்லை. க்ளோரோபில் சேர்ந்த அற்புதமான கோலினோஸ் பல் சிதைவையும் சேர்க்கும் கிருமிகளையும் நேரடியாகத் தாக்குவது மட்டுமின்றி, வாய் துர்நாற்றத்தையும் நாள் முழுவதிலும் ஒழித்துவிடுகிறது. இதற்குக் காரணம் இந்தப் பச்சை க்ளோரோபில் தான் — தாவரங்களை பசுமையுடன் வைத்திருக்க இயற்கையால் சிருஷ்டிக்கப்பட்ட அற்புத ரசாயனப் பொருள்!

க்ளோரோபில் சேர்ந்த கோலினோஸ் விசேஷ பயனளிப்பது தவிர, சிக்கனமானதுங்கூட—ஈரமில்லாத பிரஷ் மீது அரையங்குலமே போதுமானது. பச்சை அட்டைப் பெட்டியில் எல்லா கடைக்காரர்களிடமும் கிடைக்கும். இன்றே வாங்கி, தந்த விஞ்ஞானத்தில் இதுவரை இல்லாத இம்மகோன்னத அபிவிருத்தியின் பயனை அடையுங்கள்!

புதிய பச்சை அட்டைப் பெட்டியை கவனியுங்கள்
ஸ்டாண்டர்ட் கோலினோஸ் (மஞ்சள் லேபில்) கூட கிடைக்கும்

**2000 அமெரிக்க பல் நோயாளிகள் க்ளோரோபில்லின் குணநலன்களை நிரூபிக்கின்றனர்**

நான்கு வருட ஆராய்ச்சி மற்றும் சுமார் 2000 அமெரிக்க பல் நோயாளிகளைக்கொண்டு நடத்தப்பட்ட மிக விரிவான சோதனைகள்....இவைகளின் பலனாக நிரூபணமானது என்னவெனில், க்ளோரோபில்லுடன் கூடிய டென்டல் க்ரீம்:—

- வழக்கமான சகல வகை ஈறுக் கோளாறுகளையும் சீர்படுத்துகிறது.
- நாள் பூராவும் வாயில் துர்நாற்றம் ஏற்படாமல் தடுக்கிறது.
- பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்துக் கட்டுகிறது.

உங்கள் பல் டாக்டர் இச்சோதனைகளைப்பற்றி அறிவார்....அவற்றின் பலன்களையும் ஊர்ஜிதம் செய்வார்.







இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜெப்ரீஸ் மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய் 1. கிளைகள்: கல்கத்தா — மதராஸ் — டில்லி





# சித்திரத்தின் ரகசியம்

ஏ. கே. பட்டுசாமி

பொழுது போல போலவென்று புலர்ந்து கொண்டிருந்தது. கீழ்வானத்தில் மூழ்கியிருந்த விடி வெள்ளி பெரியதொரு வைர மணியைப் போல் சுடர் விட்டுப் பிரகாசித்தது. தோட்டத்து மலர்களின் சுகந்தத்தை அள்ளிக் கொண்டு ஜன்னல் வழியாகச் சில்லென்று வீசிய காலைக் காற்று தாக்ஷாயணிக்கு ஆனந்தத்தைக் கொடுத்தது. இன்று அவள் சீக்கிரமே விழித்துக் கொண்டாள். ஆனால் படுக்கையிலிருந்து எழ மனம் வரவில்லை. சிறிது நேரம் சாளரத்தின் வழியாகச் சுக்கிரனை நோக்கிக் கொண்டிருந்தாள். முன் தினம் இரவு உறக்கம் வரும் வரையில் மூளையில் உரசிக்கொண்டிருந்த பிரச்னை மீண்டும் சட்டென்று தோன்றி உறுத்தத் தொடங்கியது. எவ்வளவு சிந்தித்தும் அவளால் ஒரு ஸ்திரமான முடிவுக்கு வர இயலவில்லை. எத்தனை கடினமான பிரச்னை!

குலசேகரனா, மேகநாதனா!

இருவரும் உறவினர்கள். அவளோடு படித்துப் பழகியவர்கள். ஒருவன் அமர கவி. மற்றவன் ஜீவ சைத்ரிகன். புகழேணியின் உச்சியை நோக்கி மள மளவென்று முன்னேறிக் கொண்டிருந்தனர்.

மேகநாதன் கம்பீரமான தோற்றமுடையவன். குழந்தை போன்ற சுபாவம். குறும்பும் பரிகாசமும் அவனது பிறவிக் குணங்கள். எத்தனையோ முறை அவளைத் தன் குறும்புக் குணத்தால் அழவைத்திருக்கிறான். ஆனால் மனத்தில் களங்கமற்றவன். எதிரே சுவரில் மாட்டப் பட்டிருந்த தாக்ஷாயணியின் 'பேசும் பொற் சித்திரம்' அவளுக்கென அவன் தீட்டித் தந்த அன்பளிப்பு. சமீபத்தில் அமெரிக்கக் கலைக் கழகம் அவனுக்கு அழைப்பு அனுப்பியிருந்தது.

குலசேகரன் சற்று மெலிந்தவன். ஆனால் அவனது கலை சொட்டும் முகமும் ஒரு எறும்புக்கும் தீங்கு நினையாத கனிந்த உள்ளமும் யாரைத்தான் பரவசப்படுத்தாது! முத்து முத்தான தன் சொந்தக் கையெழுத்தில் தாக்ஷாயணியின் பிறந்த தின வாழ்த்தாக அவன் இயற்றி அனுப்பிய "தெய்வத் தாமரை" என்னும் கவிதை, அவளது படத்துக் கருகில் கண்ணாடி போட்டு மாட்டப்பட்டிருந்தது. அவன் அவளை என்றும் வாடாது புது மணத்துடன் திகழும் தேவலோகத்துத் தாமரை மலருக்கு ஒப்பிட்டு வாழ்த்தி யிருந்தான்.

குலசேகரன்மீது அவளுக்கு அலாதி வாஞ்சை. அவனது உயர்ந்த நோக்கங்கள் அவளைப் பெரிதும் கவர்ந்தன என்பது என்னவோ உண்மை. ஆனால் இவற்றைக் கொண்டு மேகநாதனை நிராகரித்துவிட முடியுமா!

மூளை குழம்பியதைத் தவிர முடிவு ஒன்றும் ஏற்படவில்லை. அன்றையத் தபாலில் வந்த கடிதங்கள் அவளது பிரச்னையை இன்னும் அதிகச் சிக்கலாக்கி விட்டன.

கவிஞன் குலசேகரன் எழுதியிருந்தான்:

" தாக்ஷாயணி, உன் தந்தை எல்லா விஷயங்களையும் கூறினார். அவரைப் பொறுத்தவரையில் நீ எங்கள் இருவரில் யாரை வரித்தாலும் ஆக்ஷேபனை இல்லை. ஆனால் இது உனக்கு அத்தனை எளிதான விஷயமல்ல என்பதை நாங்கள் அறிவோம். ஆகையால் இதற்கு ஒரு வழி கண்டு பிடித்திருக்கிறோம்.

"ஒரு சிறிய காதல் கதையை நான் காவ்ய ரூபத்திலும் மேகநாதன் ஓவியமாகவும் சித்திரிக்க வேண்டியது. அவற்றில் எது சிறந்ததென்று நிர்ணயிக்கும் பொறுப்பு மட்டும் உன்னுடையது. இப் பரீக்ஷையில் வெற்றி பெறுபவன் தான் தாக்ஷாயணியின் கரத்தைப் பற்றுவதற்கு அருகதை யுள்ளவனாவான்.

"உனது முடிவு இருவரில் யாருக்குச் சாதகமானதென்றாலும் சரி, நாங்கள் சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளத் தயார். எனவே, நீ எள்ளளவும் கவலையின்றி முடிவு கூறலாம்.

"குறிப்பு:—பரீக்ஷை முடிவாகும் வரை உன்னை நேரில் சந்திக்க வரக்கூடாதென்று எங்களுக்குள் நிபந்தனை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

குலசேகரன்."

மற்றொரு கடிதம் ஓவியன் மேகநாதனிடமிருந்து வந்திருந்தது. அவன் எழுதியிருந்தான் :

'' தாக்ஷாயணி, மேகநாதன் பரீக்ஷை ஏற்படுத்தியிருக்கிறான். நீ ஏமாற மாட்டாய் என்று எனக்குத் தெரியும்! அமெரிக்காவிலிருந்து அழைப்பு வந்திருக்கிறது. நான் போட்டியில் தோற்றுப் போனால் உன்னை விமானத்தில் தூக்கிக்கொண்டு அமெரிக்காவுக்கு ஓடி விடுவேன். மறந்துவிடாதே!

மேகநாதன் ''

இந்தக் கடிதத்திலும் கூட எத்தனை குறும்பு! ஆனாலும் இது ரொம்பச் சிறுபிள்ளைத்தனம் என்றெண்ணினாள் தாக்ஷாயணி.

## 2

ஒவ்வொரு தினமும் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது இந்த நினைவு மனத்தை ஒரு பாரமாக அழுத்தியது. இது என்ன அசட்டுப் பரீக்ஷை! இதை நிர்ணயம் செய்யும் அளவுக்கு என்னிடம் என்ன யோக்யதை இருக்கிறது!' என்று மனம் குழம்பினாள் தாக்ஷாயணி.

அன்று மாலை இதே சிந்தனையோடு வெறு வெளியை நோக்கிக் கொண்டிருந்தாள். வேலையாள் இரண்டு பெரிய கடித உறைகளை அவளிடம் கொடுத்தான். அவளுக்குப் பகீரென்றது. விசாரணைக்காகக் கூண்டில் ஏற்றப் படும் கைதியைப் போல் மனம் துடித்தது. நடுங்கும் கரங்களால் முதலில் குலசேகரனின் உறையைப் பிரித்தாள்.

'' காதல் பரீக்ஷை'' என்ற மகுடத்தின் கீழ் எழுதப் பட்டிருந்த அந்தக் காவியம் முத்துக் கோத்ததுபோல் மூன்று பகுதிகளாகப் பிரித்தெழுதப் பட்டிருந்தது.

முதற் பகுதியின் சில வரிகளைப் படித்ததுமே அவளுக்கு மயிர்க் கூச்செடுத்தது. எத்தகைய அற்புதமான வர்ணனை!

''வஸந்த காலத்து இரவு. சோலையினருகே சலசலக்கும் நீரோடை. கிருஷ்ண பட்சத்து அஷ்டமியாகையால் அம்புலி இன்னும் உதயமாகவில்லை. ஓடையில் படர்ந்திருந்த அல்லிக் கொடியில், தண்மதியின் வரவுக்காகத் தவங்கிடப்பது போல் ஆகாயத்தை அண்ணாந்து நோக்கியிருந்தது ஒரு குமுதமலர். வெகு நேரமாகியும் வான வீதியில் தன் காதலன் இன்னும் வராதது கண்டு அதன் முகம் மலர்ச்சியின்றிக் கூம்பிக் கிடந்தது. வண்டுகள் அதைச் சுற்றி ரீங்காரமிட்டு, 'உன் உள்ளம் கவர்ந்தவன் இதோ வரப் போகிறான்! எங்கே, கொஞ்சம் சிரி, பார்க்கலாம்!' என்று அதற்கு ஆறுதல் கூறிக்கொண்டிருந்தன. இளந்தென்றல் முத்தமிட்டு அதை ஆசுவாசப் படுத்தியது. அதே சமயத்தில் தேய்ந்த சந்திரன் கருவானத்தில் சோர்ந்த முகத்துடன் உதயமானான். ஆனால் இதழ் விரியும்போது அதன்மீது படிந்திருந்த நீர்த் துளிகள் நாற்புறமும் சிதறின! இது என்ன!.........இத்தனை சந்தோஷத்திலும் குமுதம் கண்ணீர் உதிர்க்கக் காரணம் என்ன! ஆனந்த பாஷ்பமா அல்லது காதலனின் களைத்த முகத்தைக் கண்டு துக்கமா..!''

இந்தச் சூழ்நிலையில் கவிதையின் தலைவி தன் ஹிருதயநாதனுக்காக அச்சோலையில் ஏக்கத்துடன் காத்துக் கிடக்கிறாள். சந்திரனைப்போலவே அவனும் நேரந் தாழ்ந்து வருகிறான். அடுத்த சில வரிகளில் தலைவியின் சௌந்தர்ய வர்ணனை...... பின்னர் ஊடல்.

தலைவி செல்வச் சீமானின் புதல்வி. ஆனால் அவனோ எளிய குடும்பத்தைச் சேர்ந்தவன். இருவருக்குமிடையே கிடந்த ஆழமான மடுவை அவர்கள் பொருட்படுத்தவில்லை. இத்துடன் முதற் பகுதி முடிவடைந்தது.



இரண்டாம் பகுதியில் அவ் விளைஞன் தன் காதலியின் தந்தையைச் சந்தித்து அவருடைய சம்மதியைப் பெற முயற்சிக்கிறான். அவர் ரௌத்திராகாரமாகக் கோபமடைகிறார். அந்தஸ்தைச் சுட்டிக் காட்டி அவனைத் துச்சமாகப் பேசித் தூற்றுகிறார். யுவதி குறுக்கிட்டுத் தன் தந்தையின் பாதங்களில் விழுந்து கல்லும் கரையும் வண்ணம் கருணை காட்டும்படி மன்றாடுகிறாள். ஆனால் கல்லைவிடக் கடினமான அவரது ஹிருதயம் அசைந்து கொடுக்கவில்லை. செல்வச் செருக்கென்னும் மேகம் அவரது பகுத்தறிவென்னும் சந்திரனை மறைக்கிறது. அவர் அவ் வாலிபனைக் கழுத்தைப் பிடித்து வெளியே உந்திவிடுகிறார். அவர்களது தூயக் காதல் உலகத்தில் அந்தகாரம் பரவவே, அவர்களது ஹிருதயக் கோட்டை சுக்குநூறாக நொறுங்கி விட்டது.

மூன்றாவது அத்தியாயத்தில் காதலர்

# உங்களுடைய குழந்தைக்கு



# இருவித



## போஷாக்கு அவசியம்

ஸ்காட்ஸ் எமல்ஷன் மிகவும் சுத்த மான காட்லிவர் எண்ணெய். இயற்கையின் மிகவும் புஷ்டி மிக்க உணவு டானிக். அதில் விடமின் D நிறைந்திருப்பதால் ஒரு தேக்கரண்டி ஸ்காட்ஸில் நான்கு டம்ளர் பாலில் உள்ள எலும்பு வளர்க்கும் சக்தி நிறைந் திருக்கிறது. ஸ்காட்ஸில் உள்ள விடமின் A குழந்தைகளை தொத்து நோய்களும் இதர வியா திகளும் அணுகாமல் பாதுகாக் கிறது. ஸ்காட்ஸ் எமல்ஷனை விட எளிதில் ஜீரணமாகக் கூடிய, காட்லிவர் எண்ணெ யே கிடையாது.

## வளர்ச்சிக்கு



குழந்தைகளின் எலும்புகளையும் தசைகளையும் வளர்த்து—அவர் கள் செலவழிக்கும் சக்தியை மீட் டுத்தரவும்—பலத்தையும் வலி மையையும் சேகரித்து வைத்தி ருக்கவும், அவர்களுக்கு சரியான போஷாக்கு அவசியம். ஸ்காட்ஸ் எமல்ஷனில் எலும்பை வளர்க்கும் சத்துக் களும், வலிமையை உண்டுபண்ணும் போஷணையும் நிறைந்திருப்பதால், அது மேற்கூறிய வேலைகளை செய்கிறது.

## நோயை எதிர்க்க



இளம் வயதில் குழந்தைக ளின் ஆரோக்கியம் வியா தியால் பீடிக்கப்பட்டால் நிச்சயமாகவும் நிரந்தர மாகவும் பாதிக்கப்பட லாம். குழந்தைகளை தொத்துநோயினின்று காப்பாற்றவும், அவ ர்களுடைய நோய் எதிர்ப்புத் தன்மையை அதிகரிப்பத ற்காகவும் டாக்டர்கள் ஸ்காட்ஸ் எமல்ஷனை 79 வருடங்களாக சிபார்சு செய்துவருகிறார்கள்





**SCOTT'S Emulsion**

**ஸ்காட்ஸ் எமல்ஷன்**

ஒவ்வொரு தேக்கரண்டியிலும்

ஆரோக்கியம் நிறைந்திருக்கிறது

விநியோகஸ்தர்கள்

**இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிட்**

கல்கத்தா, பம்பாய், மதராஸ், கொச்சின், புது டெல்லி, கான்பூர்

S.3438



பெரியவர் (பெருமையாக):- டென்னிஸ் விளையாடுவதில் எனக்கு ரொம்ப அநுபவம் உண்டு. நீ பிறப்பதற்கு முன்னாலேயே விளையாட ஆரம்பித்து விட்டேன்!

வாலிபன்:—அப்படியா? ரொம்ப சந்தோஷம்! இப்பொழுது டிபன் நேரத்துக்குள் விளையாட்டை எப்படியும் முடித்துவிட வேண்டும்!

களின் சோகம். பரிதவிக்கும் அவர்களது மனோ நிலைமையின் வர்ணனை. இறுதியில், காதலில் வெற்றி பெறாத அவ்விளைஞன், மனமுடைந்து, துயரமும் அவமானமும் தாங்க மாட்டாமல் தற்கொலை புரிந்து கொண்டு உயிர் துறக்கிறான்.

விஷயம் என்னவோ சாதாரணமானதுதான். 'உத்தி' ஒன்றும் அப்படிப் பிரமாதமானதல்ல. எனினும் அதைக் கையாண்ட விதமும் கவிதையின் நயமும் அதை மறக்க முடியாத ஒரு சிரஞ்சீவி இலக்கியமாகக் கருதச் செய்தன.

கவிதையின் வேகம் சில இடங்களில் சுகமான தென்றலைப் போல் மந்தஹாஸ நடையில் சென்றது; சில இடங்களில் அருவி நீரோட்டம் போல் துள்ளி உருண்டோடியது. ரௌத்திரத்தில் கோடைகால மேகத்தைப் போல் பேரிடி முழக்கம் செய்து கர்ஜித்தது. பிரசண்ட வேகத்துடன் சோலையினுள் புகுந்து நெடு மரங்களை வேரோடு பறித்துச் சாய்க்கும் சூறாவளியைப் போல் சாடியது. சோகத்தில் ஒரேயடியாக அதில் மயானத்தின் அமைதி குடி கொண்டிருந்தது. படிப்பவர்களுக்கு, எல்லையற்ற பாலைவனத்தில் பதைக்கும் வெய்யிலில் சிக்கிக் கொண்ட யாத்ரிகளின் அனுபவத்தைக் கொடுத்தது. ஒவ்வொரு வார்த்தையையும் ரத்தினப் பரீக்ஷை செய்து பொறுக்கி அமைத்திருந்தான் குலசேகரன்.

தலைவியின் பால் தாக்ஷாயணிக்கு அநுதாபம் உண்டாயிற்று. அத்தனை மன்றாடியும் துளிக்கூட மனமிளகாத அத் தந்தை எத்தகைய கல்நெஞ்சன்! அவமானத்துடனும் பாரமான ஹிருதயத்துடனும் திரும்பும் அவ்விளைஞன்! அவனை ஏக்கத்துடன் கண்ணீர் மல்கப் பார்த்துக் கொண்டு நிற்கும் அந்த அழகி! நிராசையால் ஏற்பட்ட அந்தப் பயங்கரமான முடிவு! எல்லாமாகச் சேர்ந்து தாக்ஷாயணியை உலுக்கி விட்டன.

தாக்ஷாயணி பெருமூச்சு விட்டாள். அப்பப்பா! பிரமாதம்!...... குலசேகரன் பிறவிக் கவிஞன். கவிதைக்காக அவன் பிறந்தானா, அல்லது கவிதை அவனுக்காகப் பிறந்ததா!—இவ்வாறு எண்ணமிட்டது அவள் மனம்.

அடுத்தபடியாக மேகநாதன் அனுப்பிய அந்த உறையின்மீது அவளது பார்வை சென்றது. அவனது சித்திரங்கள் குலசேகரனின் கவிதையை எங்கிருந்து வெல்லப் போகின்றன!......கவிதையின் போதை தெளியாத மனத்துடன் அந்த உறையையும் பிரித்தாள். புத்தக ரூபமாக இணைக்கப்பட்டிருந்த அந்தச் சித்திர வரிசையின் மேலட்டையிலிருந்த வர்ண விசித்திர ஜாலங்கள் அவளது பார்வைக்கு மங்கலாகத் தெரிந்தன. சிறிது ஊன்றிக் கவனித்தாள்.

அழகிய மலர்ச் சோலை. அருகே ஓடிக்கொண்டிருக்கும் பளிங்கு நீரோடை. அமுத கிரணங்களைப் பொழிந்து கொண்டிருக்கும் அம்புலி சந்திரிகையின் ஒளி ஓடை நீரில் பிரதிபலித்தது. புஷ்பச் செடிகளின் உச்சி அதன் ஒளியில் பின்னியது. அருவிக் கரையில் ஒரு பாறை மீது அழகி யொருத்தி உட்கார்ந்திருந்தாள். அந்தச் சுந்தரியின் முகம் அவளுக்குப் பரிச்சயமானதாகத் தோன்றியது. அவள் திடுக்கிட்டாள். சுவரில் தொங்கிக் கொண்டிருந்த தனது உருவப் படத்தை உற்று நோக்கினாள் பிறகு மேகநாதனின் சித்திரச் சோலையில் வீற்றிருந்த மங்கையின் முகத்தையும் நோக்கினாள்...இராது!...பிரமையாகத்தான் இருக்கும்! மேகநாதன் இதில் தாக்ஷாயணியின் படத்தை எதற்காக வரையப் போகிறான்!......

அடுத்த பக்கத்தைப் புரட்டினாள். அதில் தலைவி தன் காதலனிடம் உரையாடிக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் கண்டது என்ன! தாக்ஷாயணி மேகநாதனுடன் கனிமொழி பேசிக் கொண்டிருந்தாள்! தாக்ஷாயணியைத் தலைவியாகவும் தன்னையே தலைவனாகவும் சித்திரித்திருந்தான் மேகநாதன்!

சடசட வென்று இரண்டு மூன்று பக்கங்களைத் தள்ளினாள். அந்தப் படத்தில் தாக்ஷாயணியின் தந்தை கனல் பறக்கும் கோபத்துடன் காட்சி யளித்தார். சித்திரப் புத்தகத்தை வீசி எறிந்தாள். அவளுக்குக் கோபமாக வந்தது. சித்திரம் வரைய வேண்டுமானால் அவன் படத்தை அவன் ஏன் வரைய வேண்டும்!

ஆனால் அக்கோபம் சிறிது நேரம்தான் நிலைத்திருந்தது. கீழே இறைந்து கிடந்த சித்திரங்களை நோக்கினாள். எதிரே கிடந்த படத்தில் மேகநாதனின் முகபாவம், "இதுதானா உனது நடுநிலைமை!" என்று அவளைப் பரிதாபமாகக் கேட்பது போலிருந்தது.

சித்திரங்களை எடுத்து அடுக்கினாள். விருப்பு வெறுப்பின்றித் தன் கடமையைச் செய்ய வேண்டுமென்ற வைராக்கிய மனத்துடன் மீண்டும் ஒவ்வொரு பக்கமாகப் புரட்டினாள். குலசேகரனின் காவியத்தில் படித்து அனுபவித்த கட்டங்கள் அத்தனையும் துளிக்கூட ரஸனை குன்றாது உயிரோவியமாகத் தீட்டப் பட்டிருந்தன. ஒவ்வொரு காட்சியிலும் கவிதையைப் படிக்கும் பொழுது உண்டாகாத பல புது உணர்ச்சிகள் உண்டாயின.

தலைவியின் தந்தை அவளது காதலனைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளும் அந்தக் காட்சி! ஆஹா! அந்த யுவனின் முகத்தில் ஏமாற்றம், அவமானம், துயரம் ஆகிய பாவங்கள் ஒன்று சேர்ந்து குமுறிக் கொண்டிருந்தன. மேலும் இரண்டு மூன்று பக்கங்களைத் தள்ளிக் கடைசிச் சித்திரத்துக்கு வந்தாள். கண நேரமே அதைப் பார்த்திருப்பாள்! புத்தகம் நழுவிக் கீழே விழுந்தது. அவளது மெய் சிலிர்த்து நடுங்கியது. இருதயம் படபடத்தது.

எத்தனை பயங்கரம்! கதாநாயகன் மேகநாதன் கழுத்தில் கயிறுடன் மரக்கிளையிலிருந்து தொங்கும் அந்தக் காட்சி! இதன் அர்த்தம் என்ன! அவன் ஏன் இவ்விதம் தனது உருவத்தையே இதில் சித்திரிக்க வேண்டும்!

மேகநாதனின் சுந்தர வதனம் அவளது மனக் கண்முன் தோன்றி, "தாக்ஷாயணி! காதலில்

ஏமாற்ற மடைந்தால் எனது முடிவு என்ன என்பதைத் தெரிந்து கொண்டாய்! இப்போது கூறு! உன்னுடைய முடிவு என்ன!" என்று கேட்பது போலிருந்தது.

## 3

என்ன முயன்றும் அவளால் அந்தக் கடைசிச் சித்திரத்தை மறக்கவே முடியவில்லை. உண்ணும் போதும், உலவும் போதும், உறங்கச் செல்லும் போதும் விடாது அந்தக் காட்சி அவளது மனக் கண்ணெதிரே வட்டமிட்டு அவளை அலைக் கழித்தது. உணவு சரியாகச் செல்லவில்லை. கண்களும் வெகு நேரம் வரையில் உறக்கம் கொள்ளவில்லை. இரவு இரண்டு மணிக்குமேல் இமைகள் அயர்ந்தன. ஆனால் அதிர்ச்சியடைந்த அவளது மூளை மட்டும் அப்போதும் வேலைசெய்து கொண்டுதானிருந்தது. சித்திரத்தில் கண்ட காட்சி கனவில் தோன்றியது. மரக் கிளையிலிருந்து தொங்கி ஊசலாடும் மேகநாதனின் பிரேதம் பிதுங்கிய கண்களை உருட்டி விழித்துப் பயங்கரமாக வாயைத் திறந்தது. "அடி சதிகாரி! உன்னைப் பற்றி என்னென்ன கனவுகள் கண்டேன்! எத்தனை இன்பக் கோட்டைகள் கட்டினேன்! கடைசியில் என் எண்ணத்தில் மண்ணைப் போட்டாய்! என் கழுத்தில் கயிற்றை மாட்டினாய்! என்னைக் கொலை செய்து விட்டாய்! கொலைகாரி! கொலைகாரி! கொலைகாரி!......" என்று கதறியது.

"இல்லை. நான் கொலைகாரியல்ல! நண்பனின் உயிரைக் குடிக்கும் நச்சுப்பாம்பு நானல்ல!...... வேண்டாம், தற்கொலை செய்து கொள்ளாதே! என்மேல் பழியைப் போடாதே! நான் தீர்மானித்து விட்டேன்! உன்னைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்! இறங்கி வா!" என்று உரக்கக் கத்தினாள் அவள்.

சட்டென்று உறக்கம் கலைந்து கண் விழித்தாள். உடல் பதறியது. சரீரம் முழுவதும் ஒரே வியர்வை வெள்ளம். படபடக்கும் ஹிருதயத்துடன் திணறித் திணறி மூச்சுவிட்டுக் கொண்டிருந்தாள்.

திடீரென்று விளக்கு பொருத்தப் பட்டது. எதிரே அவளது தந்தை நின்று கொண்டிருந்தார். "தாக்ஷாயணி, ஏன் வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளுகிறாய்?" என்று கேட்டார் அவர்.

"அப்பா!......" என்று ஏதோ கூற முயன்றாள் அவள். அடித் தொண்டையிலிருந்து குரல் வெளி வரவில்லை.

அவர் புன்னகையுடன் நிதானமாகப் பேசினார்.

"பைத்தியக்காரப் பெண்! வெட்கத்தினால் இத்தனை நாளும் மனத்திலிருப்பதை என்னிடம் கூறாமல் அடக்கி வைத்துக் கொண்டிருந்தாய்! அதன் பலன் தான் இந்த வீண் கனவுகள்! நீ பேசியதையெல்லாம் நான் கேட்டேன்......நாளைக் காலையே மேகநாதனிடம் கூறி வேண்டியவற்றைக் கவனிக்கிறேன் நிம்மதியாகப் படுத்துத் தூங்கு" என்று கூறி விட்டு அங்கிருந்து அகன்றார் அவர்.

## 4

சில மாத ஏழெட்டு தினங்கள் கழிந்தன. தாக்ஷாயணி மேகநாதனை மணந்து கொள்ளப் போகிறாள் என்ற விஷயம் பந்துமித்திரர்களிடையே பரவி விட்டது. அவளது தோழிகள் அவளை வெகுவாகப் பாராட்டினர். அவளுக்கு வரப் போகும் கணவன் ஒரு புகழ் வாய்ந்த கலைஞன்; நல்ல அழகன்; செல்வ நிலையிலும் குறைந்தவனல்லன்! இன்னும் என்ன வேண்டும்! ஆனால் அவளது மனம் மாத்திரம் நிம்மதியின்றித் தவித்தது. ஏதோ பெருத்த குற்றம் செய்துவிட்டதுபோன்ற ஒரு உணர்ச்சி மனத்தை அரித்தது.

இந்த ஏழெட்டு நாட்களாக அவள் குலசேகரனைப் பார்க்கவேயில்லை. தினம் ஒரு முறையாவது வரத் தவறாத அவன், முடிவு தெரிவிக்கப்பட்ட தினத்திலிருந்து திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. பாவம்! இயற்கையாகவே சங்கோசி! மிருதுவான இளகிய மனம்! முடிவைக் கேட்டு எத்தனை கஷ்டமடைந்திருப்பான்! அவளைப்பற்றி என்ன நினைத்திருப்பான்! அவளது முடிவு சரியானது தானா! அவனைப் பார்க்க வேண்டும், ஆறுதலாக ஒரு வார்த்தையாவது கூறவேண்டும், தன்மீது தவறிருந்தால் மன்னிக்கும்படி கேட்கவேண்டுமென்று அவள் மனம் தவியாய்த் தவித்தது. ஆனால் அவன் வீடு தேடிப் போகத் தைரியம் வரவில்லை. மேகநாதன் வேறு வரும்போதெல்லாம், "குலசேகரன் வந்தானா!...அவன் ஏன் வருகிறான்! தோல்வியடைந்த அவமானம் தலையைக் காட்ட முடியவில்லை போலும்!" என்று கூறி அவளது ஆத்திரத்தைக் கிளறிக் கொண்டிருந்தான்.

மேகநாதன் ஆனந்தத்தில் மிதந்து கொண்டிருந்தான். எதிர்பார்த்தபடி அவனுக்கு அமெரிக்கச் சித்திரக் கலைக் கழகத்திலிருந்து அழைப்பு வந்து விட்டது. பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் மூழ்கியிருந்தான்.

அன்று தாக்ஷாயணியின் வீட்டில் ஒரு சிறிய விருந்து, மேகநாதன் அமெரிக்கா செல்வதை யொட்டி. அப்படியே விவாகத் தேதியையும் நிச்சயித்து விடவேண்டுமென்பது அவளது தந்தையின் கருத்து. நண்பர்களும் பந்துக்களும் குழுமியிருந்தனர். ஒரே கோலாகலம். ஆனால் அவள் கானலில் வாடிய ரோஜா மலர்போல் களையிழந்து காணப்பட்டாள். அடிக்கொருமுறை வெளி வாசற்படியைப் பார்த்துப் பெருமூச் செறிந்தாள். அழைப்பு அனுப்பியிருந்தும் அவன் வரவில்லை. அவனது ஆள் கடிதம் கொண்டு வந்தான் தாக்ஷாயணிக்கு.

"சௌபாக்கியவதி தாக்ஷாயணிக்கு,

உனது முடிவைக் கேட்டு எனக்குப் பரம சந்தோஷம். மேகநாதன் உன்னை மணந்து கொள்ளச் சகல விதங்களிலும் தகுதியானவன். தென்றல் வீசும் பௌர்ணமி இரவில் அலைகளற்ற ஏரியில் ஆனந்தமாக மிதந்து செல்லும் படகைப்போல் நீங்களிருவரும் வாழ்க்கையில் முன்னேற வேண்டும். இதுதான் நான் இறைவனை வேண்டுவது. நேரில் வந்து உங்கள் மகிழ்ச்சியில் பங்குகொள்ள எவ்வளவோ ஆவல். ஆனால் 'உடல்நிலை சரியாக இல்லை. மன்னிக்கவும்—குலசேகரன்."

தாக்ஷாயணியின் இமைகள் நனைந்தன. அவள் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். மேகநாதன் அருகில் வந்தான்.

"என்ன, தாக்ஷாயணி! நீ அழும்படியாக என்ன எழுதியிருக்கிறான் அவன்!" என்று கேட்டான்.

அவள், கடிதத்தை அவனிடமளித்தாள். அவன் அதைப்படித்து விட்டுச் சிரித்தான்.

"பொறாமைக்காரன்! 'என் மனம் பொறாமைத் தீயினால் பொசுங்குகிறது. எனவே, எனக்கு வர விருப்பமில்லை!' என்று பட்டவர்த்தனமாகச் சொல்லுவானா! இப்படித்தான் உடம்பு கிடம்பு என்று ஏதாவது சாக்குக்காக எழுதுவான்! அதற்குப் போய் நீ கண்ணைக் கசக்குகிறாயே!"

"குலசேகரன் ஒன்றும் பொறாமைக்காரரல்ல!" என்று சற்றுப் படபடப்பாகவே கூறினாள் அவள்.

அவன் மீண்டும் நகைத்துக் கொண்டே, "அடேயப்பா! அவனுக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசுகிறாயே! ஹூம்! அவன் ஸ்தானத்தில்

நானிருந்தால் இப்படிப் பொறுமைப் படுவேனா! முதலில் அவளிடம் ஓடிப்போய்க் கைகுலுக்கி எனது மகிழ்ச்சியைத் தெரிவித்து விட்டல்லவா மறுவேலை பார்த்திருப்பேன்!" என்று குத்திக் காட்டினான். அதைக் கேட்ட தாக்ஷாயணி வாயடைத்துப் போனாள்.

"விவாகத் தேதியை நிச்சயித்து விடலா மல்லவா!" என்று கேட்டுக் கொண்டே வந்தார் தாக்ஷாயணியின் தந்தை.

"ஓ! அதற்கென்ன! நான் இன்னும் ஒரு மாதத்தில் அமெரிக்காவிலிருந்து திரும்பி விடுவேன். வந்தவுடனே வைத்துக் கொண்டால் போயிற்று. மற்ற விஷயங்களைத் தாக்ஷாயணியிடம் கூறிவிட்டுப் போகிறேன்!" என்று குறும்பாகக் கண்ணைச் சிமிட்டினான் மேகநாதன். அவள் முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

## 5

விமான நிலையத்தில் மேகநாதனை வழியனுப்பு வதற்காக நண்பர்கள் கூடி யிருந்தனர். மேகநாதன் குலசேகரனை வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு வந்திருந்தான். இந்தப் பத்து தினங்களில் குலசேகரன் நோயில் விழுந்தவன் போல் இளைத்துத் துரும்பாகி யிருந்தான். புறப்படும் நேரம் வரை மேகநாதன் அவனைப் பரிகசித்துக் கொண்டே யிருந்தான். குலசேகரனும் குதூகலமாக இருப்பதுபோலவே பாவனை பண்ணினான்.

விமானத்தில் ஏறுவதற்கு முன்னால் மேகநாதன் தாக்ஷாயணியிடம் ஒட்டப்பட்ட கடித உறையொன்றைக் கொடுத்து "தாக்ஷாயணி, இப்போதே பிரித்து விடாதே! வீடு போய்ச் சாவகாசமாகப் படி. குலசேகரனுக்கும் காண்பிக்கலாம். அமெரிக்காவிலிருந்து திரும்பியதும் விவாகம். மறந்து விடாதே!" என்றான். முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்த குலசேகரனிடம், "ஏய் உம்மணா மூஞ்சி! தாக்ஷாயணியைப் பார்த்துக் கொள், வருகிறேன்" என்றான். விமானம் புறப்பட்டது.

வீடு திரும்பியதும் தாக்ஷாயணி அக்கடிதத்தைப் பிரித்தாள்.

"தாக்ஷாயணி, இந்தக் கடிதம் உங்களிருவருக்கும் ஆச்சரியத்தையளிக்கலாம். இந்த எழெட்டுத் தினங்களாக எனது குறும்புத் தனத்தால் உன்னையும் குலசேகரனையும் அல்லற்படுத்தி விட்டேன். மன்னிக்கவும்.

"குலசேகரனுக்கு உன் மீதுள்ள காதல் கரை காணாதது. உன் மனமும் அவனையே நாடுகிறதென்பதை நான் அறிவேன். நான் ஒருவன் மட்டும் குறுக்கே இல்லாவிடில் அவனையே மணக்கத் தீர்மானிப்பதில் உனக்கு யாதொரு சங்கடமும் இருந்திராது. உன் சஞ்சல மனம் நிலையற்றுத் தத்தளித்தது. உனது நிலைமைக்கு இரங்கிய குலசேகரன் 'காதல் பரீக்ஷை'யைச் சிருஷ்டித்தான். நானும் உடன் பட்டேன்.

"உண்மையில் பரீக்ஷை எங்களுக்கல்ல. உனக்குத்தான். இந்தப் பரீக்ஷையைக் கொண்டே உன்னைச் சோதிப்பதற்காக நான் இதில் இறங்கினேன். எனது உருவத்தையே சித்திரித்தேன். சித்திரத்தைக் கண்டு நீ மருண்டாய். உனது மனத்தின் உண்மையை உன்னால் உணர முடியவில்லை. நீ தோல்வி யடைந்தாய்.

"கடைசி இரண்டு சித்திரங்களையும் கவனித்துப் பார். அவ் வாலிபனைத் தலைவியின் தந்தை, கழுத்தைப் பிடித்து உந்தும் பரிதாபமான காட்சி உன் மனத்தை இளக்கி விட்டது. ஆனால் பின்னால் வாசற்படியருகில் நிற்கும் கதா நாயகியைப் பார்! அவளது இதழ்களில் இலேசாகப் புன்னகை அரும்புகிறதே! இது நடக்கக் கூடியதா!

"கடைசிச் சித்திரம்! உன் மனத்தை உலுக்கிய கோரக் காட்சி! ஆனால் தூக்குப் போட்டுக் கொண்டவனின் இடது கால், அருகிலுள்ள மரக்கிளையின் மீது ஊன்றிக் கொண்டிருப்பதைக் கவனித்தாயா! உண்மையில் தூக்குப் போட்டுக் கொள்ளும் எண்ணமுள்ளவன் அவ்விதம் காலை ஊன்றிக் கொள்ளுவானா!......

"உனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியில் இந்த மகத்தான தவறுகளை உன்னால் கவனிக்க முடியவில்லை. உண்மையில் வெற்றி குலசேகரனுக்குத்தான். ஆனால் உனது சஞ்சல மனம் உன்னை ஏமாற்றி விட்டது. நீ உணர்ச்சி வசப்பட்டாய். முடிவும் எனக்குச் சாதகமாயிற்று. ஆனால் அதன் பிறகு...! உனது இருதயத்தின் அடிவாரத்தில் புதைந்து கிடந்த உண்மை உணர்ச்சி தலை தூக்கத் தொடங்கியது. பாவம், குலசேகரனையும் உனது அவசர முடிவு அலைக் கழித்து விட்டது. இந்தப் பத்து தினங்களில் அவன் நோயில் விழுந்தவன்போல் ஆகிவிட்டான்.

"போகட்டும். உங்களை இன்னும் அதிகமாகத் துன்புறுத்த மாட்டேன். உங்கள் இன்பத்திற்குக் குறுக்கே நிற்க மாட்டேன். நான் அமெரிக்காவிலிருந்து விரைவில் திரும்புவேன். அதுவரையில் எனக்காகக் காத்திருங்கள். வந்தவுடன் உங்கள் விவாகம்!.......உங்களுக்கு எனது மனமார்ந்த வாழ்த்துக்கள். —மேகநாதன்."

தாக்ஷாயணியின் கண்கள் ஆனந்தபாஷ்பத்தைப் பொழிந்தன. "எத்தனை பரந்த மனப்பான்மை!" என்று முணுமுணுத்தன அவளது உதடுகள்.



"ஏனப்பா அப்படி கத்துகிறாய்? நீ வெட்டிய கிளை காரில்விழுந்து விட்டதா?"

"விழுந்தால் அதற்கு அப்படி அலற மாட்டேன். என் மடியில் இருந்த அசோகா பொட்டலங்கள் தான் காரில் விழுந்து விட்டது."

"ஓஹோ! அதுதான் காரில் போகிறவர்கள் அவ்வளவு சந்தோஷப் படுகிறார்களோ!"

# டாடா அக்ரிகோ கருவிகள்

எந்த விதமான வேலைகளுக்கும் அக்ரிகோ கருவிகளே தகுதியானவை. அக்ரிகோ கருவிகள் ஹை கார்பன் ஸ்டீலிருந்து தயாரிக்கப்பட்டு, விசேஷமான உறுதியும் நீடித்துழைக்கும் தன்மையும் வாய்ந்திருப்பதால் அவை வெகுநாள் நன்றாக உழைக்கக்கூடியவை.



இருதலைச் செம்மட்டி.



எல்லா பண்ணை வேலைகளுக்கும்

## அக்ரிகோ

கருவிகளே தகுதியானவை



எண்கோண கடப்பாரை



மைசூர் மண்வெட்டி.



ஸ்வான் நெக் மண்வெட்டி.

தி டாடா அயரன் அண்ட் ஸ்டீல் கம்பனி லிட்

தலைமை ஸேல்ஸ் ஆபீஸ்
23 B, நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா-1
இதர ஆபீஸ்கள்:
பம்பாய், மதராஸ், நாக்பூர். அஹமதாபாத், செகந்திராபாத், விஜயநகரம் கண்டோன்மெண்ட், ஜலந்தர் கண்டோன்மெண்ட், கான்பூர்

AC. 3422




(சென்ற வாரத் தொடர்ச்சி)

குயிலினி தன் கண்களில் வழியும் நீரைத் துடைத்துக் கொண்டாள். தான் உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்தாள். அந்தக் கலைக் கூடத்தில் இப்படியும் அப்படியுமாக உலாவினாள். ஐம்பது வயது சென்ற மூதாட்டியாக இருந்தாலும் அவள் நடந்தபோது யாரோ ஒரு இளம் பெண் நடன மேடையில் நடந்தது போல நளினமாக இருந்தது. இப்படியே நடந்து கொண்டிருக்க மாட்டாளா என்று கூட நினைத்தேன். அடுத்த கணத்தில் ஏதோ சத்தியப் பிரமாணம் செய்வதைப் போல் என் முன் வந்து கம்பீரமாக அமர்ந்தாள். "மணிவண்ணன் ஓர் அபூர்வமான மனிதர். சுத்தமான இருதயம் படைத்தவர். உயர்ந்த பண்புகள் நிறைந்தவர்" என்றாள்.

அந்தச் சமயத்தில் வெளியில் மழை நின்று விட்டது. அதனால் தெருவிளக்கின் பிரகாசமான வெளிச்சம் ஜன்னல் கண்ணாடியின் வழியாக நாங்கள் இருந்த கூடத்தில் நன்றாக விழுந்தது. அந்த வெளிச்சம் குயிலினியின் முகத்தின் மீதும் லேசாகப்பட்டது. இப்பொழுது அவள் முகத்தை இன்னும் நன்றாகப் பார்க்க முடிந்தது. அவள் கண்களில் மிதக்கும் சோக விலாஸத்தைப் போல் நான் வேறு எங்குமே கண்டதில்லை. அவள் வாழ்க்கையில் ஏதோ ஒரு இனந் தெரியாத சோகம் அவளை வாட்டிக் கொண்டிருக்கிறது என்று எனக்குப்பட்டது. குயிலினி கதையைத் தொடர்ந்தாள் :

"நான் படித்த கதைகளிலே, காவியங்களிலே எல்லாம் பெண்களின் அழகைப் பற்றியும், அவர்களின் பெருமையைப் பற்றியுமே அதிகமாக எழுதியிருக்கிறது. அந்தக் கதைகளையும் காவியங்களையும் ஆண்களே இயற்றி விட்டபடியால் அவர்களுடைய உணர்ச்சிகளை மட்டும் எழுதி விட்டார்கள் என்று நினைக்கிறேன். ஆனால் உண்மையில் ஆண்கள்தான் அழகும் ஆண்மையும் நிறைந்தவர்கள். அவர்கள் அழகு வாடாமலர் போல என்றென்றும் நிலைத்து நிற்கும் அழகு. வளர்பிறைச் சந்திரனைப் போல் வளர்ந்துவரும் வனப்பையுடையது. இதையெல்லாம் பூரணமாகப் பெற்றவர் மணிவண்ணன். அவருடைய பரந்து விரிந்து கிடக்கும் மார்பும், ஓங்கி உயர்ந்து நிற்கும் தோள்களும், உருண்டு திரண்டு இருக்கும் நீளமான கைகளும், அழகு துள்ளும் முகமும், புன்சிரிப்பு தவழும் உதடுகளும், காதல் மிதக்கும் கண்களும், கற்பனைக் கெட்டாத கவின் உருவம். நான் அவரைப் பார்க்கும் போதெல்லாம் நினைத்திருக்கிறேன், நான் ஒரு கவியரசியாக இல்லையே என்று. ஒரு கலை உள்ளம் படைத்த கவிஞன் மட்டும் அவரைப் பார்த்து விட்டால் அவன் வாழ்நாள் முழுவதும் மணிவண்ணனைப் பற்றித்தான் கவிதைகள் இயற்றிக் கொண்டிருப்பான். அவனால் வேறு எதைப் பற்றியுமே நினைக்க முடியாது.

"அப்பேர்ப்பட்ட சுந்தர புருஷரிடம் என் மனத்தைப் பறிகொடுத்து விட்டதில், என் வாழ்வையே அர்ப்பணித்து விட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை என்பதை நானே பலமுறை உணர்ந்திருக்கிறேன். அவர் எனக்கு எழுதிய கடிதம் முதலில் என்னை வேதனைப் படுத்தினாலும் அதுவே எனக்கு ஆறுதலளிப்பதாகவும் இருந்தது. "...நான் உன்னை என்றும் மறக்க மாட்டேன்" என்ற கடைசி வாசகம் என்னை இன்பத்தில் ஆழ்த்தியது. திரும்பத் திரும்ப அந்த வரியை மட்டும் படித்தேன். என் இதயம் கவர்ந்தவரை என்றாலும் பார்க்காமல் இருக்க முடியாது என்பதை உணர்ந்தேன். பிறகு ஒரு முடிவுக்கு வந்தேன். மதுரைக்குப் போய் மணிவண்ணனைத் தூரத்தில் இருந்தாவது பார்த்து விட்டு வருவது என்று தீர்மானித்தேன்.

"மறுநாளே என் மாமாவுடன் மதுரைக்குக் கிளம்பினேன். அங்கு நான் ஒரு தனி வீடு எடுத்துக் கொண்டு அதில் தங்கினேன்.

"அன்று இரவே நாடகத்துக்குப் போனேன். அன்று வள்ளி திருமணம். மணிவண்ணன் வேலனாக, வேடனாக, விருத்தனாகத் தோன்றினார். மூன்று வேஷத்திலும் அவர் வள்ளியுடன் காதல் புரிந்தார். நான் அவரைப் பார்த்தேன். அவர் அழகிய முகத்தைப் பார்த்தேன். அதில் தவழ்ந்த புன் சிரிப்பைப் பார்த்தேன். அவர் என்னைப் பார்த்தார். ஆனால் அந்த முகத்தில் எந்தவிதமான மாறுதலும் ஏற்படவில்லை. அது எனக்கு என்னவோபோல் இருந்தது. இருந்தாலும் சில நாட்களுக்குப் பிறகு அவரைப் பார்த்தவுடன் எனக்கு ஏற்பட்ட திருப்தியை, அமைதியை,

ஆனந்தத்தை என்னால் விவரிக்கவே முடியாது. அந்தமாதிரி இன்பங்களை நினைத்து நினைத்துத் தான் நான் இப்போது சந்தோஷப் படுகிறேன்.

"நாடகம் முடிந்தது. நான் நேரே என் ஜாகைக்கு வந்து விட்டேன். மணிவண்ணன் தங்கி இருக்கும் இடத்துக்குப் போய் அவரைப் பார்க்க நான் விரும்பவில்லை. அவர் தனிமையில் இருக்கும்பொழுது வேறு பல பெண்மணிகளும் ஆண்மணிகளும் அவரைச் சுற்றிக் கொண்டு புகழ்வதையும் அவர்களுடனே அவரும் சிரித்துச் சிரித்துப் பேசுவதையும் என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது என்பதை உணர்ந்தேன். அத்துடன் ஏதோ ஒரு எண்ணம் அவரைப் போய்ப் பார்த்துத் தொந்தரவு கொடுக்க வேண்டாம் என்று என் இதய ஆழத்தில் ஒலித்துக் கொண்டே இருந்தது.



"தினம் தவறாமல் நாடகத்துக்குப் போய் வந்தேன். நாடக மேடையில் மனம் குளிர 'மணிவண்ணனைப் பார்த்து மகிழ்ந்தேன். ஒரு நாள் என் மாமாவுக்கு உடம்பு சௌகரியமில்லை. அன்று நான் நாடகத்துக்குப் போகவில்லை. மறுநாள் பூராவும் எனக்கு என்னவோ போலிருந்தது. மனச் சாந்திக்காக மீனாட்சி அம்மனைத் தரிசிக்கக் கோவிலுக்குப் போனேன். அங்கு மணிவண்ணன் வந்திருந்தார். அவர் என்னைப் பார்த்தவுடன் 'குமிளினி! நீங்கள் நேற்று நாடகத்துக்கு வரவில்லை போலிருக்கிறது. உங்கள் நாற்காலி காலியாக இருந்தது. உங்கள் தோழி கமலி நேற்று நாடகத்துக்கு வந்திருந்தார்கள். அவர்களிடம் உங்களைப் பற்றி விசாரித்தேன்' என்றார். என் மனம் மீண்டும் பேதலித்து விட்டது. நான் ஒருநாள் நாடகத்துக்குப் போகாததை அவர் உணர்ந்திருக்கிறாரே என்று மகிழ்ந்தேன். அவருக்கு மறுமொழி கூறுவதையும் மறந்தேன். 'சௌக்கியமாக இருக்கிறீர்களா! என்னை மறக்க மாட்டேன் என்று எழுதியிருந்தீர்கள். அதை மட்டும் மறந்து விடாதீர்கள்' என்றேன். வழக்கம் போலவே அவர் சிரித்தார்.

"அவருடனேயே அம்மனைத் தரிசித்தேன். அம்மன் சன்னிதியில் மணிவண்ணனுடன் நிற்கும் போது வாழ்நாள் முழுவதும் இப்படியே இருக்கக் கருணை புரியவேணும் என்று மீனாட்சி அம்மனைப் பிரார்த்தித்துக் கொண்டேன். கோயிலிலிருந்து அவருடனேயே நாடகக் கொட்டகைக்குப் போனேன். நாடகம் பார்த்தேன்; இல்லை, நாடகத்தில் அவரைப் பார்த்தேன். நாடகம் முடிந்ததும் அவர் வேஷம் தரித்துக் கொள்ளும் அறைக்குச் சென்றேன். எனக்கு முன்னாலேயே பல பெண்மணிகளும் நாடக ரஸிகர்களும் அவரைச் சூழ்ந்து கொண்டு அவர் நடிப்பைப் புகழ்ந்து கொண்டிருந்தனர். கமலியும் அந்தக் கூட்டத்தில் இருந்தாள். மணிவண்ணன் நடிப்பை அபாரமாகப் புகழ்ந்து கூறிக் கொண்டிருந்தாள். அவளுக்கு எப்படியோ நாடகத்தைப் பற்றிப் புகழ்ந்து கூற முடிகிறது. எனக்கோ மணிவண்ணனுக்கு எதிரில் பேசவே வரமாட்டேன் என்கிறது. இதை நினைத்து வருந்தினேன். மணிவண்ணன் கமலியின் பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்தார். 'உங்களைப் போன்ற ரஸிகர்களின் ஆதரவுதான் எனக்கு வேண்டும்' என்றார். அவளைப் பார்த்துச் சிரித்தார். என்னால் அதற்கு மேல் அங்கு நிற்க முடியவில்லை. பேசாமல் திரும்பி விட்டேன். மறுநாளே மதுரையை விட்டுப் புறப்பட்டு விட்டேன்.

"ஏதோ ஒரு உணர்ச்சியால் ஊருக்குத் திரும்பி விட்டேனே ஒழிய என்னால் வீட்டில் அமைதியுடன் இருக்க முடியவில்லை. கனவிலும் நினைவிலும், பகலிலும், இரவிலும் சதா சர்வ காலமும் மணிவண்ணனுடைய மோகன உருவம் சிரித்த வண்ணம் என் சிந்தையைக் குலைத்து வந்தது. என் படுக்கை அறைக்குச் சென்று தலையணையை மார்பில் அழுத்திக் கொண்டு விம்மி விம்மி அழுதேன். அப்படி அழுது கண்ணீர் விடுவது தான் என் இதயத்துக்கு ஆறுதலாக இருந்தது.

"சில மாதங்களுக்குப் பிறகு மணிவண்ணன் மதுரையை விட்டுத் திருச்சிக்கு வந்துவிட்டார் என்பதைத் தெரிந்து கொண்டேன். ஏதோ

வெறி பிடித்தவளைப் போல் திருச்சிக்குப் புறப்பட்டேன். அங்கும் அவரை நாடகத்தில்தான் பார்த்தேன். அவரைத் தேடிப் போகவே இல்லை. என் மனத்தை எவ்வளவோ திடப்படுத்திக் கொண்டு அவரைப் பார்க்காமல் இருந்து வந்தேன். மீண்டும் பைத்தியம் பிடித்தவள் போல் அவர் வீட்டைத் தேடிப் போனேன். அங்கு கமலியும் மணிவண்ணனுமாக எங்கேயோ வெளியில் போயிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன். அந்தப் பொல்லாத கமலி எனக்கு முன் இங்கு வந்து எப்படியோ மணிவண்ணனின் மனத்தைக் கவர்ந்து விட்டாளே என்று எண்ணி வியந்தேன். உடனே திரும்பி விட்டேன். அன்றே ஊருக்குப் புறப்பட்டு விட்டேன்.

“நான் ஊருக்கு வந்த மறு தினம் கமலியிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது. ‘அதில் தானும் மணிவண்ணனும் மிகச் சிரமப்பட்டு என் வீட்டைக் கண்டு பிடித்ததாகவும் அப்பொழுது நான் வீட்டில் இல்லையென்றும் எழுதியிருந்தாள். மணிவண்ணன் எப்படியாவது என்னை ஒருமுறை நேரில் சந்திக்க வேண்டும் என்று சொன்னதாயும் எழுதியிருந்தாள். கூடவே நாடகக் கம்பெனி தஞ்சைக்குப் போய் விட்ட விவரத்தையும் தெரிவித்திருந்தாள். அந்தக் கடிதத்தைப் படித்த பிறகு மணிவண்ணன் என் மீது உண்மையாகவே அன்பு கொண்டிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டேன். உடனே தஞ்சைக்குப் புறப்பட்டேன். நான் சென்ற அதே ரயிலில் கமலியும் தஞ்சைக்கு வந்தாள். ரயிலடியில் அவளைப் பார்த்தேன். ஆனால் அவளுடன் பேச எனக்கு மனமில்லை. மணிவண்ணனை நேரில் பார்க்க வேண்டும் என்றிருந்த என் ஆவலும் தணிந்து விட்டது. ஆகையால் தஞ்சை நகரிலும் நான் எனக்கென்று ஒரு தனி வீட்டை அமர்த்திக் கொண்டேன்.

“எல்லா ஊரையும் விடத் தஞ்சாவூரில் ஒரு புதுமையைக் கண்டேன். தஞ்சை மக்கள் மணிவண்ணனையும் அவர் நாடகக் கலையையும் அவர் சங்கீதத்தின் திறமையையும் அபாரமாகப் புகழ்ந்து அனுபவித்து வந்தார்கள். மணி வண்ணனைப் பாராட்டிப் பல விருந்துகள் நடத்தி உபசரித்தார்கள். தினம் தினம் அவருக்கு ஏராளமான பூமாலைகளும், தங்க மெடல்களும், வெள்ளிக் கோப்பைகளும் கொடுத்துக் கௌரவித்தார்கள். இந்த ஊரில்தான் அவருக்கு ‘நடிகமணி’ என்ற பட்டமும் கிடைத்தது. அவரையும் என்னையும் ஒப்பிடும்போது அவர் வானத்தில் சுடர்விட்டு ஒளிரும் நட்சத்திரமாகத் திகழ்ந்தார். நானோ சாதாரண பெண். கமலியைப் போல் அவர் நடிப்பைப் பாராட்டக் கூடத் தெரியாதவள். ஆகையால் கூட்டத்தோடு கூட்டமாக நாடக மேடையில் மணிவண்ணனைப் பார்த்து மகிழ்வதுடன் என் எண்ணம் நிறைவேறிக் கொண்டிருந்தது. தஞ்சையில் முதன் முதலாக ‘ருக்மிணி கல்யாணம்’ என்னும் நாடகம் அரங்கேற்றப்பட்டது. அதில் மணிவண்ணன் கிருஷ்ணனாகத் தோன்றினார். கோபாலனின் புல்லாங்குழலால் மயங்கிய கோகுலம் போலவே மணிவண்ணனின் அமுத கீதத்துக்குத் தஞ்சை மக்கள் தஞ்சமடைந்து விட்டனர். அவர் மேடை மீது நின்று பாடும் போது தஞ்சை ரசிகர்கள் ‘ஆகாகா!’ என்றும் “அபாரம்!” என்றும் கைகொட்டி ஆரவாரித்து மணிவண்ணனை உற்சாகப்படுத்தினர்.

“மணிவண்ணன் தஞ்சைமா நகரில் தன் திறமையைப் பூரணமாக வெளிப்படுத்தினார். அவர் தான் ஏற்றுக் கொண்ட பாத்திரத்துக்கு ஏற்ப பாவத்துடன், உணர்ச்சியுடன், உற்சாகமாக நடித்தார். தன் தேனினும் இனிய குரலால் தஞ்சை நகரையே ஆட்கொண்டு விட்டார். ஒரு இரவு கூட ஓய்வு ஒழிவு இன்றிப் பாடினார், ஆடினார். தஞ்சை நகரின் வீதிகளில் எல்லாம் மணிவண்ணனின் பாட்டுகள் பாடப்பட்டன. வண்டிக்காரன் பாடினான், வண்டியில் உட்கார்ந்திருப்பவர்கள் பாடினார்கள், வியாபாரிகள் பாடினார்கள், வியாபாரம் செய்ய வந்தவர்கள் பாடினார்கள், வீட்டில் ஆண்கள், பெண்கள் குழந்தைகள் எல்லாருமே பாடினார்கள். இப்படியாக தஞ்சைமா நகரமே நடிகமணி மணிவண்ணனின் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தது. நான் அதைப் பார்த்துக் கேட்டு அனுபவித்தேன். மெய் சிலிர்த்தேன்.

“திடீரென்று ஒருநாள் நாடகம் நடக்கவில்லை. ஒருவருக்கும் காரணம் புரியவில்லை. நான் இப்பொழுதுதான் அவர் வீட்டை நாடி ஓடினேன். அவரைச் சுற்றிலும் ஒரே கூட்டம். டாக்டர்கள் நின்று கொண்டிருந்தனர். அந்தக் காட்சியைப்



பார்த்ததும் எனக்கு அடி வயிற்றில் ஏதோ பண்ணுவது போலிருந்தது. என் நெஞ்சை ஒரேயடியாக வலித்தது. தலை சுழன்றது. என்னால் நிற்கவே முடியவில்லை. ஏதோ சத்தம் போட்டேன். அப்படியே சோர்ந்து விழுந்து விட்டேன்.

“நான் உணர்ச்சி பெற்று கண் விழித்துப் பார்த்தபோது கமலி என் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தாள். மணிவண்ணன் என் முகத்துக்கு நேரே தன் முகத்தை வைத்துக் கொண்டு குனிந்த வண்ணம் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் கவலை தோன்றியிருந்தது. நான் கண்ணைத் திறந்து அவரைப் பார்த்தபோது சூரியனைக் கண்ட தாமரை போல் அவர் முகம் மலருவதைக் கண்டேன். அடுத்த கணம் ‘உங்கள் உடம்பு இப்பொழுது எப்படி இருக்கிறது?’ என்று ஆவலோடு கேட்டார். ‘மணிவண்ணனு! உங்கள் உடம்புக்கு ஒன்றுமில்லையே! சௌகரியமாகத் தானே இருக்கிறீர்கள்?’ என்று படபடவென்று கேட்டேன். ‘ஆமாம். சௌகரியமாகத்தான் இருக்கிறேன். இன்று கூட நாடகம் நடக்கிறது.



கைதி நெ. 1:—இந்தமாதிரிச் சுற்றிலும் அடைத்த கம்பிக்குள் நான் பதினைந்து வருஷ காலம் இருந்து வந்திருக்கிறேன்!

கைதி நெ. 2:—முந்தா நாள் பேசிக் கொண்டிருந்த போது, 'நான் ஐந்து வருஷமாகச் சிறைச் சாலையில் இருக்கிறேன்' என்று சொன்னாய்? இப்பொழுது பதினைந்து வருஷம் என்கிறாயே!

கைதி நெ. 1:—அது உண்மைதான். நான் ஐந்து வருஷமாகத் தான் சிறையில் இருக்கிறேன். அதற்கு முன்பு பத்து வருஷம் ஒரு பாங்கியில் காஷியராக இருந்தேன்!

---

நேற்று இருந்தாற் போலிருந்து என் மார்பு வலிக்க ஆரம்பித்து விட்டது. என்னால் மூச்சுக் கூட விட முடியவில்லை. அதனால்தான் நாடகம் நின்று விட்டது. இப்பொழுது ஒன்றுமில்லை' என்றார். நான் சட்டென்று எழுந்து உட்கார்ந்து விட்டேன். கமலி என்னைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தாள். அது எனக்கு அவ்வளவாகப் பிடிக்காவிட்டாலும் எனக்கு உதவி புரிந்த அவளுக்கு நன்றி தெரிவித்தேன்.

"அன்று கமலியும் நானும் சேர்ந்தே நாடகம் பார்த்தோம். கமலி நாடகத்தின் ஒவ்வொரு பகுதியையும் பிரமாதமாகப் புகழ்ந்து அனுபவித்துக் கொண்டிருந்தாள். எனக்கோ அந்தக் கலை நுணுக்கம் ஒன்றுமே புலனாகவில்லை. மணிவண்ணனைப் பார்த்ததும் என்னுடைய கண்ணையும் கருத்தையும் அவரிடமே பறி கொடுத்து விட்டேன். அவருடைய இனிய குரலைக் கேட்கும்போதெல்லாம் அவர் அழகிய சரீரம் வான வெளியில் மிதப்பதைப் பார்த்து அனுபவித்தேன். அவருடைய ஆண்மை மிகுந்த நடையும், கணீரென்ற பேச்சும், கலகல வென்ற சிரிப்பும் என்னை ஆட்கொண்டு விட்டன. அதனால் கமலியைப் போல் என்னால் நாடகத்தின் நுணுக்கங்களைப் பார்த்துப் புரிந்து கொள்ள முடியவில்லை. நாடகம் முடிந்ததும் கமலி மணி வண்ணனைப் பார்ப்பதற்குப் போய் விட்டாள். நான் என்னுடைய ஜாகைக்குத் திரும்பி விட்டேன்.

"மறு நாள் மணிவண்ணன் வீட்டுக்குப் போனேன். அவர் மிகவும் களைப்புடன் காணப்பட்டார். அடிக்கடி பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார். அவர் உடம்பு சுகமில்லை என்பதை அவர் முகம் தெளிவாக எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது. ஆனால் மணிவண்ணன் அதைக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. எப்போதும் போலவே சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார். அவரைப் பிரிந்து வர மனம் இல்லாமல் அவருடனேயே பகல் பொழுதைக் கழித்தேன். கமலி மட்டும் உற்சாகமாக ஏதாவது சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் பேச்சு மணிவண்ணனுக்கும் இதமாக இருந்தது என்பதை உணர்ந்து கொண்டேன். அப்போதெல்லாம் என் நெஞ்சில் மோதிக் கொண்டிருந்த எண்ண அலைகளை யார் அறிவார்!

"அன்று நல்ல மழை. மழை காரணமாக நாடகம் நின்று விட்டது. நான் என் ஜாகைக்குத் திரும்பினேன். கமலியும் மணிவண்ணனும் வாசல் வரை வந்து என்னை வழி அனுப்பி வைத்தனர். வாசலில் அவர்கள் இருவரையும் சேர்ந்து பார்த்ததும் என் மூளை சுழன்றது. என் எதிரில் மணிவண்ணனும் கமலியும் சுழன்றனர். உலகமே சுழல ஆரம்பித்து விட்டது. எனக்கு அப்பொழுதே தஞ்சையை விட்டுப் புறப்படவேணும் என்று தோன்றி விட்டது. உடனே அன்று இரவே ஊருக்குத் திரும்பி விட்டேன். ஊருக்கு வந்தவுடன் கவலையற்றுத் தூங்கினேன். எனக்கு என்னவோ தூக்கம் தூக்கமாக வந்தது. பகலிலும் தூங்கினேன். இப்படியே மூன்று தினங்கள் சாப்பிடுவதும் தூங்குவதுமாகக் கழித்தேன்" என்றாள். சில விநாடிகள் குமிளி ஒன்றும் பேசாமல் மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

தன் இடத்தை விட்டு எழுந்திருந்து ஒரு தரம் கொட்டாவி விட்டாள். அருகிலிருந்த தர்மாஸ் பிளாஸ்கைத் திறந்து அதிலிருந்த சூடான காப்பியை இரண்டு கிளாஸ் டம்ளரில் ஊற்றினாள். ஒரு டம்ளர் காப்பியை என்னிடம் கொடுத்தாள். தான் ஒரு டம்ளர் காப்பியைக் குடித்தாள். பிறகு கதையைத் தொடர்ந்தாள்:

"மூன்றாம் நாள் காலையில் திடுக்கிடும் செய்தி ஒன்றைக் கேட்டேன். என்னால் நம்பவே முடியவில்லை. கமலி தற்கொலை செய்து கொண்டாள் என்ற பயங்கரச் செய்திதான். திடீரென்று ஏற்பட்ட இந்த அதிர்ச்சியை என்னால் தாங்க முடியவில்லை. அவள் ஏன் தற்கொலை செய்து கொண்டாள் என்ற காரணமே தெரியவில்லை. பலர் பலவிதமாகப் பேசினார்கள். இது சம்பந்தமாக மணிவண்ணனுக்கு ஏதாவது தெரிந்திருக்கும் என்று என் உள் உணர்ச்சி கூறிற்று. உடனே தஞ்சைக்குப் புறப்பட்டேன்.

"தஞ்சைக்குச் சென்றதும் நாடகம் நிறுத்தப் பட்டு விட்டது, மீண்டும் கோடை காலத்தில் தான் நாடகம் நடக்கும் என்பதைத் தெரிந்து கொண்டேன். மணிவண்ணன் தங்கியிருக்கும் வீட்டுக்குப் போனேன். மணிவண்ணன் வழக்கம் போலவே வெள்ளைப்பட்டு ஜிப்பாவை அணிந்து கொண்டு வீட்டுத் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தார். மாலை நேரத்தில், அவர் இயற்கையோடு இயற்கையாகக் காட்சி அளித்தார். அவருடைய எழில் உருவத்தைப் பார்ப்பதே எனக்குக் கஷ்டமாயிருந்தது. அவர் என்னைப் பார்த்ததும் அழுதுவிட்டேன். அவர் என் அருகில் வந்து சாந்தமாக நின்று கொண்டிருந்தார். அவர் முகம் சற்று வெளுத்துக் காணப்பட்டது. கற்பனைக் கதைகளில் வரும் கதாநாயகர்கள் போல அவர் காணப்பட்டார். 'வருத்தப்பட்டு என்ன பயன்? கமலி மீண்டும் வரப்போகிறாளா?' என்று கேட்டார். அப்பொழுது அவர் முகத்தில் எந்த விதமான உணர்ச்சியும் ஏற்படவில்லை. வார்த்தைகளும் ஜீவன் இல்லாமல் அவர் வாயிலிருந்து வந்தன. நான் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் உடல் ஏனோ தெரியவில்லை, லேசாக நடுங்கிக் கொண்டிருந்தது" என்று சொல்லி நிறுத்தினாள்.

சற்று நேரம் குமிளி மௌனமாக உட்கார்ந்திருந்தாள். பிறகு ஏதோ யோசித்துக் கூறுவது போலக் கதையைத் தொடர்ந்தாள்:

"மணிவண்ணன் மிகவும் வேதனையோடு பேச ஆரம்பித்தார். அவர் அப்படிப் பேசி நான் பார்த்ததேயில்லை. 'கமலி விஷம் அருந்தித் தற்கொலை செய்து கொண்டாள். அவளை நான் காத

விக்கவில்லை என்பதற்காக அவள் அப்படிச் செய்து விட்டாள். அதற்கு நான் என்னசெய்ய முடியும்! என்னைக் காதலிப்பவர்கள் எல்லாரையுமே என்னால் காதலிக்க முடியுமா! இல்லை கல்யாணம் செய்து கொண்டுதான் அவர்களுடன் வாழ முடியுமா! கடவுள் எனக்கு அழகைக் கொடுத்து விட்டார். என் குரல் இனிமையாக இருக்கிறது. அதற்காக என் அழகை, விரும்புகிறவர்களுக்கெல்லாம் கொடுத்துவிட முடியுமா!' என்றார். அவர் குரல் கணீரென்று ஒலித்தது.

"அந்த வார்த்தைகளைக் கேட்டு நான் நடுங்கி விட்டேன். அவர் சின்னக் குழந்தையைக்கூட நீ என்று சொல்ல மாட்டார். அப்படி இருக்க கமலியைப் பற்றிச் சொல்லும்போது 'அவள்' என்று சொல்லி விட்டார். அது அவர் மனத்தில் இருந்த வெறுப்பை நன்றாக எடுத்துக் காட்டியது. அவர் சொன்ன வார்த்தைகள் எல்லாம் உண்மையாக இருந்ததால் என்னுடைய பயம் இன்னும் அதிகரித்தது. அப்பொழுது மணி வண்ணன் மீண்டும் பேச ஆரம்பித்தார்.

"குயிலினி! என் வாழ்க்கையில் குறிக்கோள் ஒன்று உண்டு. நாடக அரங்கில் இருக்கும் ஆபாசங்கள் அனைத்தையும் ஒழித்து விடவேண்டும் என்று விரும்புகிறேன். அதனால்தான் என்பட்டம், பதவியை எல்லாம் விட்டு விட்டு, இந்த நாடகக் கலைக்காகவே என் வாழ்வை அர்ப்பணித்தேன். என் கல்லூரிப் படிப்பு, என் தந்தையார் சேர்த்து வைத்த செல்வம் எல்லாவற்றையும் இந்த நாடகக் கலைக்காகத் தியாகம் செய்தேன். நாடகங்களின் மூலம் மனித வர்க்கத்தின் உயரிய பண்புகளை உலகமறியச் செய்ய வேண்டுமென்று பாடுபட்டேன். ஓரளவு வெற்றியும் பெற்றேன். இப்பொழுது ஏராளமான செல்வமும் சேர்ந்திருக்கிறேன். பெயரும் புகழும் என்னைத் தேடி வந்து சரணடைகின்றன. அதனால் என் பாடு மிகவும் கஷ்டமாகி விட்டது. பொது மக்கள்—அதாவது உங்களைப் போன்ற பெண்மணிகள் எனக்குக் குறுக்கே நிற்கிறார்கள். என் லட்சியத்தைத் தடை செய்ய முயலுகிறார்கள். என்னைச் சதா தொந்தரவு செய்கிறார்கள். கடைசியில் தற்கொலை செய்து கொண்டு மடிகிறார்கள். கமலி எவ்வளவோ உயர்ந்த பண்பு நிறைந்தவள்தான். என்றாலும் இப்படியா தன் வாழ்வைக் குலைத்துக் கொள்ள வேண்டும்!' என்று சொன்னார். இன்னும் என்ன என்னவோ சொல்லிக் கொண்டே போனார்.

"இதைக் கேட்டதும் என் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது. நான் தேம்பித் தேம்பி அழுதேன். கமலியின் கடைசிக் கால கோர முடிவை நினைத்து அழுதேன். எனக்காக அழுதேன். என் எதிர்கால வாழ்க்கையை நினைத்து அழுதேன்! 'ஐயோ, கடவுளே! என் வாழ்வு என்ன ஆவது!' என்று கடவுளை நோக்கி அழுதேன்.

"மணிவண்ணன் வான வெளியை உற்றுப் பார்த்தவண்ணம் நின்று கொண்டிருந்தார். வெளியில் யாரோ பாடிக் கொண்டு சென்றனர். அந்தப் பாட்டைக் கேட்டு அவர் திரும்பிப் பார்த்தார். நானும் பார்த்தேன். அது மணிவண்ணன் நாடக மேடையில் பாடும் பாட்டுத்தான். மணிவண்ணன் 'சட்'டென்று வீட்டுக்குள் சென்று விட்டார். நானும் அவர் பின்னால் மௌனமாகச் சென்றேன்.

"'நீங்கள் எதையும் என்னிடம் எதிர்பார்க்காதீர்கள்!' என்றார். அப்பொழுது அவர் பார்த்த பார்வை என் இதயத்தையே ஊடுருவிப் பார்ப்பது போலிருந்தது. நான் ஒன்றும் பதில் சொல்லாமல் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு ஊருக்குத் திரும்பி விட்டேன். என்னைச் சுற்றிலும் எல்லாமே இருண்டு விட்டது போலிருந்தது.

"அதன் பிறகு பத்து வருஷ காலம் மணிவண்ணன் புகழுடன் விளங்கி வந்தார். தமிழ்நாடு பூராவும் அவர் நாடகங்கள் நடந்தன. இரண்டு ஆண்டுகள் இலங்கைத் தீவிலும் அவர் நாடகங்கள் நடந்தன. நானும் அவர் சென்ற ஊருக்கெல்லாம் அவருடன் சென்றேன். பத்து நீண்ட வருஷங்களை இப்படியே அவரைச் சுற்றி அலைவதிலேயே கழித்தேன். இதற்குள் என் மாமா இறந்து விட்டார். என் காரியங்களை எல்லாம் கவனித்துக் கொள்ள படித்த விதவை ஒருத்தியை மாதச் சம்பளத்துக்கு ஏற்படுத்திக் கொண்டேன். அவள்தான் இன்றும் என் காரியங்களை எல்லாம் மேற்பார்வை செய்து கொண்டு வருகிறாள். பத்து ஆண்டுகள் அவருடன் சோம்பேறித்தனமாக, கூட்டத்தோடு கூட்டமாக அவரைப் பார்த்துப் பார்த்துக் கழித்த காலம் என் வாழ்நாளில் மறக்க முடியாத காலம். இந்தக் காலத்தில் நம் நாட்டில் எத்தனையோ பேர் என்னைப்போலவே பணம் படைத்தவர்கள் எத்தவித லக்ஷியமும் இன்றி வாழ்வதை உணர்ந்தேன். இப்பேர்ப்பட்டவர்கள் பெரும்பாலும் தங்கள் செல்வத்தையும் வாழ்க்கையையும் இதுபோன்ற கேளிக்கைகளிலேயே செலவழித்து வருவதைத் தெரிந்து கொண்டேன். உலகத்தில் நடக்கும் எல்லாவிதமான மோசடிகளுக்கும் இப்படி லட்சியமின்றி வாழும் பணம் படைத்த கூட்டம்தான் காரணம் என்பதையும் சந்தேகமறத் தெரிந்து கொண்டேன்.

"மணிவண்ணனின் நடிப்பு வர வர மேலே மேலே உயர்ந்த வண்ணம் இருந்தது. அவர் நாடக மேடையில் பல உண்மைகளை எடுத்துச் சொல்லி மக்களின் மனத்தை மாற்றி வந்தார்; மக்களின் பண்புகளை உயர்த்தி வந்தார். ஆனால் அவர் இரவு பகல் என்று ஓய்வு ஒழிவின்றி நாடகத்துறையில் ஈடுபட்டதால் அவர் உடல் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது. நாடகத்தின் பேரால் நாடகக் கலையின்பேரால் அவரை வைத்துப் பணம் சம்பாதித்த பல பெரிய தொழில் அதிபர்கள் அவருடைய உடம்பைப்பற்றியே கவலைப் படவில்லை. அவருக்கு நாடகக் கலையில் இருக்கும்



ஸ்திரீ வக்கீல்:—தயவு செய்து உங்கள் வயசு என்னவென்று சொல்லுங்கள்!

ஸ்திரீ சாட்சி:—உங்களுக்கு எத்தனை வயசோ அதே வயசுதான் எனக்கும்!

ஊக்கத்தையும் உற்சாகத்தையும் மேலும் மேலும் வளர்த்தார்கள். அதனால் பணம் பண்ணினார்கள். மணிவண்ணனுக்குப் பெயரும் புகழும் வளர்ந்தது போலவே ஏராளமான செல்வமும் பெருகியது. இத்தனையும் இருந்து என்ன! அவர் உடல் நிலை நாளுக்கு நாள் கெட்டு வருவதைக் கவனிப்பதற்கு ஆட்கள் இல்லை. இதைப்பற்றி அவரிடம் கூறுவாரும் இல்லை. நான் அவரிடம் இதைப்பற்றிப் பேச ஆரம்பித்தாலே அவருக்குப் பிடிப்பதில்லை. அதனால் அவரிடம் அதைப் பற்றிச் சொல்ல விரும்பவில்லை. அதே சமயத்தில் நோயுடன் இருக்கும் அவரையும் என்னால் பார்க்க முடியவில்லை. ஆகவே அவர் இருக்கும் இடத்தில் இருக்க விரும்பாமல் கோடைக்கானலில் ஒரு பங்களாவை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அங்கு போய்ச் சில மாதங்கள் தங்க விரும்பினேன்.

“ஒரு நாள் மாலை. என் பங்களாவின் மேல் மாடத்தில் உட்கார்ந்திருந்தேன். கீழே பலர் பலவாறாகப் பேசிக் கொண்டு சென்றனர். ‘மணிவண்ணன் ஆறு மாதங்கள் ஓய்வு பெற்றுக் கொள்ள இங்கே வரப் போகிறாராம். அவருக்கு ஏதோ பயங்கர இருதய நோயாம்’ என்று பேசிக் கொண்டு சென்றனர். அந்த வார்த்தைகளைக் கேட்டதும் என் இருதயத்தில் யாரோ ஈட்டியால் குத்துவது போலிருந்தது. அடுத்த கணம் நான் சாய்ந்திருந்த கட்டிலிலேயே படுத்து விட்டேன். என் உடல் மிகவும் சோர்ந்து விட்டது. அப்படியே கண்ணயர்ந்து விட்டேன்.

“குயிலினி என்று யாரோ கூப்பிட்டது போல் இருந்தது. கண் விழித்துப் பார்த்தேன். என் எதிரில் சூரிய குமாரன் போல் மணிவண்ணன் நின்று கொண்டிருந்தார். அவர் அணிந்திருந்த வெண்பட்டு ஜிப்பா பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தது. அவர் தோளில் கிடந்த ஜரிகை அங்கவஸ்திரம் தகதக வென்று மினு மினுத்தது. இடை வேஷ்டியின் சிவப்புக் கரை கண்ணைப் பறித்தது. அவருடைய தங்க நிற முகமும் கருநீல விழிகளும் பள பளத்தன. சிவந்த உதடுகளில் புன்னகை தவழ்ந்து விளையாடியது. என்னை விழுங்கி விடுபவர்போல் பார்த்துக் கொண்டிருந்தார். சொல்ல முடியாத ஒரு உணர்ச்சியில் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஏதோ ஒன்று என் உடலுக்குள் புகுந்து கிளுகிளுக்கச் செய்து கொண்டிருந்தது. அவர் கையில் ஒரு வெள்ளை ரோஜா வைத்திருந்தார். அதை என் முகத்துக்கு நேரே கொண்டு வந்து காண்பித்தார். அந்தப் புஷ்பத்தின் நறுமணம் என்னை எங்கேயோ அழைத்துக் கொண்டு போவது போலிருந்தது. என் தலை சுழன்றது. அப்படியே சோர்ந்து விட்டேன். மீண்டும் உணர்வு பெறும்பொழுது மணிவண்ணனின் அழகிய மார்பில் சாய்ந்து கிடந்ததை உணர்ந்தேன். அவர் என் கையை மிருதுவாகப் பற்றி ஆவலோடு அழைத்தார்.

“நான் வாய் பேசாமல் அவருடனேயே சென்றேன். என் வலது கரத்தைப் பிடித்த வண்ணம் என்னோடு வந்து கொண்டிருந்தார். இல்லை;— அவருடன் நான் போய்க் கொண்டிருந்தேன். ஒரு அழகிய தோட்டத்துக்குள் புகுந்து சென்றோம். செடிகளும் கொடிகளும் பசுமையாக இருந்தன. சிவப்பும், வெள்ளையும், நீலமும், மஞ்சளும், ஊதாவுமாக ஆங்காங்கே விதம் விதமான மலர்கள் மலர்ந்து கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தன. மணிவண்ணன் தன் கலை உள்ளத்தை அந்த இயற்கை எழிலில் பறி கொடுத்து விட்டார். நீண்டநாள் பழகிய நண்பர்களைப் பார்ப்பதுபோல அந்த மலர்ச் செடிகளைப் பார்த்தார். சின்னக் குழந்தையைப் போலச் சில மலர்ச் செடிகளைப் பிடித்து ஆட்டினார். கல கல வென்று சிரித்தார். சிரித்துக் கொண்டே என்னைத் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தில் திருப்தியும் மகிழ்ச்சியும் விரிந்து மலர்ந்திருந்ததைப் பார்த்து மகிழ்ந்தேன்.

“அந்த மலர்ச் செடிகளுடே வளைந்து வளைந்து செல்லும் பாதையில் நடந்து சென்றோம். நாலா பக்கமும் வியப்புடன் பார்த்துக் கொண்டே சென்றோம். எங்களைப் பார்த்துச் சிரிப்பதுபோல மலர்கள் இதழ்கள் விரிந்து மலர்ந்திருந்தன. பறவைகள் கலகலவென்று சப்தித்துக்கொண்டு பறந்து சென்றன. மணிவண்ணன் என் முகத்தைப் பார்த்தார். அவர் கை விரல்கள் என் கை விரல்களுடன் இழைந்து இழைந்து விளையாடின. அப்போது நான் அடைந்த எல்லை காணாத இன்பத்தை எப்படி விவரிப்பேன்.

“அந்தச் சமயத்தில் அந்த மலர் வனத்தில் ஒரு வெளிச்சம் தோன்றியது. அமுது பொங்கித் ததும்பும் புல்லாங்குழலின் இனிய கானத்தைப் பின்னணியாகக் கொண்டு அவ்வெளிச்சம் அலை அலையாக நடனமாடத் தொடங்கியது. அடுத்த கணத்தில் அந்த வனம் பூராவும் ஏதோ ஒரு புது ஒளியுடன் திகழ்ந்தது. அந்த ஒளி அலைகளில் பலவிதமான சிந்தனைகளில் லயித்திருந்த மணிவண்ணன் என்னைக் காதலோடு பார்த்தார். மணம் நிறைந்த இளம் தென்றல் இன்பமாக வீசிக் கொண்டிருந்தது. தன்னுடைய நீண்ட கைகளால் என்னை ஆவலோடு பற்றினார். ‘குயிலினி! நான் உன்னைக் காதலிக்கிறேன்’ என்றார். என் வாழ்க்கையில் இந்த மாதிரி ஒரு நாளைக் காண, நான் எத்தனை வருஷங்கள் காத்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது என்று நினைத்தேன். அவரை மகிழ்ச்சியோடு பார்த்தேன். தூரத்தில் ஏதோ ஒரு அருவியின் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அந்தச் சத்தத்தோடு ஆறுகளின் சலசலப்புச் சத்தமும் சேர்ந்து கேட்டன. ஏதோ ஒரு அழகிய கீதத்துக்குப் பின்னணி வாத்தியம் வாசிப்பது போலிருந்தது அந்த ஓசை. குயில்கள் ‘குக்குக்கூ’ என்று கூவிக் கொண்டு பறந்தன. தெய்வீகமான ஒளி எங்கும் சூழ்ந்திருப்பதை உணர்ந்தேன். என் உள்ளம்



## துரிதமாகத் தேர்வு பெறுகிறார்—

### டாக்டர்

# ஓவல்டினுக்கு

### உத்தரவு செய்தது முதல்!

நோய்க்குப் பிறகு தேறிவரும் காலத்தில் டாக்டர்களும் நர்ஸ்களும் ஆரோக்கியம் தரும் ஓவல்டினை சிபாரிசு செய்கின்றனர்! ஓவல்டினின் சத்துக்கள் ஆரோக்கியத்திற்கு மிக முக்கியமானவை என்று அவர்களுக்குத் தெரியும். அதில் பழுத்த பார்லி மால்ட், ஆடை நிரம்பிய பசும்பால், சிறந்த கொக்கோ, பி & டி விடமின்கள் ஆகியவை சேர்ந்து இருப்பதால் அது இன்றியமையாத உணவு பானமாகும். ஓவல்டின் லேபரட்டரிகளில், விஞ்ஞானிகள், ஓவல்டினின் பரிசுத்தத்திற்கு அதன் தயாரிப்பில் ஒவ்வொரு படியிலும் பரிசோதனை நடத்துகிறார்கள். எந்த நோயாளிக்கும் அவருடைய உணவுடன் ஓவல்டினையும் கொடுத்து வந்தால் தேர்வு துரிதப்படுவது நிச்சயம்! நினைவிருக்கட்டும்— அது குடும்பத்தில் அனைவரின் ஆரோக்கியத்திற்கும் உகந்த பானம். ஓவல்டினையே கேளுங்கள்; போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள் :

**கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.**

# ஓ வ ல் டி ன்



**நோய்க்குப் பிறகு தேர்வைத் துரிதப்படுத்துகிறது**

OV. 392



ஹைதராபாத்திலுள்ள ஹிமாயத் நகரில் உடையாளூர் பால வால்மீகி ராமமூர்த்தி சர்மா அவர்களின் ராமாயண உபன்யாசம் இருபத்தேழு நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. ஜனவரி 4 உ யன்று நடந்த ராமர் பட்டாபிஷேக வைபவத்தை ஹிமாயத் நகரிலுள்ள ஆஸ்திக பக்தர்கள் விமரிசையாகக் கொண்டாடினார்கள்.

உற்சாகத்தில் துள்ளிக் கொண்டிருந்தது. எழுந்து நின்று ஆட வேண்டும் போல் தோன்றியது.

"மணிவண்ணன் திடீரென்று பாட ஆரம்பித்தார். அவர் பாட்டுக்கு ஏற்றபடி நான் என்னையும் அறியாமல் ஆட ஆரம்பித்தேன். அவர் உற்சாகமாகப் பாடினார். நான் உணர்ச்சியோடு ஆடினேன். என் ஆட்டத்தில் அவர் தன்னை மறந்து விட்டார். பாடுவதையும் நிறுத்தி விட்டு, 'குயிலி! பிரமாதமாக ஆடுகிறாய். உன் ஆட்டத்துக்கு ஈடே கிடையாது' என்றார். இன்னும் என்னவோ சொல்லிப் புகழ்ந்தார். என்னை நோக்கி வந்தார். நான் பின்னாலேயே நகர்ந்து சென்றேன். அப்படியே என்னைத் தாவிப் பிடிக்க முயன்றார். நான் அவர் கையில் அகப்படாமல் ஓடினேன். அவரும் என்னைத் தொடர்ந்து ஓடி வந்தார். சட்டென்று என்னைப் பிடித்தார். தன் அருகில் என்னை உட்கார வைத்துக் கொண்டு, 'குயிலி! என்னை ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்கிறீர்களே! என்று ஓயாமல் தொந்தரவு செய்தாயே. இதோ உன்னை ஏற்றுக் கொண்டேன். உன் பவள வாயைத் திறந்து ஏதாவது பேசேன். ஏன் இப்படி வாயடைத்து உட்கார்ந்து விட்டாய்!' என்று கேட்டார். எனக்கு வெட்கமாக இருந்தது. அவர் கை பட்டதும் என் உடல் முழுவதும் லேசாக நடுங்கியது. நான் அப்படி நாணப்பட்டதே இல்லை. தலையைக் குனிந்து கொண்டேன். அப்படியே இமை வழியாக நடிகமணி - மணிவண்ணனின் மோகன உருவத்தைப் பார்த்து மகிழ்ந்தேன்.

"மணிவண்ணன் மீண்டும் கேட்டார். 'நீ வாய் திறந்து பேச மாட்டாயா! அப்படியானால் நீ இத்தனை நாட்கள் வரை என்னைப்பற்றிச் சொல்லி வந்ததெல்லாம் வெறும் நடிப்புத்தானா? என்னை விடப் பெரிய நடிகையாக இருக்கிறாயே! நான் நாடகத்தில்தான் நடிப்பேன். நீ வாழ்விலேயே நடிக்கிறாயே!' என்றார். என் முகவாய்க்கட்டையைப் பிடித்துக் குனிந்த என் தலையை நிமிர்த்தினார். 'எங்கே சிரி பார்க்கலாம்' என்றார். நான் 'ஊஹூம்' என்று தலையை அசைத்தேன். 'அப்படியானால் நான் போகிறேன்' என்று எழுந்தார். ஒரு தரம் ஆவலோடு பார்த்தார். விடுவிடென்று நடந்தார். நான் அவரைப் பிடிப்பதற்குச் சென்றேன். அவர் ஓடினார். நானும் ஓடினேன். 'நில்லுங்கள்! நில்லுங்கள்! நான் பேசுகிறேன்; சிரிக்கிறேன்' என்று கத்தினேன். அவர் நிற்க மறுத்தார். ஐயோ! என்னத்தைச் சொல்லுவேன். புஷ்பச் செடிகளுக்குப் பின்னால் இருந்த படு பாதாளமான பள்ளத்தில் தொபுகடீர் என்று விழுந்து விட்டார். 'மணிவண்ணன் விழுந்து விட்டார். இனி பிழைக்க மாட்டார்' என்று பயங்கரமாகக் கத்தினேன். அப்படியே நான் படுத் திருந்த இடத்திலிருந்து கீழே விழுந்து விட்டேன்.

"என் சத்தத்தைக் கேட்டுக் கீழே இருந்த என் வேலைக்காரி ஓடி வந்தாள். 'என்ன அம்மா! ஏன் இப்படி அலறினீர்கள்' என்று கேட்டாள். அவள் முகம் பயத்தால் வெளுத்திருந்தது. 'ஒரு கெட்ட சொப்பனம் கண்டேன். அதுதான் அலறி விட்டேன்' என்றேன். எனக்கு அதற்குமேல் அங்கிருக்கப் பிடிக்கவில்லை. மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து என் படுக்கை அறையில் போய்ப் படுத்துக் கொண்டேன்.

"அதற்கு அடுத்த மூன்றாவது நாள் மணிவண்ணனும் கோடைக்கானலுக்கு வந்து விட்டார். வந்தவுடனேயே நான் இங்கிருப்பதைத் தெரிந்து கொண்டு என்னை அழைத்து வரும்படி ஒரு ஆளை அனுப்பி வைத்தார். நான் அவரைப் பார்க்க ஆவலோடு சென்றேன். அவர் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவண்ணம் உட்கார்ந்திருந்தார். என்னைப் பார்த்ததும் 'வரவேணும்' என்று வரவேற்றார். தன் எதிரில் இருந்த நாற்காலியில் என்னை உட்காரச் சொன்னார். அவர் உடல் நான் பார்த்த எல்லா நாட்களையும்விட அன்று சோபிதமாகக் காட்சி யளித்தது. அவர் முகத்தில் என் மனம் வேதனைப்படும் அளவுக்கு ஒரு அழகு மிளிர்ந்தது. ஆனால் அவர் மிகவும் களைத்துக் காணப்பட்டார். அமைதியாக உட்கார்ந்திருந்தார். சற்று மூச்சு வாங்கி விட்டுக் கொண்டிருந்தார். தம் வலது கையால் அடிக்கடி நெஞ்சை அமுக்கி விட்டுக் கொண்டார். அவருக்கு அபாயகரமான இருதய நோய் என்றும் அதிகம் பேசக் கூடாது என்றும், ஓய்வு அவசியம் என்றும் டாக்டர்கள் சொல்லி யிருப்பதாகக் கூறினார்கள்.

"நான் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவரைச் சூழ்ந்து நின்றவர்கள் எல்லாரும் அவருடைய நாடகத்தையும் அவர் நடிப்பையும் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். நான் ஒருத்திதான் அவர் உடலைப் பற்றிக் கவலையோடு விசாரித்தேன். அப்படி நான் விசாரித்தது அவருக்கு மிகவும் பிடித்திருந்தது என்பதை அவர் முக பாவங்கள் எடுத்துக் காட்டின. என்னை இன்னும் சற்று அருகில் வரும்படி கூறினார். இதற்குள் 'நர்ஸ்' அங்கு வந்தாள். அவரை அழைத்துக் கொண்டுபோய் ஒரு அறையில் படுக்க வைத்தாள். அவர் கேட்டுக் கொண்டதின் பேரில் என்னை மட்டும் அவர் அறையில் இருக்க அனுமதித்தாள். நாட்கள் வாரங்கள் என்று காலம் ஓடிக் கொண்டிருந்தது. அவர் நோயில் படுத்த

வுடன் அவரைச் சூழ்ந்து நின்று இத்தனை காலமும் சாப்பிட்டு வந்தவர்கள் ஒவ்வொருவராக நழுவ ஆரம்பித்தனர். கடைசியில் அவருடைய சம்பள ஆட்களும், நர்ஸும் நானும்தான் அவருக்குத் துணையாக இருந்தோம். இரவு பகல் எந்த நேரமும் அவருடனேயே இருந்தேன். அவருக்குப் பிடித்தமான பாட்டுக்களை என்னைப் பாடச் சொல்லிக் கேட்டார். நானும் உற்சாகமாகப் பாடினேன். அவருடைய நோய் வரவர குணமாகிக் கொண்டே வந்தது. இப்படியாக அவருக்குத் தொண்ணூறு நாட்கள் பணியாற்றினேன்.

"ஒரு நாள் அவர் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். என்னை முன் எப்பொழுதையும் விட மிகவும் நேசிக்க ஆரம்பித்து விட்டார். என்னிடம் சொன்னார். 'நாடகத்தில் காதல் கட்டங்களில் பிரமாதமாக நடித்துப் புகழ்பெற்ற நான் வாழ்க்கையில் உண்மையான காதலை இது வரையில் உணர்ந்து கொள்ளாமலே இருந்து விட்டேன். குயிலினி! என்னை மன்னித்து விடுங்கள்' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. நான் மிகுந்த திகைப்புடன் 'ஏன்!' என்று கேட்டேன். 'இப்பொழுதுதான் நான் என் தவறை உணர்கிறேன். உங்களை மனமாரக் காதலிக்கிறேன். உங்கள் அன்புக்கு அடிமையாகி விட்டேன். இத்தனை வருஷங்களாக உங்கள் வாழ்வை வீணாக்கி விட்டேன். அதற்காகத்தான் உங்களை மன்னிக்கும்படி கேட்கிறேன்,' என்றார். தொடர்ந்து சொன்னார்: 'என் வாழ்நாளில் நான் என் அன்பை யெல்லாம் செலுத்தி நேசித்தது நாடகக் கலையைத்தான். இப்பொழுது என் வாழ்வை விரும்பும் உங்களை நேசிக்கிறேன். உங்களைப் பிரிந்து என்னால் இருக்க முடியாது என்பதை உணருகிறேன்' என்றார். அவர் உதடுகள் துடித்தன. கண்களில் நீர் வழிந்தது

"என்னால் பேச முடியவில்லை. அவர் காலடியில் என் முகத்தை வைத்து விம்மி விம்மி அழுதேன். என் தலையை அவர் கைகள் தடவிக் கொண்டிருந்தன. எனக்கு அது எவ்வளவோ இதமாக இருந்தது. இருந்தாலும் என்னால் அழுகையை அடக்க முடியவில்லை. தாரை தாரையாக என் கண்களில் நீர் வடிய ஆரம்பித்து விட்டது. அந்த இரவுக்கு முன்பு வரை என் மனத்தில் இருந்த வெறுப்பு, வேதனை, முட்டாள்தனம், பொறாமை ஆகிய எல்லாவற்றையும் அது கழுவி விட்டது. 'இதோ பார், குயிலினி! அழாதே!' என்றார் மணிவண்ணன். அவர் ஒருமையில் என்னிடம் பேச ஆரம்பித்தார். எனக்கு அது இன்னும் எவ்வளவோ சாந்தியைக் கொடுத்தது. 'கடவுள் அருளால் நான் விரைவில் குணமாகி விடுவேன். நாம் இன்பமாக வாழலாம்!' என்றார்.

"என் வாழ்க்கையில் முதல் தடவையாக நான் காதலித்த என் அன்பர் என்னோடு ஆதரவுடன் பேசினார். அன்போடு பேசினார். காதலோடு பேசினார். என் காதலை உணர்ந்து பேசினார். அவர் அப்பொழுது என்னிடம் காட்டிய பரிவை, பாசத்தை என்னால் மறக்க முடியாது. அது என் வாழ்விலேயே மிகச் சிறந்தது.

"குறைந்து வருவது போல் காணப்பட்ட அவர் இருதய நோய் இப்போது முற்றி விட்டது! அவர் எந்த நிமிஷத்திலும் இறந்து விடலாம் என்று டாக்டர்கள் முடிவு சொல்லி விட்டார்கள். அவர் தம்முடைய ஏராளமான செல்வத்துக்கு என்னையே வாரிசாக நியமித்து ஒரு உயிலும் எழுதி விட்டார். நான் அருமையாகக் காதலித்த என் காதலர் என்னைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பும் போது அவரைப் பறிகொடுக்க விருப்பது என்றால் என் மனம் எப்படிப்பட்ட வேதனையை அடைந்திருக்கும் என்பதை யாராலும் உணர முடியாது. அதை என்னாலும் விளக்கிச் சொல்ல முடியாது" என்றாள். குயிலினி தன் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு குமுறிக் குமுறி அழுதாள். தான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்தாள். சுற்றுமுற்றும் வெறிக்கப் பார்த்தாள். முகத்தைத் துடைத்துக் கொண்டு மேலே தன் கதையைத் தொடர்ந்தாள்:

"அவர் இருதய நோயால் படுத்த படுக்கையாகி விட்டாலும் அழகும் இளமையும் மட்டும் என்றும் சாசுவதம் போல் அவரிடம் ஒட்டிக் கொண்டிருந்தன. இரவு நேரங்களில் அவர் அமைதியாகத் தூங்கும் போது அவர் அருகில் உட்கார்ந்து அவரையே பார்த்துப் பார்த்து அப்படியே மெய் மறந்து போயிருக்கிறேன். இப்படித் தீராத மன வேதனையுடன் முன்னூற்று முப்பத்து மூன்று நாட்களை அவருடன் கழித்தேன்.

"முன்னூற்று முப்பத்து நான்காவது நாள் காலையில் மணிவண்ணன் பூரண குணம் அடைந்து விட்டதாக டாக்டர்கள் சொன்னார்கள். அவரும் உற்சாகமாக இருந்தார். என்னிடம் தம் அன்பை எல்லாம் காட்டிப் பேசினார். அவருக்குச் சூடான காப்பி சாப்பிடுவதில் அலாதி பிரியம். என் கையால் காப்பி போட்டுத் தரவேண்டும் என்றார். காப்பி போட்டுக் கொடுத்தேன். அமுதம் போல் இருப்பதாகச் சொல்லிச் சாப்பிட்டார். என்னை ஒரு தரம் அவருக்குப் பிடித்தமான பாட்டைப் பாடச் சொன்னார். நானும் பாடினேன். கேட்டுக் கொண்டே இருந்தார். அவர் முகத்தில் பிரமாதமான தேஜஸ் சுடர் விட்டுப் பிரகாசித்தது. என் பாட்டை அனுபவித்துக் கொண்டே இருந்தார். சட்டென்று அவர் கண்கள் மூடின. தலை சாய்ந்து விட்டது. மணிவண்ணன் இறந்து விட்டார். நான் அவருடைய உயிரற்ற உடலின்மீது விழுந்து கதறினேன்" என்றாள். குயிலினி தான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து சட்டென்று எழுந்திருந்தாள். மணிவண்ணனின் தம்பூராவுக்கு எதிரில் போய் மண்டியிட்ட வண்ணம் உட்கார்ந்தாள். முகத்தை மூடிக்கொண்டு குலுங்கக் குலுங்க அழுதாள்.

எனக்கு அந்தச் சோகக் காட்சியைக் காண முடியவில்லை. என் கண்களிலும் கண்ணீர் வழிந்து கொண்டிருந்ததை அப்பொழுதுதான் உணர்ந்தேன். கண்களைத் துடைத்துக் கொண்டு ஜன்னல் வழியாக வெளியே பார்த்தேன். தூரத்தில் எங்கேயோ மின்னல் ஒளி ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலைக்கு வெட்டிப் பாய்ந்து ஓடியது. அதைத் தொடர்ந்து யாரோ வீறிட்டு அலறுவது போன்ற பயங்கரக் கதறலும் கேட்டது. பின்னர் அமைதி நிலவியது. அதோடு அதற்கு முடிவேற்பட்டுவிடுமென்று தோன்றவில்லை.

அதற்கு மேல் அங்கு என்னால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. குயிலினியின் சோகக் கதை என் இதயத்தைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருந்தது. அவளுக்கு எதிரில் என்னால் நிற்க முடியாது என்பதை உணர்ந்தேன். பேசாமல் எழுந்து வந்து விட்டேன். சற்று தூரம் வந்ததும் யாரோ தம்பூராவை மீட்டிக்கொண்டு பாடுவது போல் கேட்டது. அங்கேயே நின்றேன்.

குயிலினியின் வீட்டைத் திரும்பிப் பார்த்தேன். அந்த வீட்டின் மாடிமீது மணி வண்ணனும் குயிலினியும் சேர்ந்து நின்றுகொண்டு பாடுவது போலிருந்தது. அந்தத் தோற்ற மயக்கத்திலேயே என் வீட்டை நோக்கி விரைந்தேன்.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116 - 119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras




"பல வருஷங்கள் கீல் வாதத்தினால் துன்புற்று நிலைமை வர வர மோசமாகியும் வந்தது. கடைசியில் "க்ருஷனை" உபயோகித்துப் பார்க்குமாறு சொன்னார்கள். எனக்கு அது பூரண குணத்தை அளித்ததோடு வலி முதலியவைகளின்றி எனது வேலைகளைச் சரிவரச் செய்யுமாறும் செய்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கீல் வாயுவினால் அவதியுறும் ஒவ்வொருவருக்கும் "க்ருஷனை"யே எப்பொழுதும் நான் சிபார்சு செய்வேன்."—W. T. A.

சாதாரணமாகக் கீல் வாயுவானது, சிறுநீரிலுள்ள வண்டல்கள் எலும்புச் சந்திகளிலும் (பூட்டுகள்) தசைகளிலும் தங்கி விடுவதாலேயே ஏற்படுகிறது. "க்ருஷனி"ன் ஆறுவித உப்புக்கள் இத்தேக்கங்களைக் கலைத்து மூத்திர கோசங்களையும் குடல்களையும் நன்கு தூண்டி அக்கழிவு பதார்த்தங்களை வெளித்தள்ளும்படிச் செய்கிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" ஜலத்திலோ, டீயுடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்று விடு பட்டவராகச் செய்யும்.

**"க்ருஷன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் இன்றியமையாத உதவி

KSM—4

Regd. No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*

# உங்கள் வங்காளி ஜடைச்சிங்காரத்தின்



## அழகை பூர்த்திசெய்ய

## நீடித்து நிற்கும் பரிமளத்தோடுகூடின

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்

## கூந்தல் தைலம் உபயோகியுங்கள்

★ **இனம்!**

இந்த ஜடைச்சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத்தரும் துண்டுப்பிரசுரம் நெ. 5க்கு விளம்பர இலாகா, தபால்பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென் பதைகுறிப்பிடவும். மற்ற ஜடைச் சிங்காரங்களை விவரிக்கும் துண்டுப்பிரசுரங்களுக்கு வரவிருக்கும் விளம்பரங்களை கவனிக்கவும்.

இன்னுமொரு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்பு



CPH 13-X30TM